ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

# கன்னட ஹரிதாசர் பாடல்களின் தமிழ் விளக்கங்கள்

(101 பாடல்கள்)



தொகுத்தவர்:

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
haridasa.vijayam@gmail.com 8904458276
jagannathakesava.blogspot.com

**முன்னுரை**

www.dasar-songs.blogspot.com

இந்த வலைத்தளத்தில் 2011ம் ஆண்டு முதல் 2017ம் ஆண்டு வரை எழுதிய கன்னட ஹரிதாசர் பாடல்களின் விளக்கங்களின் தொகுப்புதான் இது. மாத்வர்கள் அல்லாத பல தமிழ் நண்பர்களுக்காக எழுதத் துவங்கப்பட்ட தளம், அப்படியே 2017 வரை தொடர்ந்தது. பின்னர் எதுவும் எழுதவில்லை. புரந்தரவிட்டலனின் கருணை கிடைத்தால் மறுபடி இன்னொரு சுற்று துவக்கலாம்.

ஹரிதாசர் பாடல்களில் பொதிந்துள்ள கருத்துக்களை பல தளங்களாகப் (layers) பார்க்கலாம்.

1. பொதுவான விளக்கம்
2. அதில் உள்ள குறியீடுகள்
3. சொல்ல வந்த பாகவத, புராணங்களின் reference
4. மத்வ சித்தாந்த & தத்வ ரகசியங்கள்

இது எதுவுமே எனக்குத் தெரியாததால், மிகவும் குறைந்தபட்ச அளவில், கன்னட பதங்களுக்கு தமிழில் பொருள் சொல்ல முயன்றிருக்கிறேன். இதனை படிப்பவர்கள், ஏதேனும் தவறுகள் இருந்தால் சுட்டிக் காட்டவும்.

ஹரிதாச பாடலை அதே மெட்டில் தமிழில் மொழிபெயர்ப்பது, மேலதிக விளக்கங்களைக் கொடுப்பது என்று, அந்த blogக்கிற்கு வந்த கமெண்டுகளும் அற்புத ரகங்களாக இருந்தன. ஆனால், அவற்றை இந்தப் புத்தகத்தில் சேர்க்கவில்லை. வேண்டுமெனில், அந்த blogக்கிற்கே சென்று படிக்கவும்.

ந அஹம் கர்தா ஹரி: கர்தா
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
haridasa.vijayam@gmail.com
8904458276

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா
**ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்**
380, 2a Main, 16th Cross
JP Nagar 4th Phase, Bengaluru 560078

Ph: 89044 58276. sathyatv123@gmail.com
Jagannaathakesava.blogspot.com

## இதுவரை வெளியாகியுள்ள புத்தகங்கள்

1. ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள். 352 பக்கங்கள். ரூ.200
2. 5 பரிசுத்த தேவதைகள் (பரசுக்ல த்ரயர்கள்) 290 பக். ரூ150
3. தந்தெமுத்து மோகனதாசர் (பரமப்ரிய சுப்பராய தாசர்). 270 பக்கங்கள். ரூ.150
4. ஸ்ரீசத்யவீர தீர்த்தர். 64 பக்கங்கள். ரூ.40
5. ஸ்ரீசத்யபோத தீர்த்தர். 164 பக்கங்கள். ரூ.70
6. ஸ்ரீசத்யத்யான தீர்த்தர். 216 பக்கங்கள். ரூ.110
7. மத்வகதாம்ருதம். 200 பக்கங்கள். ரூ.100
8. இந்தா குருகள காணேனோ. 48 பக்கங்கள். ரூ.30
9. ஸ்ரீவாதிராஜரின் ஸ்வப்னபத 120 பக்கங்கள் ரூ.70
10. ஸ்ரீமோகனதாசரின் கோலுஹாடு 120 பக்கங்கள் ரூ.70

## ஹரிதாச விஜயம் தமிழ் மாத இதழ்
## சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

## வங்கி விபரம்:

Sathya Narayanan, ICICI Bank - Savings account
A/c. No. 000101043177. IFSC: ICIC0000001
Cenotaph Road Branch, Chennai 18

## ஹரிகதாம்ருதசார உரை - தமிழ் மொழிபெயர்ப்பு

https://hks-bhavaprakashike.blogspot.in என்னும் இணைய தளத்தில் ‘பாவபிரகாசிகை’ என்னும் (ஹரிகதாம்ருதசாரத்தின்) கன்னட உரையின் தமிழாக்கம் - தினம் ஒரு பத்யம் - என்று வெளியிடப்பட்டு வருகிறது. ஹரிகதாம்ருத சாரத்தில் ஈடுபாடுள்ள அனைத்து தமிழ் மாத்வர்களுக்கும் இதனை தயவு செய்து தெரிவிக்கவும்.

உங்கள் வீட்டு நிகழ்ச்சிகளுக்கு வருபவர்களுக்கு, தாம்பூலத்துடன் புத்தகங்களை பரிசாகக் கொடுக்கலாம்.

ஸ்ரீஹரி சர்வோத்தமா வாயு ஜீவோத்தமா

**எமது Android app - "VEDHANIDHI"**

* மத்வ சித்தாந்தத்தைப் பற்றி அறிய உதவும் செயலி
* 35 தலைப்புகளில் 5,000 Objective type கேள்வி பதில்கள்.
* தமிழ், ஆங்கிலம் மற்றும் கன்னடத்தில் கேள்வி பதில்கள்
* Google Play Store சென்று VEDHANIDHI என்று தேடவும்.
* செயலி தரவிறக்கக் கட்டணம் ரூ.150.
* தரவிறக்கினால் உடனடி புத்தகப் பரிசு உண்டு.
* செயலியில் சரியான விடைகளைக் கொடுத்தாலும் பரிசு.
* இன்றே VEDHANIDHIஐ தரவிறக்கி, பயன்பெறவும்

**e-books (மின் புத்தகங்கள்)**

இன்னும் அச்சிற்கு வராத நமது 30 தமிழ்ப் புத்தகங்கள், மின் புத்தகங்களாக அமேசான் தளத்தில் கிடைக்கின்றன. Amazon Kindle கருவியிலோ, Kindle செயலியிலோ இவற்றை தரவிறக்கி படிக்கலாம். மேலும் தகவல்களுக்கு, தொடர்பு கொள்ளவும்.

**ஹரிதாச விஜயம் - மாத இதழ் - ஆன்லைனில் படிக்க**

* ‘Readwhere' Android appனை Download செய்யவும்
* Search Boxல் 'Haridasa Vijayam' என்று தேடவும்.
* 1 மாத இதழ் மட்டும் படிக்க: ரூ.10. 1 ஆண்டு மின்னிதழ் சந்தா : ரூ.100
* அங்கேயே ‘Subscribe' க்ளிக் செய்து, பணத்தைக் கட்டவும்.
* மாதாமாதம் Readwhere appல் ‘Shelf'ல் புது இதழ், பிரதி 25ம் தேதி வெளியாகும்.
* eBook சந்தா பணத்தை எங்களுக்கு அனுப்பக்கூடாது.

பாடல்கள் விவரங்கள்:

**என்னை உன் தாஸனாக ஏற்றுக் கொள்வாய்!**

ஒரு கும்பல் நிறைந்த கடைத்தெருவில் ஒரு சிறுமி தன் தந்தையுடன் சென்று கொண்டிருந்தாள். அப்போ அப்பா சொன்னார் - என் கையை கெட்டியா பிடிச்சிக்கோம்மா. எங்கேயாவது தொலைஞ்சிடப் போறே. அதற்கு அந்த சிறுமி சொன்னது - என்னை உங்க கையை பிடிக்க சொல்லாதீங்கப்பா. நான் விட்டாலும் விட்டுடுவேன். நீங்க என்னை பிடிச்சிக்கோங்க. நீங்க என்(னை) கைவிட மாட்டீங்கன்னு எனக்கு தெரியும். அதனால் நான் தொலைந்து போகவும் வாய்ப்பில்லை.

இதே கருத்தைத்தான் புரந்தரதாஸரும் இந்த பாடலில் சொல்கிறார். நாம் கடவுளை வணங்கி, அடிபணிந்து, அவன் தாஸனாக மாறுவதைவிட, அந்த பெருமாளே நம்மை தாஸனாக ஏற்றுக் கொண்டு விட்டால், அதைவிட பெரிய பாக்கியம் நமக்கு ஏது? அப்படி தாஸனாகி விட்டால், அந்த கிருஷ்ணனே சொன்னதுபோல், 'மாம் ஏகம் சரணம் வ்ரஜ' - தன்னை சரணடையும் தன் பக்தர்கள் அனைவரையும் அவர் காப்பாற்றுவார்.

சரி, அது என்ன பாட்டு?

தாஸன மாடிகோ என்ன
ஸ்வாமி சாசிர நாமத வேங்கடரமணா (தாஸன)

Infinity பெயர்களை கொண்ட வேங்கடரமணனே, ஸ்வாமி, என்னை உன் தாஸனாக ஏற்றுக் கொள்.

துர்புத்தி களனெல்ல பிடிஸோ
நின்ன கருணகவசவென்ன ஹரணக்க தொடிஸோ
சரணசேவே எனகெ கொடிஸோ
அபய கரபுஷ்பவ என்ன சிரதல்லி முடிஸோ (தாஸன)

கெட்ட எண்ணங்களை என் மனதிலிருந்து விடுவிப்பாய்
உன் கருணை என்னும் கவசத்தால் என் வாழ்க்கையை ரட்சிப்பாய்
உன் திருவடியை வணங்கி சேவை செய்யும் பாக்கியத்தை எனக்கு கொடுத்து
உன் அபயத்தை அளிக்கும் கரத்தை என் தலையில் வைத்து என்னை காப்பாற்று.

த்ருடபக்தி நின்னல்லி பேடி
நான் அடிகெரகுவேனய்ய அனுதின பாடி
கடெகண்ணிலே என்ன நோடி
பிடுவே கொடு நின்ன த்யானவ மனசுசி மாடி (தாஸன)

எப்போதும் மாறாதிருக்கும் திடமான பக்தியை உன்னிடத்தில் வேண்டி,
நான் உன் பாதத்தில் தினமும் விழுந்து உன் நாமத்தை பாடிக்கொடிருப்பேன்.
உன் கடைக்கண்ணால் என்னை பார்த்து
நான் என்றென்றும் உன்னை தூய மனதோடு நினைத்துக்கொண்டிருக்குமாறு அருள்புரிவாய்.

மரெஹொக்க வரகாய்வ பிரிது
என்ன மரெயதே ரஷணே மாடய்ய பொரது
துரிதகளெல்லவ தரிது
ஸ்ரீ புரந்தரவிட்டல என்னனு பொரெது (தாஸன)

காப்பாற்று என்று உன்னை வேண்டியவருக்கெல்லாம் சமயத்தில் வந்து உதவி புரிந்த வரலாறு இருக்கிறது

அதே போல் (நானும் வந்திருக்கிறேன்) என்னையும் கண்டிப்பாக காப்பாற்று
என் அனைத்து பாவங்களையும் போக்கி
உன் கருணையால் என்னை கரையேற்று ஸ்ரீ புரந்தர விட்டலா!

முதல் இரண்டு பத்திகளில் பக்தி மேலோங்க பெருமாளிடம் வேண்டுகோள் வைக்கும் தாஸர், கடைசி பத்தியில் உரிமையுடன் கேட்பது போல் பாடியிருக்கிறார். கஜேந்திர மோட்சம், த்ரௌபதிக்கு அபயம் அளித்தது இது போன்ற உதாரணங்கள் இருக்கிறதே, அதே போல் எனக்கும் அபய ஹஸ்தம் கொடுப்பாய் என்று கேட்கிறார்.

Total Surrender என்று சொல்வதைப் போல் தன்னை முழுமையாக அந்த புரந்தரவிட்டலனிடம் அர்ப்பணித்து, தன்னை ரட்சிக்குமாறு வேண்டி நிற்கும் தாஸரின் பக்தியை அப்படியே உள்வாங்கி நம்ம எம்.எஸ்.அம்மா பாடுவதை Youtubeல் பார்த்து மகிழுங்க.

**கதவைத் திறந்து தரிசனம் தருவாய் கிருஷ்ணா!**

உடுப்பியில் ஸ்ரீ கிருஷ்ணன் கோயில். காலை வேளை பூஜைகள் முடிந்து பாலகிருஷ்ணன் பக்தர்களுக்கு தரிசனம் தந்து கொண்டிருக்கிறான். ஒரு கையில் மத்து, இன்னொரு கையில் புல்லாங்குழலுடன், நாளொரு அர்ச்சனையும் பொழுதொரு அலங்காரமுமாய் இருக்கும் ச்சின்ன கிருஷ்ணன் இதழோரம் புன்னகைத்துக் கொண்டு தன்னை காண வருவோரை பார்த்தவாறு நின்றிருக்கிறான்.

அதரம் மதுரம் வதனம் மதுரம்
நயனம் மதுரம் ஹசிதம் மதுரம்
ஹ்ருதயம் மதுரம் கமனம் மதுரம்
மதுராதிபதே அகிலம் மதுரம்

மதுரா நகரின் தலைவனே, கண்ணனே, உன் உதடுகள், முகம், கண்கள், புன்னகை, இதயம், நடை ஆகிய அனைத்தும் மிக இனிமையாக இருக்கின்றது.

குழந்தைகள் என்றாலே ஆச்சரியம்தான். அதுவும் அந்த பகவானே குழந்தையாய், குறும்பு சிரிப்போடு நின்றிருக்கையில், பக்தர்களுக்கு சன்னிதியை விட்டு விலகவும் மனம் வருமோ? கோயிலுக்கு வருவோரும் திரும்பிச் செல்ல மனமில்லாமல் அவனழகில் மனதை பறி கொடுத்தவாறு நின்றிருக்கிறார்கள்.

அப்போது கோயிலுக்கு பின்புறம் ஏதோ சத்தம். யாரோ கனகதாஸராம். கிருஷ்ணனை தரிசிக்க வந்திருக்கிறாராம். ஆனால், அவர் இடையர் குலமாகையால் கோயிலுக்குள் அனுமதி மறுக்கப்பட்டு பின்பக்கமாக நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறார். பக்த கனகதாஸர் மிகவும் வருத்தமுற்று, கோயிலுக்குள் செல்ல வேண்டி கிருஷ்ணனை துதித்தவாறு உள்ளார்.

ஆமா, இந்த கனகதாஸர் என்பவர் யார்? அதை முதலில் பார்ப்போம்.

த்வைத சித்தாந்தத்தை நிறுவிய மத்வரின் வழிவந்த ஸ்ரீ வாதிராஜர் மற்றும் ஸ்ரீ வியாஸராயர் வாழ்ந்த காலத்தில் [16ம் நூற்றாண்டு] வாழ்ந்து, அந்த பரம்பொருள் மேல் பற்பல பாடல்கள் இயற்றி, பக்திமணம் பரப்பியவர்தான் ஸ்ரீ கனகதாஸர். காகிநெலெ என்னும் ஊரில் உள்ள ஆதிகேசவ பெருமாளை வழிபட்டு வந்த ஸ்ரீ கனகதாஸர் எண்ணற்ற பாடல்களையும், புத்தகங்களையும் நமக்கு அளித்துள்ளார். தன் எல்லா பாடல்களிலும் கடைசி வரியாக தன் இஷ்ட தெய்வமாகிய ‘காகிநெலெ ஆதிகேசவ’ என்னும் நாமத்தை பாடி அனைத்தையும் அந்த ஆதிகேசவனுக்கு அர்ப்பணம் செய்தவர். ஸ்ரீ புரந்தரதாஸரைப் போலவே இவரது பாடல்கள் அனைத்தும் கன்னடத்தில் அமைந்துள்ளன.

தன் குரு ஸ்ரீ வியாஸராயரின் விருப்பப்படி, கிருஷ்ணனை தரிசிக்கும் வண்ணம் உடுப்பி வந்திருக்கிறார். அப்போதுதான் மேற்சொன்ன சம்பவம்.

**

கோயிலுக்குள் அனுமதி கிடையாது, கிருஷ்ணன் வெளியே வரும்போது பார்த்துக்கொள் என்று சொன்ன அதிகாரிகளுக்கு பதில் சொல்ல முடியாமல், ஸ்ரீ கனகதாஸர் கிருஷ்ணனை வேண்டி பாட ஆரம்பிக்கிறார்.

பாகிலனு தெரது சேவெயனு கொடு ஹரியே
கூகிதரு த்வனி கேளலில்லவே நரஹரியே (பாகிலனு)

உன் திருக்கதவைத் திறந்து தரிசனம் தருவாய் ஹரியே

நான் கூப்பிடுவது உன் காதில் விழவில்லையா, நரஹரியே...

பரமபததொளகே விஷதரண தல்பதல்லி நீ
ஸ்ரீ சஹித க்ஷீரவாரிதியொளிரலு
கரிராஜ கஷ்டதல்லி ஆதிமூலாயெந்து
கரெயலாக்ஷண பந்து ஒதகிதயோ நரஹரியே (பாகிலனு)

பரமபதத்தில் (வைகுண்டத்தில்) ஆதிசேஷன் மேல்
இலக்குமியுடன் நீ அமர்ந்திருக்கையில்
கஷ்டத்தில் இருந்த கஜேந்திரன் ஆதிமூலா என்று
கூப்பிட்ட அந்த நொடியில் வந்து காப்பாற்றிய நரஹரியே (பாகிலனு)

கடுகோபதிம் களனு கட்கவனெ பிடிது
நின்னொடெய எல்லிஹனெந்து நுடியே
த்ருட பகுதியல்லி சிசுவு பிடதே நின்னனு பஜிஸே
சடகரதி ஸ்தம்பதிந்தொடதே நரஹரியே (பாகிலனு)

கடும்கோபத்தில் இருந்த மன்னன் (இரண்யகசிபு) தன் வாளை எடுத்து
உன் கடவுள் எங்கே என்று வினவ
உன் மேல் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்த அந்த சிறுவன் (பிரகலாதன்)
உன்னை வணங்கி வழிபடும்போது
அந்த தூணை உடைத்து வெளிவந்து அவனை ரட்சித்த நரஹரியே (பாகிலனு)

யமசுதன ராணிகே அக்ஷயவசனவானித்தே
சமயதல்லி அஜாமிளன பொரெதே
சமயாசமயவுண்டே பக்தவத்சல நினகே
கமலாக்ஷ காகிநெலெ ஆதிகேசவனே (பாகிலனு)

யமதர்மனின் மகனாகிய தர்மனின் மனைவிக்கு (த்ரௌபதி) முடிவில்லாத ஆடையை கொடுத்தாய்
தன் கடைசி காலத்தில் 'நாராயணா' என்றழைத்த அஜாமிளனுக்கும் அபயமளித்தாய்
உன் பக்தர்கள் கஷ்டப்படும் சமயத்திலெல்லாம் தவறாது வந்து அவர்களை
காப்பாற்றிய பக்தவத்ஸலனே
காகிநெலெ ஆதிகேசவனே (பாகிலனு)

**

இப்படி ஸ்ரீ கனகதாஸர் தன் மனமுருகி வேண்டிக் கொண்டிருக்கும்போதுதான் அந்த அதிசயம் நிகழ்ந்தது.

அந்த கண்ணனே ஆயர்குலத்தில் உதித்தவனாயிற்றே, அவன் தன் தாஸனாகிய கனகதாஸருக்கு தரிசனம் கொடுக்காமல் இருப்பானா? தன் பக்தன் உள்ளே வரமுடியாவிட்டால் என்ன, நானே அவனை நோக்கிப் போவேன் என்று கூறினான். படார்.. படார். சுவர்கள் உடைந்தன. தடைகள் நீங்கின. தாஸருக்கு அற்புதமான தரிசனத்தை வழங்கினான் கிருஷ்ணன்.

தாஸருக்கு மட்டற்ற மகிழ்ச்சி. கண்கள் புஷ்பவாரி பொழிந்தன. கிருஷ்ணா கிருஷ்ணா என்ற கோஷங்கள் விண்ணை முட்டின. தன் பக்தனின் மகிமையை உலகுக்கு உணர்த்தினான் அந்த பக்தவத்சலன்.

அந்த சுவர் இருந்த இடத்தில் 'கனகன கிடுக்கி' - கனகனின் ஜன்னல் என்று அழைக்கப்படும் ஒரு ஜன்னல் வைக்கப்பட்டு அதன் வழியே மட்டும் பக்தர்கள்

அனைவரும் தன்னை காணவேண்டுமென்று சொன்னான் கண்ணன். அதேபோல் இன்றளவும் ஒரு சிறிய ஜன்னல் மூலமாகவே கண்ணனை தரிசிக்கிறார்கள் பக்தர்கள்.

**இரட்டை அர்த்தத்தில் பேசலாமா கூடாதா?**

ஆஹா. என்னாதிது? தாஸர் பாடல்கள்னு சொல்லிட்டு - இங்கே இரட்டை அர்த்தத்தில் பேசலாமா கூடாதான்னு ஒரு இடுகை?
நாட்டாமை, தலைப்பை மாத்து!

யாருப்பா அது, பேசிட்டிருக்கம்லே. சைலன்ஸ்.. தீர்ப்பு கடைசியில். இப்ப இடுகை.

***

எல்லாத்தையும் துறக்கறதுன்னா என்ன? சமகாலத்துலே நிறைய பேர் முற்றும் துறந்தவங்களா தங்களை அறிவிச்சிக்கிட்டு செய்யுற அட்டகாசங்களை பாத்திருப்பீங்க. நோ. மூச். நாம அவங்களப் பத்தி பேசப்போறதில்லே. வழக்கம்போல் புரந்தரதாஸரைப் பத்திதான் பேசப்போறோம்.

நம்ம தாஸரும் முற்றும் துறந்தவர்தான். அவரோட சொத்து ஒரே ஒரு தம்பூரா மட்டும்தான். வீடு? நோ. வேலைக்காரர்கள்? லேது. கைகால் அமுக்க பக்தகோடிகள்? ம்ஹூம். அட இதெல்லாம் பரவாயில்லே. சாப்பாட்டுக்காக மளிகைச் சாமான்களைக்கூட சேமிச்சி வைக்காமே, தினந்தோறும் உஞ்சவிருத்தி செய்து அதில் கிடைக்கும் பொருட்களை வைத்துத்தான் அன்றைய சமையல்னா பாத்துக்கங்க.

Stop stop. உஞ்சவிருத்தின்னா என்ன?

அட இது தெரியாதா? உஞ்சவிருத்தின்னா பிக்ஷைதாங்க. ஒரே வித்தியாசம் என்னன்னா - தாஸர் வீடு வீடா பாட்டு பாடிக்கிட்டே போவாரு. எதையும் தாங்கன்னு கேக்கமாட்டாரு. இவர் பாடலைக் கேட்டு, அந்தந்த வீட்டிலிருந்து அவங்களா வந்து அரிசி, கோதுமை, ராகி எதாவது பிக்ஷை போட்டுட்டு போவாங்க. அதை எடுத்துட்டு போய் சமைச்சி சாப்பிடுவாரு.

மறுபடி Stop. மேலே சொன்னதில் அரிசி, கோதுமை தெரியும். அது என்ன ராகி?

என்னப்பா? ராகி தெரியாதா? ராகி தெரியாதா? சரி பரவாயில்லை. ராகின்னா நம்ம கேழ்வரகுதான்.

ஓகே? டவுட் க்ளியர்? மேலே போகலாமா?

விட்டலனின் பெருமை, பக்தி, வைராக்கியம், தாஸ்யம், அப்படி இப்படின்னு பல்வேறு பாவங்களோடு, ஏகப்பட்ட நீதிபோதனை பாடல்களையும் நம்ம தாஸர் பாடியுள்ளார். மக்களின் உடலையும், உள்ளத்தையும் தூய்மைப்படுத்தி, சம்சார சாகரம்ற மாயவலையிலிருந்து அவங்களை கரையேத்தணுமே? அதுவும் ஒரு சங்கீதக்காரருடைய கடமைதானே. அதை மிக மிக அருமையாக செய்த நம்ம தாஸர், மக்கள் என்னென்ன செய்யணும், எதையெல்லாம் செய்யக்கூடாது, என்னெல்லாம் செய்தால் விட்டலனின் பார்வை நம்மேல் படும் என்றெல்லாம் தன் நீதிபோதனை பாடல்கள் மூலமாக நமக்கு அருளியுள்ளார்.

அப்படிப்பட்ட நீதிபோதனை பாடல்களில் ஒன்றுதான் நாம் இன்று பார்க்கப் போவது.

பாடலுக்குப் போவதற்கு முன் ஒரு சிறிய ப்ரேக்

சென்னை திருவல்லிக்கேணியில், புரந்தரதாஸர் பஜனைக்குழு ஒன்று உள்ளது. (எந்த பதிவு போட்டாலும், அதில் திருவல்லிக்கேணி வரலேன்னா ஏதோ ஒண்ணு மிஸ்ஸு!) பல்வேறு வருடங்களாக அவர்கள் தாஸரின் தினத்தை சிறப்பாக கொண்டாடி

வருகிறார்கள். அந்நாளில், பாட்டுப் போட்டி, கச்சேரிகள், தாஸரின் படத்தை வைத்து மாடத்தெருக்களில் ஊர்வலம் இதெல்லாம் செய்து பட்டையை கிளப்புவார்கள்.

தாஸரின் தினமாகிய புஷ்ய மாத அமாவாசையன்று காலையில் அவர் படத்தை வைத்து ஒரு கோஷ்டி உஞ்சவிருத்திக்கு புறப்படும். பாடல்களை பாடிக் கொண்டே செல்லும்போது, பக்தர்கள் தங்களால் இயன்ற அரிசி, பருப்பு, வெல்லம் இதெல்லாம் கொடுப்பார்கள். அதை வைத்து அன்றைய தினம் அனைவருக்கும் சாப்பாடு. நானும் சில தடவைகள் இந்த கோஷ்டியுடன் பாடிக் கொண்டே(?) பொருட்களை சேகரித்த காலம் ஒன்றுண்டு.

அதை விடுங்க. இன்னொண்ணு முக்கியமான விஷயம் சொல்ல மறந்துட்டேன். தாஸர் தினத்தை ஒட்டி பாட்டுப் போட்டு நடைபெறும்னு சொன்னேனில்லையா? இதுதான் முக்கியான இடம். மனதை திடப்படுத்திக்கோங்க. அதில் நானும் கலந்து கொண்டு, சோப் டப்பாவில் ஆரம்பித்து, சாப்பாட்டு டப்பா, குத்து விளக்கு வரை பரிசு பெற்றிருக்கிறேன். இருங்க இருங்க.

இதுக்கே ஜெர்க் ஆனா எப்படி? இந்த இடுகையின் கடைசியில் இன்னொரு அதிர்ச்சி காத்திருக்கு.

இப்போ பாடல்.

ராகி தந்தீரா பிக்ஷக்கே ராகி தந்தீரா

ராகி கொண்டு வந்தீரா
பிக்ஷைக்கு ராகி கொண்டு வந்தீரா

யோக்யராகி போக்யராகி
பாக்யவந்தராகி நீவு (ராகி)

நல்லவராகி, (தானத்தை) கொடுப்பதில் மகிழ்ச்சியுடையவராகி
சகல சௌபாக்கியங்களையும் பெற்று நீங்கள் (ராகி)

அன்னதானவ மாடுவராகி
அன்ன சத்ரவன்னிட்டவராகி
அன்ய வார்த்தையா பிட்டவராகி
அனுதின பஜனெய மாடுவராகி (ராகி)

(தானத்தில் சிறந்த தானமாகிய) அன்ன தானத்தை செய்பவராய்,
பசியால் வாடுபவர்களுக்கு சத்திரத்தை நிறுவியவராய்,
புறம் பேசாமல் இருப்பவராய்,
தினந்தோறும் பகவானின் பெயர் சொல்லி பஜனை செய்பவராய் இருப்பீராக.. (ராகி)

மாதா பிதரனு சேவிதராகி
பாதக கார்யவ பிட்டவராகி
க்யாதியல்லி மிகிலாவதராகி
நீதி மார்கதல்லி க்யாதராகி (ராகி)

தந்தை தாயை மதித்து அவர்களை வழிபடுபவராய்,
யாருக்கும் கெடுதல் செய்யும் காரியங்களை விட்டவராய்,
நீதி நேர்மைக்கு பயந்து அதன்படி நடப்பவராக இருந்து.. (ராகி)

ஸ்ரீ ரமணன சதா ஸ்மரிசுவராகி
குருவிகே பாகோரந்தவராகி

கரெ கரெ சம்சாரா நீகுவராகி
புரந்தர விட்டலன சேவிதராகி (ராகி)

இலக்குமியின் பதியான ரமணனை எப்பொழுதும் நினைப்பவராய்,
(உபதேசம் செய்யும்) குருவின் சொற்படி நடப்பவராய்,
(உங்களுக்கு அமைந்துள்ள) குடும்ப வாழ்க்கையை பொறுப்புடன் நடத்தும் ஒரு இல்லத்தரசனாய்,
அந்த புரந்தர விட்டலனை வணங்குபவாய் இருந்து (ராகி)

***

இந்த பாடலில் 'ராகி' என்ற அந்த ஒரு வார்த்தையை வைத்து - பிட்ஷையும் கேட்ட அதே சமயத்தில், தாஸர் மக்களுக்கு அறிவுரையும் கூறியுள்ளதை கவனியுங்கள்.

யோக்யராகி போக்யராகி - இதில்தான் மேலே சொன்ன அந்த 'இரட்டை அர்த்தம்'. அப்பாடா, தலைப்புக்கு வந்தாச்சு.

சரி என்ன அது இரட்டை அர்த்தம்?
வெயிட். அதையும் பாத்துடுவோம்.

யோக்யராகி -

அ. யோக்யர் + ஆகி = (நீங்க) நல்லவரா இருங்கன்னு சொல்ற அதே நேரத்துலே;

ஆ. யோக்ய + ராகி = நல்ல ராகியை பிட்ஷைக்கு போடுங்கன்னு சொல்ற மாதிரியும் இருக்கு.

அதே மாதிரி -

போக்யராகி -

அ. போக்யர் + ஆகி = (நீங்க) தானத்தை கொடுப்பதில் மகிழ்ச்சியுடைவராக இருங்கன்னு சொல்ற அதே நேரத்துலே;
ஆ. போக்ய + ராகி = (சாப்பிட்டா) மகிழ்ச்சிகொடுக்ககூடிய ராகி பிக்ஷைக்கு போடுங்கன்னு சொல்ற மாதிரியும் இருக்கு.

இதில் இரண்டாவது அர்த்தங்களை பாருங்க. நல்ல ராகி கேக்குற மாதிரி - மக்களுக்கு நல்ல அறிவுரை வழங்கறாரு. நாம முதல் அர்த்தத்தையே எடுத்துக்கிட்டு 'கரையேற' முயற்சி பண்ணுவோம்.

சரியா?

பிகு: இப்போ (முதல்லே சொல்லாமல் விட்ட) தீர்ப்பு.

இரட்டை அர்த்தத்தில் பேசலாம்.
பேசலாம். பேசலாம்.

ஆனா, ரெண்டு அர்த்தமும்
நல்ல அர்த்தமா இருக்கணும்.

இதுதான் தீர்ப்பு.

ஸ்ரீ புரந்தரதாஸர் (AD 1485 - 1564)

பாடல்கள் மூலம் பக்தியை பரப்புவதில் தமிழகத்தில் ஆழ்வார்களைப் போல், கர்நாடகத்தில் ஹரிதாஸர்களின் பங்கு மகத்தானது. கடவுளின் பக்தி, மகிமை, அருமை பெருமைகள், இல்லத்தரசனின் கடமைகள், வாழ்க்கை நெறிமுறைகள் இப்படி பலதரப்பட்ட தலைப்புகளில் பலப்பல பாடல்களை பாடியுள்ளனர் ஹரிதாஸர்கள். அனைத்தும் இனிய, எளிய கன்னடத்தில்.

இந்த ஹரிதாஸர்களில் முதன்மையானவர் - நாரதரின் மறுஅவதாரமாக கருதப்படும் ஸ்ரீ புரந்தரதாஸர் ஆவார். தாஸரின் புண்ணிய தினமான நாளை (2/2/2011 ), அன்னாரின் வாழ்க்கை வரலாற்றையும் அவரது சிறப்பினையும் தெரிந்து கொள்வோம்.

கர்நாடக சங்கீதத்தின் பிதாமகர் என்று அழைக்கப்படுகிறார் தாஸர்.

(கர்நாடக) இசையின் மூலம் பாடல்கள் இயற்றி, கடவுள் வழிபாடு செய்யலாம் எனும் முறை தாஸரின் காலத்திலேயே துவங்கியது.

**

ஸ்ரீனிவாசர் ஒரு வட்டிக்கடை வைத்து பிழைப்பு நடத்திக் கொண்டிருந்தார். சாப்பிட்ட கையால் காக்கா என்ன, குருவி கூட ஓட்ட மாட்டார். வாலிப வயசில் எல்லாருக்கும் இருக்கும் அதே மனோபாவம் - கடவுளாவது ஒண்ணாவது, நம்ம தொழில், குடும்பம் எல்லாம் நம்ம சொந்த சரக்கில் நடப்பது. கடவுளை ரிடையர் ஆனப்புறம் பாத்துக்கலாம். இப்போ என்ன அவசரம். இதே மாதிரிதான் போயிட்டிருந்தது.

ஆனா அவர் வீட்டிலே இவருக்கு எதிர். புருஷன் பொண்டாட்டின்னாலே எதிர்-புதிர்தானேன்னு கேட்கப்படாது. திருமதி. சரஸ்வதிபாய், கடவுள் பக்தி கொண்டவர். பாவச் செயல்கள் செய்வதற்கு மிகவும் பயந்தவர். மிகவும் கருணை மனம் கொண்டவர். வந்தாருக்கு (கணவனுக்குத் தெரியாமல்) அள்ளிக் கொடுப்பவர். காக்கா ஓட்டணும்னாக்கூட கையில் எதையாவது எடுத்துக்கொண்டே ஓட்டுவார்னா பாத்துக்கங்க.

இப்படியே போயிட்டிருக்கும்போது, அந்த D-dayயும் வந்தது.

நம்ம ஸ்ரீனிவாசர் கடைக்கு போயிருக்காரு. அம்மா வீட்டில் வழக்கம்போல் பூஜை, புனஸ்காரம். அப்போ வெளியில் ஒருத்தர் - அம்மா, அம்மான்னு கூப்பிடுறாரு. என்னன்னு கேட்டா - என் பையனுக்கு உபநயனம் பண்ணனும். தயவு செய்து ஏதாவது பொருளுதவி பண்ணுங்கன்னு வேண்டி நிக்கறாரு. இவங்களுக்குத்தான் உதவின்னு யாராவது கேக்கமாட்டாங்களானு இருக்கே. ஆனா நம்மாளு பீரோ, பெட்டி எல்லாத்தையும் பூட்டிக்கிட்டு போயிட்டாரு. என்ன பண்றதுன்னு தெரியலியேன்னு யோசிச்சிட்டிருக்கறப்போ, ஒரு பளிச். பளிச்சுன்னு இருக்கிற தன் மூக்குத்தியை எடுத்து கொடுத்துட்டாங்க.

வந்தவரும் ரொம்ப நன்றிம்மான்னு சொல்லி போறாரு. பணம் கொடுத்தாலாவது எதாவது செலவு செய்யலாம், மூக்குத்தியை வெச்சிக்கிட்டு என்ன பண்றது? அடகு இல்லேன்னா வித்துறணும்னு ஒரு கடைக்குப் போறாரு. இதுக்குள்ளே உங்களுக்கே தெரிஞ்சிருக்கும். ஆமா. நம்ம ஸ்ரீனிவாசர் கடைக்கே போறாரு.

பொதுவா ஆம்பிளைங்களுக்கு வீட்டுக்கு வாங்கிக் கொடுத்த ஆடை, அணிகலன்கள் எதுவும் நினைவில் இருக்காது. இது எப்போ வாங்கினோம், அது எங்கே எடுத்தோம்னு கேட்டு 'திட்டு' வாங்கறது வழக்கம். ஆனா, அன்னிக்கு ஏதோ ஒரு அதிசயம் நடக்கப்போறதால், ஸ்ரீனிவாசருக்கு - ஆஹா, இது நம்ம வீட்டுதாச்சே..

இந்தாளுகிட்டே எப்படி வந்துச்சு. பாத்தா இதை வாங்கற அளவுக்கு வசதி இருக்கறமாதிரியும் தெரியலியேன்னு யோசிக்கிறாரு.

அவரை ஒரு நிமிஷம் உக்காருங்கன்னு சொல்லிட்டு, வீட்டுக்கு ஓடறாரு. சரஸ்வதி, சரஸ்வதின்னு கூப்பிடுறாரு. சாயங்காலம் வரக்கூடிய பிராமணன், திடுதிப்புன்னு வந்து நிக்குறாரே, என்னவா இருக்கும்னு நினைச்சிக்கிட்டே வந்த அம்மா, என்னங்க, என்ன விஷயம்னு கேக்கறாங்க. இவரோ அவங்க மூக்கையே பாக்கறாரு. உன் மூக்குத்தி எங்கே?

ம். அது வந்து. அது வந்துங்க. சுத்தம் பண்ணலாம்னு கழட்டி வெச்சேன். திரும்பி மாட்டிக்க மறந்துட்டேன். மூக்குத்தி உள்ளேதான் இருக்கு.

சரி. போய் எடுத்துட்டு வா.

அவ்வளவுதான். சரஸ்வதி அம்மாவுக்கு உடம்பெல்லாம் ஆடிப் போச்சு. இவ்வளவு நாளா கணவன்கிட்டே இப்படியொரு பொய் சொன்னதேயில்லையே. இன்னிக்கு வசமா மாட்டிக்கிட்டோமே. அந்த மூக்குத்தியை நான் தானம் பண்ணிட்டேன்னு தெரிஞ்சா பயங்கரமா சத்தம் போடுவாரேன்னு பயந்துட்டே உள்ளே போறாங்க. உள்ளேதான் மூக்குத்தி இல்லையே? வேறென்ன பண்றது. கடவுள்கிட்டே வேண்டிக்க போறாங்க. கடவுளே, என்னை மன்னிச்சிடு. நான் பொய் சொல்லிட்டேன். இப்போ அவர்கிட்டே போய் உண்மையை சொல்லிட போறேன். அவர் எனக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் ஏத்துக்கறேன்னு சொல்லி பிரார்த்தனை பண்ணும்போது - அந்த பரந்தாமன், பக்தர்கள் கஷ்டத்தை போக்கும் கருணைக்கடல், சும்மா இருப்பானா? முன்னால் இருக்கும் பாத்திரத்தில் ஒரு ‘டக்’. பாத்தா அதே மூக்குத்தி. எடுத்துக்கிட்டு வந்து காட்டறாங்க ஸ்ரீனிவாசர்கிட்டே. அவர் சந்தேகத்தோடு கேட்க, அப்போ எல்லா உண்மையையும் சொல்லிடறாங்க சரஸ்வதியம்மா.

வந்தது அந்த நாராயணன்தான்னு தெரிஞ்சுது. அவ்வளவுதான். ஸ்ரீனிவாசருக்கு கண்ணீர் அப்படியே கொட்டறது. ஸ்ரீனிவாசா, வேங்கடரமணா, தப்பு பண்ணிட்டேன். தப்பு பண்ணிட்டேன். இவ்வளவு வருஷமா வாழ்க்கையை வீணாக்கிட்டேன். இனிமே எனக்கு எல்லாமே நீதான். வேறே எதுவும் வேணாம்னு சொல்லிட்டு - இருந்த எல்லா செல்வங்களையும் தானம் செய்துடறார். இனிமே பகவத் சேவைதான் வாழ்க்கைன்னு தீர்மானம் பண்ணி, அதுக்கு உடனடியா ஒரு தகுந்த குருவை பிடிக்க, யாரைப் போய் பாக்கறதுன்னு யோசிக்கறப்போ, ஸ்ரீ வியாசராயரை போய் பார்க்கலாம்னு முடிவு பண்ணி போறாங்க.

விஜயநகர சாம்ராஜ்யத்தில் கிருஷ்ணதேவ ராயரின் சபையில் ராஜகுருவாக இருந்த ஸ்ரீ வியாசராயர், ஸ்ரீனிவாசருக்கு ஆசியளித்து தன் சிஷ்யராக ஏற்றுக் கொண்டார். அவருக்கு புரந்தரதாஸர் என்று பெயரிட்டு, மக்களுக்கு ஞான, பக்தி, வைராக்கியத்திற்கான பாடல்களை கன்னடத்தில் அனைவருக்கும் புரியுமாறு இயற்றுமாறு கேட்டுக் கொண்டார்.

புரந்தரதாஸரும் குருவின் வேண்டுகோளுக்கிணங்க, பல பாடல்களை (தேவரநாமாக்களை) இயற்ற ஆரம்பித்தார். தன் எல்லா பாடல்களிலும் இறுதி வரியில் ‘புரந்தர விட்டலா’ என்று தன் கடவுளை அழைத்து அவருக்கே அந்த பாடல்களை அர்ப்பணித்தார். மனித வாழ்க்கையின் மூன்று தூண்களான ஞானம் (அறிவு), பக்தி, வைராக்கியத்தை தன் அனைத்து பாடல்களிலும் வலியுறுத்தி பாடியுள்ள தாஸர், தன் வாழ்நாள் முழுக்க எண்ணத்திலும், செயலிலும் எளிமையையும் தூய்மையையும் கடைபிடித்து மற்றவர்களுக்கும் அதையே அறிவுறுத்தியுள்ளார்.

கர்நாடக இசையில் ஆரம்ப பாடமாக சொல்லித் தரப்படும் ‘மாயாமாயவகௌள’ ராகத்தை வடிவமைத்தவர்.

கர்நாடக சங்கீதத்தை எப்படி சொல்லிக் கொடுக்க வேண்டுமென்பதை நெறிமுறைப்படுத்தியவர் நம்ம தாஸர். அந்த நெறிமுறையே இன்றளவும் பயன்படுத்தப் படுகிறது.

முதலில் பண்டரிபுரத்திலும், பின்னர் ஹம்பியிலும் வாழ்ந்து தன் காலம் முழுவதையும் பாடல்களை பாடிய தாஸர், தன் வாழ்நாளில் லட்சக்கணக்கில் பாடல்கள் இயற்றியுள்ளார் என்று சொல்லப்பட்ட போதிலும், நமக்கு கிடைத்துள்ள்வை ஆயிரக்கணக்கிலேயே ஆகும்.

இந்த நன்னாளில் தாஸரின் பாடல்களை பாடி, கேட்டு அந்த புரந்தர விட்டலனின் அருளுக்கு பாத்திரமாவோம்.

ஜெய் ஜெய் விட்டலா. பாண்டுரங்க விட்டலா..
ஜெய் ஜெய் விட்டலா. புரந்தர விட்டலா..

’லம்போதர லகுமிகர’ - இந்த பாட்டை மறக்க முடியுமா யாராலும்?. இதை இயற்றிவர் நம்ம தாஸர்தான்.

புரந்தரரின் ஆக்கங்கள் ‘புரந்தர உபநிஷத்’ என்று தொகுப்பட்டது.

**என்ன தவம் செய்தனை யசோதா..**

உலகத்தையே கட்டிக் காக்கும் அந்த பரம்பொருளின் தாய்க்கு ஏதாவது கவலை இருக்குமா?
குழந்தை கீழே விழுந்தால் அடிபடுமே என்று கவலைப்படுவாரா?
மண்ணைத் தின்று விட்டால் பதைபதைத்துப் போவாரா?

ஆம். கண்டிப்பாக.

‘டெல்லிக்கே ராஜான்னாலும், தன் தாய்க்கு அவர் சேய்தானே!!!’

அவர்தான் யசோதா.

உலகத்தையே தன் வாயில் காட்டினாலும்,
ஒரே சமயத்தில் பல வீட்டிலிருந்து வெண்ணைய் தின்று, மாட்டி கொண்டுவரப்பட்டாலும், இன்னும் பல்வேறு அதிசயங்களை நிகழ்த்திக் காட்டினாலும்

ம்ஹூம். No.

அவன் என் மகன்.

இன்னும் ச்சின்னப் பையன்தான்
அவனுக்கு ஒண்ணும்(!) தெரியாது.
என்று சொல்வாராம்.

அப்பேர்ப்பட்ட குழந்தையை வளர்க்கும், கட்டிப் போடும், அந்த குழந்தையோடு விளையாடும் பாக்கியம் பெற்ற யசோதாவைத்தான் பாபநாசம் சிவன் பாடினார்.. என்ன தவம் செய்தனை யசோதா.

அதே போல்,

யசோதாவைப் பார்த்து பாடும்படி,
யசோதாவே பாடும்படி

பல்வேறு பாடல்களைப் பாடியுள்ளார் நம்ம புரந்தரதாஸர்.

தன் அனைத்துப் பாடல்களைப் போலவே, இந்த பாடல்களிலும் கண்ணனின் புகழ், அவனிடத்தில் தான் கொண்ட பக்தி அனைத்தையும் காட்டியுள்ளார் தாஸர்.

அப்படிப்பட்ட பாடலில் ஒன்று - மிகவும் பிரபலமான, யூட்யூபில் தேடினால், நூற்றுக்கணக்கான வீடியோக்கள் வரும் - ஜகதோத்தாரனாவை இன்று பார்ப்போம்.

ஜகதோத்தாரனா அடிசிதளே யசோதே

அகிலத்தையே உத்தாரணம் (ரட்சிக்கும்) பரமாத்மனோடு
யசோதை விளையாடினாள்

ஜகதோத்தாரனா மகனெந்து திளியுதா
சுகுணாந்த ரங்கன அடிசிதளே யசோதே (ஜக)

அகில உலகத்தையே ரட்சிக்கும் கிருஷ்ணனை
(கடவுள் என்று நினைக்காமல்) தன் மகன் என்று மட்டுமே நினைத்து

அனைத்து நற்குணங்களை கொண்டவனாகிய அந்த ரங்கனோடு
ய்சோதை விளையாடினாள்

நிகமகே சிலுகதா அகணித மஹிமன
மகுகள மாணிக்யன அடிசிதளே யசோதே (ஜக)

வேதங்களுக்கு அப்பாற்பட்டவனும்
எண்ணிக்கையில்லா மகிமையுடையவனுமாகிய
குழந்தைகளில் மாணிக்கமாகிய
கிருஷ்ணனுடன் யசோதை விளையாடினாள்

அனோரணீயன மஹதோ மஹீயன
அப்ரமேயன அடிசிதளே யசோதே (ஜக)

அணுவைவிட சிறியவனாக இருப்பவனும்
பெரியதைவிட பெரியவனாகிய இருப்பவனும்
அளக்கமுடியாதவனுமாகிய கிருஷ்ணனுடன்
யசோதை விளையாடினாள்

பரம புருஷன பரவாசுதேவன
புரந்தர விட்டலன அடிசிதளே யசோதே (ஜக)

உத்தம புருஷனான இருப்பவனும்
சட்ட திட்டங்களுக்கு அப்பாற்பட்டவனுமாகிய
புரந்தர விட்டலனுமாகிய கிருஷ்ணனுடன்
யசோதை விளையாடினாள்

**இன்னும் தயை வரவில்லையா கிருஷ்ணா?**

கடவுளே, நானும் எவ்வளவு நாளா கேக்கறேன், இந்த வருஷம் எனக்கு கண்டிப்பா 30% ஊதிய உயர்வு வேணும். கூடவே பக்கத்து வீட்டில் இருப்பது போல் ஒரு எல்சிடி டிவி வேணும்.

கடவுள்கிட்டே இப்படி யாரு வேண்டிப்பா?

பெரும்பாலான மக்கள் இப்படித்தான் வேண்டிப்பாங்க. கரெக்டா?

நம்ம தாஸர்களும் இப்படித்தான்.

கடவுள்கிட்டே எதையாவது கேட்டுக்கிட்டே இருப்பாங்க.

அப்படியா?

நிஜமாவா?

வெயிட்..

கேப்பாங்கன்னு சொன்னேன். என்ன கேப்பாங்கன்னு சொன்னேனா?

அவங்க கேட்பதெல்லாம் நாராயணனின் கடைக்கண் பார்வை மட்டுமே.

அவன் தயை இருந்தால் போதும் -வேறு எதுவும் வேண்டாம் என்றே வேண்டுகிறார்கள்.

நீ தய ராதா
காதனே வாரெவரு - கல்யாண ராமா நீ தய ராதா

இந்த பாட்டை கேட்டிருப்பீங்க (யேசுதாஸ் குரல் காதுலே கேக்குதா. ஆமா. சிந்துபைரவி படத்தில் வரும்!)

தியாகராஜர், ராமனிடம் - உன் தயை இல்லையான்னு கேட்கிறார்.

இதே போல் நம்ம தாஸரும் அந்த கிருஷ்ணனிடம் அவன் தயை வேண்டி நிறைய பாடல்கள் பாடியிருக்காரு.

ஹோல்ட் ஆன்.

இப்படி இவங்க ஏன் ‘தயை’ கேக்குறாங்க?

எப்போதும் அவன் நினைவிலேயே இருக்கும், அவன் புகழையே பாடிக் கொண்டிருக்கும், அவனுக்கு பூஜை செய்துகொண்டிருக்கும் தாஸர்கள், வேறென்ன கேட்கப் போறாங்க?

இன்னொரு பிறவி வேண்டாம்.

அப்படியே இன்னொரு பிறவி கொடுத்தாலும், அந்த பிறவியிலும் இறைவனை நினைத்துக் கொண்டிருக்கும்படியான வரம்தான் அவங்க கேட்பது.

சரியா?

இன்னொரு முக்கியமான விஷயம், இதெல்லாம் நமக்காகவும்தான் பாடியிருக்காங்க.

அதனால், ஒழுங்கு மரியாதையா நாமும் இந்த பாடல்களின் பொருளை உணர்ந்து, பாடி, கடவுளை தொழுது, அவன் தயையை பெறுவோமாக.

இப்போ பாட்டு.

**

இன்னு தய பாரதே தாஸன மேலே
பன்னக சயன பரமபுருஷ ஹரியே (இன்னு)

இந்த தாஸனின் மேல் இன்னும் தயை வரவில்லையோ?
ஆதிசேஷனின் மேல் படுத்திருக்கும் அனைவரிலும் உத்தமனான ஹரியே (இன்னு)

நானா தேசகளல்லி நானா காலகளல்லி
நானா யோனிகளல்லி நெளிது ஹுட்டி
நானு நன்னது எம்ப நரகதொளகே பித்து
நீனே கதியெந்து நம்பித தாஸன மேலே (இன்னு)

வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு காலங்களில்
வெவ்வேறு கர்ப்பத்தில் பிறந்து
நான், எனது என்று இருமாப்பில் (நரகத்தில்) வீழ்ந்து (பிறகு புத்தி தெளிந்து, இப்போ)
நீயே கதி என்று வந்திருக்கும் இந்த தாஸனின் மேல் (இன்னு)

மனோ வாக் காயதிந்த மாடித கர்மகளெல்ல
தானவாந்தக நின்ன தான விட்டே
ஏனு மாடிதரேனு ப்ராண நின்னது ஸ்வாமி
ஸ்ரீநாத புரந்தர தாஸன மேலே (இன்னு)

மனம், சொல், உடல் ஆகிய மூன்றினாலும் நான் செய்த அனைத்து செயல்களையும்
தானவர்களை அழித்த உனக்கு அர்ப்பணம் செய்தேன்
நான் என்னதான் செய்தாலும், ஸ்வாமி, என் வாழ்க்கை (பிறவி) உன்னுடையதே
ஸ்ரீயின் (இலக்குமியின்) நாதனாகிய புரந்தரவிட்டலனே, இன்னும் இந்த தாஸனின் மேல் (இன்னு)

**<u>இன்று ஸ்ரீ மத்வநவமி : 2/12/2011</u>**

முன்குறிப்பு: ஸ்ரீ மத்வர் பற்றி தமிழ் விக்கியில் மிகத் தெளிவாக சொல்லியிருப்பதால், நான் சக்கரத்தை மறுபடி கண்டுபிடிக்காமல், அங்கிருந்தே எடுத்துப் போட்டிருக்கிறேன். நன்றி விக்கி.

மத்வர் (இயற்பெயர்: வாசுதேவர்) கர்நாடக மாகாணத்தில் உடுப்பிக்கருகில் உள்ள பாஜகா என்ற கிராமத்தில் பிறந்தார். 25வது வயதிலேயே உலக வாழ்க்கையைத் துறந்து துறவியானார். துறவியானதும் அவருக்குக் கொடுக்கப்பட்ட பெயர் பூர்ணப் பிரஞ்ஞர். மிகவும் படித்த அறிவாளி, துறவி என்பது மட்டும் அல்ல, அவர் தேகபலத்திலும், மந்திர சக்தியிலும், சூட்சுமச் செய்கைகளிலும் கைதேர்ந்தவர். அநுமன், பீமன் இவர்களுக்குப் பிறகு வாயு தேவனின் அவதாரமாகவே உதித்தவராகக் கருதப்பட்டார். அதனால் அவருக்கு முக்கியப் பிராணன் என்றொரு பெயரும் உண்டு.

அவரது 37 நூல்களில் தன்னை ஆனந்ததீர்த்தர் என்றே அறிமுகப்படுத்திக் கொள்கிறார். இப்பெயரும் அவருடைய மிகையான அறிவைக் கருத்தில் கொண்டு அவருடைய குருவால் அவருக்கு இடப்பட்ட பெயரே.

'துவைதம்' என்றால் இரண்டு. முக்கியமாக பிரம்மத்தையும் ஆன்மாவையும் இரண்டு வேறு வேறு தத்துவங்களாகப் பிரித்துச் சொல்வதால் மத்வருடைய தத்துவக் கூற்றுகளுக்கு இந்தப் பெயர் நிலைத்தது. உண்மையில் இந்த வேதாந்தத்தில் இன்னும் சில தத்துவங்கள் வேறுபடுத்திச் சொல்லப்படுகின்றன. அதன்படி ஐந்து வேற்றுமைகள் நிரந்தரமானவை. அவை:

• பிரம்மமும் ஆன்மாக்களும்;
• ஆன்மாவும் ஆன்மாவும்;
• பிரம்மமும் உலகும்;
• ஆன்மாவும் உலகும்; மற்றும்
• உலகிலுள்ள பொருளும் பொருளும்

மத்வாச்சாரியாரின் வாழ்க்கையில் நடந்த (அல்லது, அவர் நடத்திய) பல அற்புதங்களைப் பற்றிய விவரங்கள் அவர் காலத்திலேயே வாழ்ந்த நாராயண பண்டிதர் என்பவர் இயற்றிய மத்வவிஜயம் என்ற நூலில் உள்ளன. அவையெல்லாவற்றிலும் முக்கியமான ஒன்று சரித்திரப்பிரசித்தி பெற்றது.

ஒரு சமயம் உடுப்பிக்கருகாமையில் கடலில் ஒரு கப்பல் சென்று கொண்டிருந்தபோது புயலில் ஆபத்துக்குள்ளாகியது. கடற்கரையில் நின்று கொண்டிருந்த மத்வர் தன் மேல் துணியை காற்றில் வீசிக்காட்டி என்னமோ செய்தார். கப்பல் ஆபத்திலிருந்து தப்பி கரை சேர்ந்தது. கப்பலின் தலைவர் அவரை வணங்கி, அவரை தன்னிடமிருந்து ஒரு பரிசு வாங்கிக்கொள்ளும்படி
வற்புறுத்தினார். கப்பலின் அடித்தளத்தில் கோபி சந்தனத்தில் ஒரு பாறை இருப்பதாகவும், அது தனக்கு வேண்டும் என்றும் கூறினார் மத்வர். இவ்விதம் ஓர் அற்பமான கற்பாறையைக் கேட்கிறாரே என்று வியந்தவாறே கப்பல் தலைவர் அதை எடுத்துக் கொடுத்தார். அதனுள் தன் கையை விட்டு சாலிக்கிராமத்தினால் ஆன ஒரு அழகிய பாலகிருஷ்ண விக்கிரகத்தை வெளியே எடுத்தார் மத்வர். தானே அந்தப் பாரமான விக்கிரகத்தைத் தூக்கிக்கொண்டு சென்றார். அதுதான் இன்றும் உடுப்பி கோயிலில் மூலவிக்கிரகமாக உள்ளது.

மத்வருடைய மறைவும் விந்தைக்குரியதே. அவர் புவியில் அவதரித்த காரியங்கள் செவ்வனே முடிந்ததும் வானிலிருந்து மலர்மாரி பொழிந்தது. மலர்க் குவியலுக்கடியில் மறைந்த ஆச்சாரியரை மலர்களை அகற்றிப் பார்த்தபோது அவருடைய உடலும் காணவில்லை! அப்படி அவர் மறைந்த அந்த தினம் தான் இன்று. (மாக மாதம் சுக்ல நவமி) ஸ்ரீ மத்வ நவமியாக அனைவராலும் கொண்டாடப்படுகிறது.

****

புரந்தரதாசர், கனகதாசர், விஜயதாசர், கோபாலதாசர் முதலான பல்வேறு தாசர்கள், ஸ்ரீ மத்வர் ஸ்தாபித்த த்வைத சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டே பாடல்களை பாடியிருக்கிறார்கள். ஸ்ரீ மத்வரைக் குறித்தும் அநேகப் பாடல்கள் உண்டு. அதில் ஒன்றை இன்று பார்ப்போம்.

*****

கூசின கண்டீரா முக்யப்ராணன கண்டீரா
பாலன கண்டீரா பலவந்தன கண்டீரா (கூசின)

குழந்தையை பார்த்தீர்களா அனுமனை பார்த்தீர்களா
குழந்தையை பார்த்தீர்களா பலவானை பார்த்தீர்களா

அஞ்சனி உதரதி ஜெனிசிது கூசு
ராமன பாதக்கிரகிது கூசு
சீதெகே உங்குர கொட்டித்து கூசு
லங்காபுரவனெ சுட்டித்து கூசு (கூசின)

அஞ்சனா தேவியிடம் பிறந்த குழந்தை
ராமனின் பாதங்களை தொட்டு சேவித்த குழந்தை
சீதையிடம் மோதிரத்தை கொடுத்த குழந்தை
இலங்கை நகரத்தை நெருப்பால் சுட்ட குழந்தை (கூசின)

பண்டி அன்னவ நொங்கிது கூசு
பகன ப்ராணவ கொந்திது கூசு
விஷத லட்டுகெய மெத்திது கூசு
மடதிகே புஷ்பவ கொட்டிது கூசு (கூசின)

ஒரு வண்டி நிறைய உணவை உண்ட குழந்தை
பகாசுரனின் உயிரை எடுத்த குழந்தை
விஷம் கலந்த லட்டுவை உண்ட குழந்தை
மனைவிக்கு புஷ்பத்தை கொடுத்த குழந்தை (கூசின)

மாயவெல்லவ கெத்திது கூசு
மத்வ மதவனு உத்தரிசிது கூசு
புரந்தர விட்டலன தயதிந்த கூசு
சும்மனே உடுப்பிலி நிந்திது கூசு (கூசின)

மாயைகளை வென்ற குழந்தை
மத்வ மதத்தை உய்வித்த குழந்தை
புரந்தர விட்டலனின் கருணையால்
உடுப்பியில் சும்மா நின்ற குழந்தை (கூசின)

****

முதல் சரணத்தில் அனுமனைக் குறித்தும், இரண்டாவது சரணத்தில் பீமனைக் குறித்தும், மூன்றாவது சரணத்தில் மத்வரைக் குறித்தும் பாடிய தாஸர், பாட்டை எப்படி முடிக்கிறார்?

அந்த மூன்று அவதாரங்களிலும் அந்தர்யாமியாக இருந்தது - உடுப்பியில் ’சும்மா’ நின்றிருக்கும் அந்த குழந்தை - அதாவது கிருஷ்ணனே என்று பாடி முடித்திருக்கிறார்.

ஸ்ரீ மத்வர் எழுதிய பகவத்கீதா தாத்பர்ய நிர்ணயத்திலிருந்து ஒரே ஒரு ஸ்லோகத்தை பார்த்துவிட்டு, மத்வநவமி கொண்டாடச் செல்வோம்.

நாஹம் கர்தா ஹரி: கர்தா தத்பூஜா கர்மசாகிலம்
ததாபி மத்க்ருதா பூஜா தத்ப்ரசாதேன நான்யதா
தத்பக்தி தத்பலம் மஹ்யம் தத்ப்ரசாதாத் புன:புன:
கர்மண்யாசோ ஹராவேவம் விஷ்ணோஸ் திருப்திகரஸ் ஸதா

பொருள்:

எதுவும் நான் செய்யவில்லை; எல்லாம் அந்த ஹரியே செய்விக்கிறான்; நான் செய்வதெல்லாம் அவன் புகழ்பாடும் பூஜையே; அந்த பூஜையும் அவன் கருணையாலே செய்கிறேன்; என்னுடைய பக்திக்கும், அதன் பலாபலன்களுக்கும் அவனுடைய கருணையே காரணம்; அனைவரும் தூய மனதோடு பக்தி செய்தால், விஷ்ணுவை அது திருப்திப்படுத்தும்.

**விட்டலன் வந்தான். வந்தான்.. வந்தே விட்டான்...**

தாஸன மாடிகோ என்ன
ஸ்வாமி ஸாஸிர நாமத வேங்கட ரமணா...
இன்னு தய பாரதே தாஸன மேலே...

இப்படி நாராயணனை வேண்டி பற்பல பாடல்கள் பாடியுள்ளார் புரந்தரதாஸர்.

அவனைக் காணவேண்டும்.
அவன் தரிசனம் கிடைக்க வேண்டும்.
அவன் வந்தால் வரங்களை கேட்கவேண்டும்.
தாஸர் பாடுகிறார் பாடுகிறார்.
பாடிக்கொண்டே இருக்கிறார்.

அப்படியே ஒரு நாள்,
பக்தனின் வேண்டுகோளுக்கிணங்க
விட்டலனும் வந்தே விட்டான்.

சங்கு சக்கரம் தரித்தவனாய்
கருடன் மேல் அமர்ந்தவனாய்
மந்தகாசப் புன்னகையுடையவனாய்
வேண்டுமளவுக்கு வரங்களை அளிக்கும் பக்தவத்ஸனாய்
விட்டலன் வந்தே விட்டான்.

தாஸருக்கு எப்படி இருக்கும்?
ஆடுகிறார்
பாடுகிறார்
ஆனந்தக் கூத்தாடுகிறார்

மேலும் என்ன செய்வார் தாஸர்?
நமக்குத்தான் தெரியுமே?
பாட்டுதான் பாடுவார்.

அந்த விட்டலனைக் குறித்து
பாடினார் ஒரு அருமையான பாடலை.
அது என்ன பாடல்?
இதோ இந்த பாடல்தான்.

தேவ பந்தா நம்ம ஸ்வாமி பந்தானோ
தேவர தேவ சிகாமணி பந்தானோ (தேவ பந்தா)

கடவுள் வந்தார் நம்ம ஸ்வாமி வந்தாரே
தேவர்களின் தேவர் சிகாமணி வந்தாரே (தேவ பந்தா)

உரக சயன பந்தா கருட கமன பந்தா
நர கொலிதவ பந்தா நாராயண பந்தானோ (தேவ பந்தா)

சர்ப்பத்தின் மேல் படுத்திருப்பவர் வந்தார்
கருடனின் மேல் பயணிப்பவர் வந்தார்
நரகத்தை ஒளிர்விப்பவர் வந்தார்
நாராயணன் வந்தாரே (தேவ பந்தா)

மந்தரோத்தர பந்தா மாமனோஹர பந்தா

பிருந்தாவன பதி கோவிந்த பந்தானோ (தேவ பந்தா)

மந்தர மலையை தூக்கியவர் வந்தார்
அதிஅற்புத அழகைக் கொண்டவர் வந்தார்
பிருந்தாவனத்தின் தலைவர்
கோவிந்தன் வந்தாரே (தேவ பந்தா)

நக்ரஹரனு பந்தா சக்தரதரனு பந்தா
அக்ரூர கொலிதா த்ரிவிக்ரம பந்தானோ (தேவ பந்தா)

முதலையை கொன்றவர் வந்தார்
சக்கிரத்தை தரித்தவர் வந்தார்
அக்ரூரருக்கு தரிசனம் தந்த
த்ரிவிக்ரமர் வந்தாரே (தேவ பந்தா)

பக்ஷிவாஹன பந்தா லக்ஷ்மணாக்ரஜ பந்தா
அக்ஷய பலதா ஸ்ரீ லக்ஷ்மிரமண பந்தானோ (தேவ பந்தா)

பறவைமேல் பயணிப்பவர் வந்தார்
லக்ஷமணின் அண்ணன் வந்தார்
அளவில்லாத (முடிவில்லாத) பலன்களை கொடுக்கும்
ஸ்ரீ லக்ஷ்மி ரமணன் வந்தாரே (தேவ பந்தா)

நிகம கோசர பந்தா நித்ய த்ருப்தனு பந்தா
நகேமுக புரந்தர விட்டல பந்தானோ (தேவ பந்தா)

வேதங்களின் உள்ளடக்கமாய் இருப்பவர் வந்தார்
எப்போதும் திருப்தியுடன் இருப்பவர் வந்தார்
புன்னகையுடன் இருக்கும்
ஸ்ரீ புரந்தர விட்டலன் வந்தாரே (தேவ பந்தா)

**பாக்கியத்தை கொடுக்கும் லட்சுமியே வருவாய்!**

சென்ற இடுகையில் பார்த்த பாட்டு - ஸ்ரீ ஹரியைக் கண்ட ஆனந்தத்தில் - புரந்தரதாஸர் பாடிய 'தேவ பந்தா நம்ம ஸ்வாமி பந்தானோ'.

ஸ்ரீமன் நாராயணன் தனியா வருவாரா? கண்டிப்பா வரமாட்டார்.

கூடவே யாரு வருவா?

அவரைப் பற்றிதான் இன்று பார்க்கப்போகும் பாடல்.

***

** கர்நாடக சங்கீதம் அறிமுகம் உள்ள அனைவருக்கும் மிகவும் தெரிந்த பாடல்.

** புதுமனை புகுவிழாவில் கண்டிப்பாக பாடும் பாடல்.

** திருமண நிகழ்ச்சியில் தாலி கட்டியவுடன், நாதஸவரம் வாசிப்பவர் வாசிக்கும் பாடல்.

** வெள்ளிக்கிழமை பூஜை செய்யும் பெண்கள் தவறாமல் பாடும் பாடல்.

** வரலட்சுமி பூஜையன்றும் பாடுவார்கள்.

** எனக்கு மிகவும் பிடித்த பாடல்.

மேலே சொன்ன சிறப்புகளெல்லாம் ஒரே பாடலைப் பற்றிதான். அது என்ன பாடல்?

இந்நேரம் டக்குன்னு பிடிச்சிருப்பீங்களே.

அதுதான் 'பாக்யதா லட்சுமி பாரம்மா'.

எளிமை எளிமை எளிமை
இனிமை இனிமை இனிமை

அதற்கு இன்னொரு அற்புதமான உதாரணம் இந்தப் பாடல்.

மஹாலட்சுமியின் சிறப்புகளை விளக்கும் வேத மந்திரமான ஸ்ரீ சூக்தத்தின் சாரத்தினை அப்படியே இந்தப் பாட்டில் தந்திருக்கிறார் புரந்தரதாஸர்.

சூரியசந்திரர்களைப் போல் ஒளியுடைய,
குதிரைகளைப் பூட்டிய தேரில் பவனி வரும்,
ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் மனைவியான

ஸ்ரீ லட்சுமி தேவி

தன் பக்தர்களின் குறைகளை போக்கும் இளகிய மனமுடையவள்,
சகல சௌபாக்கியங்களை கொடுக்கக்கூடியவள்,
தன்னை வணங்குபவர்கள் எப்போதும் ஜெயித்துக் கொண்டே இருக்கும்படி செய்பவள்

என்று ஸ்ரீ சூக்தம் ஸ்ரீ லட்சுமி தேவியின் சிறப்புகளை எடுத்துச் சொல்கிறது.

அதையே நம்ம தாஸர் எளிய கன்னடத்தில் நமக்கு புரியும்படி எடுத்துரைக்கிறார்.

இப்போ பாடல்.

***

பாக்யதா லட்சுமி பாரம்மா
நம்மம்மா நீ சௌபாக்யதா லட்சுமி பாரம்மா

பாக்கியத்தை கொடுக்கும் லட்சுமியே வாம்மா
என் தாயே, சகல சௌபாக்கியத்தை கொடுக்கும் லட்சுமியே வாம்மா

ஹெஜ்ஜெ கால்களா த்வனிய மாடுதா
ஹெஜ்ஜெய மேல் ஒந்து ஹெஜ்ஜெய நிக்குதா
சஜ்ஜன சாது பூஜெயெ வேளெகே
மஜ்ஜிகே ஔகின பெண்ணேயந்தே (பாக்யதா)

கொலுசு அணிந்த கால்களால் சத்தத்தை செய்தவாறு
அடி மேல் அடி வைத்து
நன்கு படித்தவர்களின் பூஜை வேளையில்
தயிரிலிருந்து (கடைந்தால்) வரும் வெண்ணையைப் போல் (பாக்யதா)

கனக வ்ருஷ்டியா கரெயுத பாரே
மன காமனெயா சித்தியு தோரே
தினகர கோடி தேஜதி ஹொளெயுத
ஜனகராயன குமாரி பேக (பாக்யதா)

தங்க மழை பெய்தவாறே வாராய்
என் விருப்பங்களை நிறைவேற்றுவாய்
கோடி சூரியர்களின் ஒளியை (போல தேஜஸ்) கொண்ட
ஜனகனின் மகளே (சீதையே) சீக்கிரம் (பாக்யதா)

அத்தித்தகலதே பக்தர மனெயொளு
நித்ய மஹோத்ஸவ நித்ய சுமங்கள
சத்யவ தோருவ சாது சஜ்ஜனர
சித்ததி ஹொளெயுவ புத்தளி பொம்பே (பாக்யதா)

அங்கிங்கு போகாமல் (நேராக) பக்தர்களின் வீட்டிற்கு (நீ வந்தால்)
(அங்கே) எப்போதும் திருவிழா; தினமும் சந்தோஷம்
(வேத சாஸ்திரங்களின்) உண்மையை எடுத்துரைக்கும் பக்திமான்களின்
மனதில் எப்போதும் நிலைகொண்டிருக்கும் லட்சுமி (பாக்யதா)

சங்க்யே இல்லதா பாக்யவ கொட்டு
கங்கண கையா திருகுத பாரே
குங்குமாங்கிதே பங்கஜ லோசன
வேங்கடரமணன பட்டத ராணி (பாக்யதா)

கணக்கேயில்லாத பாக்கியத்தைக் கொடுக்கும்
வளையல்கள் கூடிய (உன்) வலது கையை காட்டியவாறே வாராய்
குங்குமம் இட்ட நெற்றியோடு, தாமரை (போல்) விழிகளை கொண்டவளே,
வேங்கடரமணனின் பட்டத்து ராணியே (பாக்யதா)

சக்கரே துப்பவ காலுவே ஹரிசி

சுக்ரவாரதா பூஜய வேளகே
அக்கரெயுள்ள அளகிரி ரங்கன
சொக்க புரந்தர விட்டலன ராணி (பாக்யதா)

சக்கரையும், நெய்யும் மழையாய் பெய்ய
வெள்ளிக்கிழமை பூஜை வேளையில்
கருணையே வடிவான ரங்கனின்,
புரந்தர விட்டலனின் ராணியே (பாக்யதா)

**கண்ணன் தூணில் இருக்கிறானா? துரும்பில் இருக்கிறானா?**

கண்ணன் எங்கே இருக்கிறான்? தூணில் இருக்கிறானா? துரும்பில் இருக்கிறானா?

இருங்க இருங்க. இந்த வசனம் கண்ணன் அவதாரத்தில் இல்லையே? அது ரொம்ப முன்னாடி நரசிம்ம அவதாரத்திலேயே வந்த வசனமாச்சே?

பின்னே. யாரு இப்படி கேட்டாங்க?

ஒரு வேளை யசோதா கேட்டாங்களா? நந்தகோபர்?

அட, யார் கேட்டா என்னப்பா? பதில் சொல்லுங்க.

கண்ணனோ, நரசிம்மனோ - இருவரும் (ஒருவரே!) எல்லா இடத்திலும்தானே இருக்காங்க.

அவங்க இல்லாத இடம்னு ஏதாவது இருக்கா?

எதிலும் இங்கு இருப்பான், அவன் யாரோன்னு பாடியிருக்காங்களே.

அப்போ, இந்த கேள்வி கேட்டது யாருப்பா? சொல்லப் போறீங்களா இல்லையா?

அது வேறெ யாருமில்லே. நம்ம புரந்தர தாஸர்தான்.

என்ன? சந்தேகமா? தாஸருக்கா?

நமக்குத்தான் கஷ்டமான நேரங்களில் பகவான் இருக்கானா இல்லையான்னு தோணும்.

ஆனா, அனைத்தும் அறிந்த ஞானியான தாஸருக்கும் அந்த சந்தேகம் வந்துடுச்சா?

அதுதான் கிடையாது.

அவர் கேள்விகள் கேட்பது நமக்காக.

அவர் பதில்கள் சொல்வது நமக்காக.

அவருக்கு சந்தேகம் வர்றது நமக்காக.

அதுக்கு அவரே விளக்கங்கள் கொடுப்பது நமக்காக.

கண்ணன் எங்கே இருக்கிறான்? அவனைப் பார்த்தீர்களா? என்று கேட்பது போல் கேட்டு, அதற்குண்டான பதிலையும் அவரே கொடுக்கிறார் - இந்த அழகான பாடலில்.

இப்போ பாடல்.

பிள்ளங்கோவிய செலுவ கிருஷ்ணன எல்லி நோடிதிரி
ரங்கன எல்லி நோடிதிரி

குழலூதிக்கொண்டு நின்றிருக்கும் கிருஷ்ணனை
எங்கு பார்த்தீர்கள்?
ரங்கனை, எங்கு பார்த்தீர்கள்?

எல்லி நோடிதரல்லி தானில்ல
தில்லவெந்து பல்லே ஜானர (பிள்ளங்கோவிய)

வெறும் கண்களால் எங்கு பார்த்தாலும் கிடைக்காத கிருஷ்ணன்
(பக்தியுடன் பார்த்தால் எங்குமே இருப்பான்) என்று அறிந்த மக்களே (பிள்ளங்கோவிய)

நந்தகோபன மந்திரங்கள சந்து கொந்தினல்லி
சந்த சந்தத கோப பாலர விருந்த விருந்ததல்லி
சுந்தராங்கத சுந்தரியர ஹிந்து முந்தினல்லி
அந்தகாகள கந்த கருகள மந்தே மந்தேயல்லி (பிள்ளங்கோவிய)

நந்தகோபரின் கோயில்களின் அக்கம் பக்கத்தில்
கோபாலத்து சிறுவர்களின் தோட்டங்களில்
அழகான கோபியர்களின் முன்னும் பின்னும்
ஆயர்பாடியின் கன்றுகளின் மந்தையின் நடுவில் (பிள்ளங்கோவிய)

ஶ்ரீ குருக்த சதா சுமங்கள யோக யோகதல்லி
ஆகமார்த்ததொளகே மாடுவ யாக யாகதல்லி
ஶ்ரீகே பாக்ய நாஷ வார்த்திப போக போகதல்லி
பாகவதரு சதா பாகி பாடுத ராகதல்லி (பிள்ளங்கோவிய)

குரு மற்றும் சத்பக்தர்கள் கூடும் இடங்களில்
ஆத்மார்த்த பக்தியுடன் செய்யப்படும் யாகசாலைகளில்
(நமக்குள் கொழுந்து விட்டு எரியும்) ஆசைகளை எரிக்கும் வத்தியாய் (wick) நம் மனதில்
பாகவதர்கள் எப்போதும் (கிருஷ்ணனை) புகழ்ந்து பாடும் ராகங்களில் (பிள்ளங்கோவிய)

ஈ சராசரதொளகே ஜனங்கள ஆசே ஈசெயல்லி
கேசரேந்த்ரன சுதன ரதத அச்ச பீடதல்லி
நாசதே மாதவ கேசவ எம்ப வாச கண்களல்லி
பிச்சுகொண்டத புரந்தர விட்டலன லோசனாக்ரதல்லி (பிள்ளங்கோவிய)

உலகத்து மக்களின் ஆசாபாசங்களுக்கு அப்பாற்பட்டு (இருக்கிறான்)
இந்திரனின் புதல்வனான அர்ச்சுனனின் தேரில் இருக்கிறான்
மாதவா, கேசவா என்று அன்புடன் குதித்து பாடும் பக்தனின் பேச்சில் மற்றும் கண்களில்
புரந்தர விட்டலா என்றழைக்கும் பக்தனின் விழியோரத்தில் (பிள்ளங்கோவிய)

*****

கண்ணன் ஆயர்பாடியில் இருக்கிறான் என்று ஆரம்பித்த தாஸர், கடைசியில், மாதவா, கேசவா என்று சொல்லிக் கொண்டே இருங்கள், உங்கள் மனதில், பேச்சில், கண்களில் என்று உங்களுக்குள்ளேயே, உங்களுடனேயே இருப்பான், வேறெங்கும் தேடவேண்டியதேயில்லை என்று அழகாக முடிக்கிறார்.

**<u>ஓம் நமச்சிவாய.. ஓம் நமச்சிவாய..</u>**

மாக மாதம், கிருஷ்ண பட்ச சதுர்த்தசியான இன்று மஹா சிவராத்திரி. சிவபெருமானுக்கு உகந்த நாள். சிவத்தலங்களில், சிவன் கோயில்களில் இன்று சிறப்பு பூஜைகள் நடைபெறும் நாளாகும். சிவராத்திரியின் சிறப்புகளையும், சிவனைக் குறித்து பூஜைகள் செய்வதால் ஏற்படும் பலன்கள் குறித்து ஒரு நல்ல பதிவு இங்கே இருக்கிறது. படித்து விடவும்.

***

வைணவ சம்பிரதாயத்தை பின்பற்றும் புரந்தரதாஸர், கனகதாஸர் மற்றும் பிற தாஸர்கள் பாடிய பாடல்கள் (ஏறக்குறைய) அனைத்தும் ஸ்ரீமன் நாராயணன் மற்றும் லட்சுமிதேவியைக் குறித்து பாடியவையே ஆகும். ஆனாலும், ஸ்ரீருதரதேவரும் (சிவன்) அந்த சம்பிரதாயத்தின் தாரதம்யத்தில் (hierarchy) இருப்பதால், சில பாடல்கள் அவரைக் குறித்தும் பாடப்பட்டுள்ளன. மேலும், மஹா சிவராத்திரியை கொண்டாடும் மத்வர் மற்றும் தாஸர்கள் வழியில் வந்த வைணவர்கள், இன்று சிறப்பு பூஜைகளும் செய்து வழிபாடு செய்கின்றனர். ருத்ரதேவரைக் குறித்து மத்வர், ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீ வியாஸராஜர் மற்றும் பலரும் பல்வேறு ஸ்தோத்திரங்களை அருளியுள்ளனர். அவை இங்கே தொகுக்கப்பட்டுள்ளன.

இன்று நாம் பார்க்கப் போகும் இந்தப் பாடலை இயற்றியவர், ஸ்ரீ விஜயதாஸர். காலம் 1682-1755. புரந்தரதாஸரை தன் குருவாக ஏற்று, அவரைப் போலவே இனிமையாகவும் எளிமையாகவும் கன்னடத்தில் ஏகப்பட்ட பாடல்களை எழுதியவர். இவரது பாடல்களின் இறுதியில் ‘விஜயவிட்டலா’ என்ற பெயரைப் பொறித்து, அந்த பாடல்களை இறைவனுக்கு அர்ப்பணித்தவர். இந்த விஜயதாஸர், ஈசனைக் குறித்து பாடிய பாடல் இதோ.

கைலாச வாசா கௌரீஸ ஈசா
தைல தாரேயந்தே மனசு கொடோ ஹரியல்லி சம்போ (கைலாச)

கைலாச வாசனே கௌரியின் தலைவனே ஈசனே
எண்ணெய் ஊற்றுவதைப் போல் (தெளிவாக, மனது அலைபாயாமல்)
ஹரியினிடத்தில் மனதைக் கொடுக்க வரம் தருவாய் சம்போ (கைலாச)

அஹோராத்ரியலி நானு அனுசராக்ரனியாகி
மஹியொளகே ஜரிசிதெனோ மஹாதேவனே
அஹிபூஷணனே என்ன அவகுணகளெணிசலதே
விஹித தர்மதி விஷ்ணு பகுதியனு கொடோ சம்போ (கைலாச)

இரவும் பகலுமாக நான் உன் வேலைக்காரனாக வேண்டி
இந்த உலகத்தில் பிறந்தேனே மஹாதேவனே
பாம்பை அணிந்தவனே, என் கெட்ட எண்ணங்களை எண்ணாமல்
விதித்த தர்மங்களின்படி விஷ்ணுவை வணங்க பக்தி கொடு சம்போ (கைலாச)

மனசு காரணவல்ல பாப புண்யக்கெல்லா
அனலாக்ஷ நின்ன ப்ரேரணேயில்லதே
தனுஜ கதமன ஹரி தண்ட ப்ரணமமால்பே
மணிசோ ஈ ஷிரவ சஜ்ஜன சரண கமலதலி (கைலாச)

மனது காரணமில்லை பாவ புண்ணியங்களுக்கெல்லாம்
தீஜ்வாலை (போல் கண்களையுடையவனே) உன் ஆணையில்லாமல்;
(சர்வாங்கமும் தரையில் பட) சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்த செய்த என்னை

மன்னிப்பாய், இந்த (என்) சிரசை, படித்த, நற்குணங்களுடையவர்களின் பாதங்களில் விழுந்து வணங்குவேன் (கைலாச)

பாகீரதீ ஹரனே பயவ பரிஹரிசய்யா
லேசாகி நீ சலஹோ சந்தத சர்வதேவா
பாகவத ஜனப்ரிய விஜயவிட்டலங்க்ரி
ஜாகு மாடதே பஜிப பாக்யவனு கொடோ சம்போ (கைலாச)

பாகீரதியை காப்பாற்றியவனே என் பயத்தை போக்குவாய்
என்னை கரையேற்றுவாய், எப்போதும் அனைவருக்கும் தலைவனே
பக்திமான்களுக்கு பிரியமான விஜயவிட்டலனைக் குறித்து
சோம்பலில்லாமல் எப்போதும் பாடிக் கொண்டிருக்கும் பாக்கியத்தை கொடு ஈசனே (கைலாச)

***

கேட்ட வரங்களை தவறாது அளிக்கும் சிவனை வணங்கி, அந்த விஷ்ணுவை மறக்காமலிருக்கும் வரத்தை தருவாய் என்று என்ன அழகாய் வேண்டுகிறார், இந்த விஜயதாஸர்.

**உடுப்பியில் பாடப்பட்ட இன்னொரு அற்புதமான பாடல்.**

சிலர் தங்கள் குறைகளை தாய் தந்தையரிடம் சொல்கின்றனர்; சிலர் மனைவி, மக்களிடம்; மற்றும் சிலர் நண்பர்களிடம். இவர்கள் யாரிடத்திலும் சொல்ல முடியாத குறைகளை - ஸ்ரீ ராகவேந்திரரின் மகிமைகளை அறிந்தவர்கள் - அவரிடமே சொல்கின்றனர்.

ஸ்ரீ ராகவேந்திரரின் புகழ்பெற்ற ஸ்லோகமான

பூஜ்யாய ராகவேந்த்ராய சத்யதர்ம ரதாயச !
பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே !!

சொல்வது என்னவென்றால்,

ராகவேந்திரரை வழிபடுங்கள், அவரே சத்தியத்தையும் தர்மத்தையும் காப்பாற்றுபவர். அவரை பஜிப்பவர்களுக்கு கல்பவிருட்சம் போலவும், நினைப்பவர்களுக்கு காமதேனுவைப் போலவும் அருளை வாரி வழங்குவார்.

***

ஸ்ரீ ராகவேந்திரர், மத்வ மதத்தில் வந்த ஒரு பெரிய மகான். 1595ல் புவனகிரியில் பிறந்து, திருமணம் செய்து பிறகு சன்னியாசம் மேற்கொண்டு, இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் மேற்கொண்டவர். பல்வேறு மதத்தலைவர்களை வாதத்தில் வென்றவர். பல்வேறு நூல்களை எழுதியுள்ள ஸ்ரீ ராகவேந்திரர், மந்திராலயத்தில் பிருந்தாவனஸ்தரானார்.

ஒரு முறை ஸ்ரீ ராகவேந்திரர், உடுப்பி கிருஷ்ணனை தரிசனம் செய்ய வந்தபோது, இந்த பாடலை - இந்து எனகே கோவிந்தா - பாடியதாக சொல்கின்றனர். இதை அவர் பாடவில்லை என்று ஒரு “சர்ச்சை”யும் உண்டு. ஆனாலும், நம்ம உடுப்பி கிருஷ்ணனை வணங்கி பாடப்படும் இந்த அழகான பாடலை, ஸ்ரீ ராகவேந்திரரே இயற்றி, பாடியதாக எண்ணி, அதன் பொருளோடு பாடி, மகிழ்வோம் வாருங்கள்.

***

இன்னொரு முக்கிய குறிப்பு:

ஸ்ரீ ராகவேந்திரரின் ஜன்ம தினம் மற்றும் அவர் பீடாதிபதி ஆன நாள் இரண்டும் இந்த வாரம் வருவதையொட்டி, அவர் மடம் இருக்குமிடங்களில் பல்வேறு சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெற்று வருகின்றது. இவ்வாறு கர்நாடக மாநிலம், ஹொஸ்பேட்டில், நடைபெறும் நிகழ்ச்சியை தினந்தோறும் (சென்ற வாரயிறுதி முதல் அடுத்த வாரயிறுதி வரை 3/5 - 3/12) http://saptaaha.com தளத்தில் நேரடி ஒளிபரப்பும் நடைபெறுகிறது.

இப்போது பாடல்.

இந்து எனகே கோவிந்தா
நின்னய பாதார விந்தவ தோரோ முகுந்தனே (இந்து)

இன்று எனக்கு கோவிந்தா
உன் பாதாரவிந்தங்களை காட்டு முகுந்தனே (இந்து)

சுந்தர வதனனே நந்தகோபிய கந்தா

மந்தரோத்தாரா ஆனந்தா இந்திரா ரமணா (இந்து)

அழகான முகத்தோனே, இடையர்குல மகனே (வாரிசே)
மந்தார மலையை தூக்கியவனே, லட்சுமியின் தலைவனே (இந்து)

நொந்தேனய்யா பவபந்தனதொளு சிலுகி
முந்தே தாரி காணதே குந்திதே ஜகதொளு
கந்தனந்தெந்தென்ன குந்துகள எணிசதே
தந்தே காயோ கிருஷ்ணா கந்தர்ப்ப ஜனகனே (இந்து)

இந்த சம்சார சாகரத்தில் மூழ்கி நொந்து போனேன்
முன் செல்லும் வழி தெரியாமல் இந்த உலகத்தில் தவித்தேன்
என்னை குழந்தையாக பாவித்து, என் தவறுகளை எண்ணாமல்
தந்தையே, என்னை காப்பாற்று, மன்மதனின் தந்தையே (இந்து)

முதாதனதி பலு ஹேடிஜீவனனாகி
த்ருடபகுதியனு மாடலில்லவோ ஹரியே
நோடலில்லவோ நின்ன பாடலில்லவோ மஹிமே
காடிகார கிருஷ்ணா பேடிகொம்பேனோ நின்ன (இந்து)

மூடனான நான் மிகவும் கோழையான வாழ்வு வாழ்ந்து
உன்னிடத்தில் அசைக்கமுடியாத பக்தியை செய்யவில்லை
உன்னை பார்க்கவில்லை; உன் மகிமையை பாடவில்லை
தேரோட்டியான கிருஷ்ணனே; உன்னை வேண்டிக் கொள்கிறேன் (இந்து)

தாருணியொளு பலுபார ஜீவனனாகி
தாரி தப்பி நடதே சேரிதே குஜனர
ஆரு காயுவரில்லா சாரிதே நினகய்யா
தீர வேணுகோபாலா பாருகாணிசோ ஹரியே (இந்து)

இந்த உலகத்தில் (ஒன்றுமே செய்யாமல்) வாழ்ந்து வந்தேன்
தவறான வழியில் போய் தவறான மனிதர்களிடம் போய் சேர்ந்தேன்
என்னை காப்பாற்ற இப்போது யாருமில்லை; உன்னை வந்தடைந்தேன்
வேணுகோபாலனே, என்னை ரட்சிப்பாய் ஹரியே (இந்து)

**அனைத்திற்கும் தலைவன் யார்?**

மகாபாரத யுத்தம் முடிந்தது. பாண்டவர்கள் மாபெரும் வெற்றியடைந்தாலும், தர்மருக்கு அவ்வளவாக சந்தோஷமில்லை. அவரிடம் பதில் தெரியாத பல கேள்விகள் இருந்தன. அப்படி என்ன கேள்விகள்?

ஏன் இந்த யுத்தம் நடைபெற்றது?
தர்மம் என்றால் என்ன?
பாவ புண்ணியம் என்றால் என்ன?

இப்படி பற்பல கேள்விகள்.

தர்மரின் மனக்குழப்பத்தை அறிந்த ஸ்ரீகிருஷ்ணன், அவரை அம்புப்படுக்கையில் படுத்திருக்கும் ஸ்ரீபீஷ்மரிடம் அழைத்துச் சென்றார். ஸ்ரீ பீஷ்மரே எல்லா சந்தேகங்களையும் தீர்க்க வல்லவர் என்றும் கூறுகிறார்.

இப்போது தர்மர் பீஷ்மரிடம் கேள்விகள் கேட்கிறார்.

கிமேகம் தைவதம் லோகே கிம் வாப்யேகம் பராயணம் !
ஸ்துவம்த:கம் கமர்சந்த: ப்ராப்னுயுர் மானவா சுபம் !!

கோ தர்ம: சர்வதர்மாணாம் பவத: பரமோமத:!
கிம் ஜபன் முச்சதே ஜந்துர் ஜன்ம சம்சார பந்தனாத்!!

1. உத்தமமான கடவுள் யார்?
2. யாரிடம் போய் நாம் அனைவரும் சரணமடையலாம்?
3. யாரை புகழ்ந்து பாடினால், நாம் அமைதியையும், வளர்ச்சியையும் (முக்தி) அடையலாம்?
4. யாரை வணங்குவதால், நமக்கு மோட்சம் கிட்டும்?
5. மிகவும் உயர்ந்த தர்மமாக நீங்கள் எதை நினைக்கிறீர்கள்?
6. யார் பெயரை உச்சரிப்பதன் மூலம், ஜீவராசிகள் மறுபிறப்பு அடையாமல் இருப்பார்கள்?

இவைகளுக்கு பதில் சொல்லும் பீஷ்மர், பகவான் விஷ்ணுவின் அருமை பெருமைகளை சொல்லும் ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமத்தை அருளுகிறார்.

ஜகத்ப்ரபும் தேவதேவம் அனந்தம் புருஷோத்தமம் !
ஸ்துவன் நாம சஹஸ்ரேண புருஷஸ் ஸததோஸ் தித: !!

அனைவரிலும் உத்தமமானவன் அந்த புருஷோத்தமன். அவனை வணங்குவதாலேயே மறுபிறப்பு கிட்டாமல், மோட்சம் கிட்டும் என்று சொல்கிறார்.

இப்படி சர்வோத்தமனான அந்த நாராயணனே, எங்கும் வியாபித்திருக்கிறான். அவனாலேயே அனைத்தும் இயங்குகின்றன. இந்த கோள்கள், நட்சத்திரங்கள், சூரிய சந்திரர்கள் முதற்கொண்டு அனைத்திலும் இருப்பது அவனே.

இந்த விளக்கத்தையே ஸ்ரீ புரந்தரதாஸர் இந்த அற்புதமான பாடலின் மூலம் நமக்கு தெரிவிக்கின்றார்.

இனி பாடல்.

***

சகல க்ரஹபல நீனே சரசிஜாக்ஷா
நிகில வியாபக நீனே விஸ்வரக்ஷா (சகல)

அனைத்து கிரகங்களின் பலன்களும் நீயே, தாமரை போல் கண்களை உடையவனே,
எல்லா இடத்திலும் இருந்து, இந்த உலகத்தை கட்டிக்காப்பவனே (சகல)

ரவிசந்திர புத நீனே ராஹு கேதுவு நீனே
கவி குரு சனியு மங்களனு நீனே
திவராத்ரியு நீனே நவவிதானவு நீனே
பவரோக ஹர நீனே பேஷஜனு நீனே (சகல)

சூர்ய, சந்திர, புதனும் நீயே, ராகு கேதுவும் நீயே
வியாழன், சனி மற்றும் வெள்ளியும் நீயே
பகலும் இரவும் நீயே, ஒன்பது விதானங்களும் நீயே++
நோய்களை தீர்க்கும் மருத்துவனும் நீயே, மருந்தும் நீயே (சகல)

பக்ஷமாசவு நீனே பர்வகாலவு நீனே
நக்ஷத்ர யோக கரணகளு நீனே
அக்ஷயதி திரௌபதிய மானவனு காய்த நீ
பக்ஷிவாகன லோக ரக்ஷகனு நீனே (சகல)

(சுக்ல & கிருஷ்ண) பட்சமும் நீயே, மாதங்கள், பர்வ காலங்கள் நீயே
நட்சத்திர, யோக, கரணங்களும் நீயே
திரௌபதியின் மானத்தை குறைவில்லாத ஆடையளித்து காப்பாற்றிய நீ
கருட வாகனத்தில் வந்து உலகத்தை காப்பாற்றுபவனும் நீயே (சகல)

ருது வாசர நீனே ப்ருதிவிகாதியு நீனே
க்ரது ஹோம யஞ்ய சத்கதியு நீனே
ஜிதவாகி என்னோடைய புரந்தர விட்டலனே
ஸ்ருதிகே சிலுகதா அப்ரதிம மஹிம நீனே (சகல)

(ஆறு) காலமும், வருடங்களும், வருடப்பிறப்பும் நீயே
ஹோம, யாகங்களினால் அடையும் முக்தியும் நீயே
யாராலும் தோற்கடிக்க முடியாத என் தலைவன் புரந்தர விட்டலனே,
நீ வேதங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவனே (சகல)

***

++ஒன்பது விதானங்கள் என்றால் என்ன?

அவை 6 வேதாங்கங்கள் மற்றும்
7. மீமாம்சம்
8. நியாய
9. சாங்க்யம்

ஆகும்.

இப்போ 6 வேதாங்கங்கள் அப்படின்னா என்ன?

1. சிக்ஷா
2. கல்பா
3. வ்யாகரணம்

4. நிருக்தா
5. சந்தஸ்
6. ஜ்யோதிஷ

வேதங்களை படித்து அறிந்து கொள்ளுவதற்கு முன், இந்த ஆறு வேதாங்கங்களையும் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஒரு விதி உள்ளதாம்.

**கிருஷ்ணா நீ வேகமாய் வாராய்**

தலைப்பை பார்த்ததும் பாட்டை டக்குன்னு பிடிச்சிருப்பீங்க. பற்பல பாடகர்களாலும், ஹரிஹரனாலும் (Colonial Cousins) பாடப்பட்டு, அனைவருக்கும் பிடித்த மிகவும் இனிமையான பாடல்தான் இது - கிருஷ்ணா நீ பேகனே பாரோ. இந்த பாடலை இயற்றிவர் ஸ்ரீ வியாஸராயர். இவருடைய புண்ணிய தினம் 3/23 அன்று வருவதையொட்டி, இந்த பதிவும் பாடலும் இன்று.

ஸ்ரீ வியாஸராயர் 1460ஆம் ஆண்டு பிறந்தவர். இயற்பெயர் யதிராஜா. 7 வயதில் உபநயனம் செய்வித்து, பிரம்மண்ய தீர்த்தர் என்ற குருவிடம் கல்வி கற்க அனுப்பி வைக்கப்பட்டார். இவருடைய திறமைகளை கண்ட பிரம்மண்ய தீர்த்தர், வியாஸராயர் என்று பெயரிட்டு, சன்னியாசம் கொடுத்தார். அப்போது அவருக்கு வயது 16. பிறகு காஞ்சியிலும், முளபாகலிலும் ஸ்ரீபாதராயரிடம் வேத வேதாந்தங்களை கற்ற ஸ்ரீ வியாஸராயர், விஜயநகர பேரரசின் அரசர் சலுவ நரசிம்ம ராயரிடம் ராஜகுருவாக நியமிக்கப்பட்டார். அந்த அரசனின் வேண்டுகோளுக்கிணங்க, ஸ்ரீ வியாஸராயர் திருப்பதிக்கு சென்று வேங்கடனின் திருக்கோயிலில் சுமார் 12 வருடங்கள் பாதுகாவலராகவும் சேவை செய்தார். விஜயநகர பேரரசில் அடுத்து வந்த ஸ்ரீ கிருஷ்ணதேவ ராயரிடமும், ஸ்ரீ வியாஸராயர் ராஜகுருவாக இருந்தார்.

ஒரு முறை ஸ்ரீ வியாஸராயர், ஸ்ரீ கிருஷ்ணதேவ ராயரை குஹு யோகம் என்ற அபாயத்திலிருந்து காப்பாற்றினார். அதன்பிறகு மீண்டும் ஆட்சிக்கு வந்த கிருஷ்ணதேவ ராயர், வியாஸராயருக்கு மிகவும் மரியாதை செலுத்தி, அவரை வணங்கி வந்தார்.

ஸ்ரீ வியாஸராயர், மத்வர் வழியில் வந்த மடாதிபதிகளில் முக்கியமானவர். அவர் பற்பல புத்தகங்கள், பாடல்கள் நமக்கு தந்துள்ளார். புரந்தரதாஸர், கனகதாஸர் முதலான தாஸர்களுக்கும், (கும்பகோணத்தில் பிருந்தாவனஸ்தரான) ஸ்ரீ விஜயேந்திர தீர்த்தருக்கும் குருவாக இருந்தவர். தென்னிந்தியா முழுக்க சுமார் 700 ஆஞ்சனேயர் கோயில்களை ஸ்தாபித்து பக்தியை பரப்பியவர்.

பிரகலாதனின் அவதாரமாக கருதப்பட்ட ஸ்ரீ வியாஸராயர், 1539ம் ஆண்டு ஹம்பிக்கு அருகே துங்கபத்ரா நதிக்கரையோரம் பிருந்தாவனஸ்தரானார்.

***

கிருஷ்ணதேவ ராயரின் அரசவையில் ராஜகுருவாக இருந்த ஸ்ரீ வியாஸராயரின் நினைவாக இன்றும் அந்த மடத்தின் தலைவருக்கு (தற்போதைய தலைவர் ஸ்ரீ வித்யா மனோகர தீர்த்தர்) தினமும் மாலையில் அரசவையில் இருப்பது போல் ராஜஅலங்காரம் செய்வித்து, அவர் மூலம் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு பூஜைகள் செய்விக்கப்படுகிறது. திருவல்லிக்கேணியில் உள்ள இந்த மடத்தில், அதன் (அப்போதைய) தலைவர் வந்திருக்கும் சமயங்களில் அந்த அற்புதமான காட்சியை, பூஜையை கண்டிருக்கும் பாக்கியத்தை அடைந்திருக்கிறேன்.

இப்போ பாடல்.

***

கிருஷ்ணா நீ பேகனே பாரோ
பேகனே பாரோ முகவன்னே தோரோ (கிருஷ்ணா)

கிருஷ்ணா நீ வேகமாய் வாராய்
வேகமாய் வாராய் திருமுகத்தை காட்டுவாய் (கிருஷ்ணா)

காலா லந்திகே கெஜ்ஜே நீலத பாவோலி
நீலவர்ணத நாட்யா வாடுத பாரோ (கிருஷ்ணா)

கால்களில் கொலுசோடும் கைகளில் ரத்தின வளையோடும்
நீல வர்ணத்தில் இருப்பவனே நாட்டியம் ஆடியவாறே வாராய் (கிருஷ்ணா)

உடியல்லி ஊடுகெஜ்ஜே பெரளல்லி உங்குர
கொரளோளு ஹாகித வைஜயந்தி மாலே (கிருஷ்ணா)

இடுப்பில் ஒட்டியாணமும் விரல்களில் மோதிரமும்
கழுத்தில் வைஜயந்தி மாலையும் அணிந்தவனே (கிருஷ்ணா)

காசி பீதாம்பர கையல்லி கொளலூ
பூசித ஸ்ரீகந்த மையொள கிரலு (கிருஷ்ணா)

பட்டு பீதாம்பரம் அணிந்து கையில் குழலோடு
உடலெங்கும் சந்தனத்தை அணிந்தவனே (கிருஷ்ணா)

தாயிகே பாயல்லி ஜகவன்னு தோரித
ஜகதோத்தாரக நம்ம உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணா (கிருஷ்ணா)

தாய்க்கு வாயில் உலகத்தை காட்டிய
இந்த உலகத்தை காப்பாற்றுபவனே, உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணா (கிருஷ்ணா)

ஆண்டவன் காப்பாற்றுவான், இதில் சந்தேகமேயில்லை

இந்த உலகத்தில் எல்லாரும் சந்தோஷமாயிருக்காங்க. என்னை மட்டும் ஏன் இந்த ஆண்டவன் இப்படி படுத்தறான்? ஆண்டவன்னு ஒருவன் இருக்கானா இல்லையான்னே தெரியலியே? - இப்படி புலம்புபவர்கள் நிறைய பேரை பார்த்திருக்கலாம். வாழ்க்கையில் மேல் விரக்தி அடைந்து இப்படி புலம்புபவர்களுக்காக ஸ்ரீ கனகதாஸர் பல பாடல்கள் பாடியிருக்கிறார். அதில் ஒன்று இன்று பார்ப்போம்.

முன்னாடி பார்த்த நிறைய பாடல்களில் - கடவுள் கஜேந்திர மோட்சம் கொடுத்தான், திரௌபதிக்கு சேலை கொடுத்தான் - இப்படியெல்லாம் உதாரணம் காட்டி, எனக்கும் தயை காட்டு என்று தாஸர்கள் வேண்டுவதை பார்த்தோம். ஆனால் இந்த பாடலில், புராண உதாரணங்கள் எதுவுமில்லாமல், எல்லாம் சமகாலத்தில் நடக்கும் சாதாரண விஷயங்களையே சொல்லி, துயரத்தில் இருக்கும் மனிதனுக்கு தைரியம் கொடுக்கிறார் கனகதாஸர். மனதில் உறுதி வேண்டும், தைரியத்தை இழக்காதே, கண்டிப்பாக ஆண்டவன் உனக்கு கைகொடுப்பான் என்று கூறி தாஸர் பாடும் பாடல்தான்

‘தள்ளனிசதிரு கண்ட்யா’.

இதக்கே சம்சயவில்லா (தள்ளனிசதிரு)

சஞ்சலப்படாமல் பொறுமையுடன் இருப்பாய் மனமே எல்லாரையும் காப்பாற்றுவான் இதற்கு சந்தேகமேயில்லை (தள்ளனிசதிரு)

பெட்டதா துதியல்லி ஹுட்டிருவ விருக்ஷிக்கே
கட்டேயனு கட்டி நீர் எரேதவரு யாரு
புட்டிசித சுவாமிதான் ஹோடேகாரனாகிரலு
கெட்யாகி சலகுவனோ இதக்கே சம்சயவில்லா (தள்ளனிசதிரு)

மலைமேல் வளர்ந்திருக்கும் மரங்களுக்கெல்லாம் (அங்கேயே) குட்டையை கட்டி நீர் இறைத்தவர் எவரோ பிறக்கவைத்த கடவுளே காப்பாற்றுபவனாகவும் இருப்பதால் கண்டிப்பாக காப்பாற்றுவான் இதில் சந்தேகமேயில்லை (தள்ளனிசதிரு)

அடவியொளகாடுவா மிருக பக்ஷி களிகெல்லா
அடிகடிகே ஆஹாரா இட்டவரு யாரு
படேத ஜனனிய தெரதி சுவாமி ஹோடேகீடாகி
பிடதே ரட்சிபநிதகே சந்தேக பேடா.

அடர்ந்த காடுகளில் உலவும் மிருக, பறவைகளுக்கெல்லாம் அவ்வப்போது ஆகாரம் கொடுப்பவர் யாரோ இந்த உலகத்தை படைத்த கடவுளே காப்பாற்றுவான் கைவிடமாட்டான் இதற்கு சந்தேகமேயில்லை (தள்ளனிசதிரு)

கல்லொளகே ஹுட்டிருவ க்ருமிகீட களிகெல்லா
அல்லல்லி ஆஹார இத்தவரு யாரு
புல்லலோசன காகிநெலெ ஆதிகேசவனு
எல்லரனு சலஹனுவனோ இதக்கே சம்சயவில்லா (தள்ளனிசதிரு)

கல்லுக்குள் இருக்கும் தேரைக்கெல்லாம் அங்கங்கேயே உணவு கொடுப்பவர் யாரோ மலரைப் போலவும், ஒளியுடைய கண்களையுடவனுமாகிய காகிநெலெ ஆதிகேசவன் எல்லாரையும் காப்பாற்றுவான் இதற்கு சந்தேகமேயில்லை (தள்ளனிசதிரு)

பின்குறிப்பு: அப்போ கடவுளே எல்லாத்தையும் பாத்துப்பாரா, நாம் எதுவுமே செய்யவேண்டியதில்லையான்னு கேக்கப்படாது. பிரச்சினைகளில் இருந்து விடுபட மனித முயற்சியும் கண்டிப்பாக தேவை. அப்போதுதான் செய்யும் செயல்களில் வெற்றி கிட்டும். சித்தி மனித முயற்சி. அருள் தெய்வ அனுக்கிரகம். மனித முயற்சி முடியுமிடத்தில் தெய்வ அருள் செயல்படும். இந்த பழமொழிகளெல்லாம் தெரியும்தானே? ***

**<u>கேசவ முதலான 24 நாமாக்கள் - பகுதி 1 of 2</u>**

விஷ்ணுவின் சஹஸ்ர நாமத்தில் 24 நாமங்கள் மிக முக்கியமாக கருதப்படுகின்றது. அவை என்ன?

கேசவ நாராயண மாதவ கோவிந்தா விஷ்ணு மதுசூதன
திரிவிக்கிரம வாமன ஸ்ரீதர் ரிஷிகேஷ பத்மநாபா தாமோதர
சங்கர்ஷன வாசுதேவ பிரத்யும்ன அநிருத்த புருஷோத்தமா அதோக்ஷஜா
நரசிம்ஹா அச்யுத ஜனார்த்தன உபேந்திரா ஹரி ஸ்ரீகிருஷ்ணா.

எந்த காரியத்தை செய்வதானாலும், மனத்தூய்மையுடன் கடவுளை வணங்கி செய்தால் அந்த காரியம் சுபமாக முடியும் என்பது நம்பிக்கை. அதற்காகவே பூஜை, சந்தியாவந்தனம் ஆகியவைகளை துவக்கும்போது 'ஆசமனம்' செய்யவேண்டு மென்றும், அப்படி செய்யும்போது மேற்கூறிய கடவுளின் 24 நாமாக்களையும் சொல்ல வேண்டும் என்றும் நிர்ணயித்திருக்கிறார்கள். பொருள் அறிந்தோ அறியாமலோ இந்த நாமாக்களை சொல்வதால் உள்ளே இருக்கும் பாவங்கள் போகும், மோட்சம் கிட்டும் என்பது அஜாமிளன் கதையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

இந்த நாமாக்களின் மகிமையை நமக்கு தெரிவிக்க வேண்டுமென்று ஸ்ரீ கனகதாஸர் ஒரு பெரிய்ய்ய பாடலை பாடியிருக்கிறார். ஒவ்வொரு நாமாவுக்கும் கடவுளிடம் ஒரு வேண்டுகோள், இரண்டு வரி. வேண்டுகோள்னா உங்களுக்கே தெரிஞ்சிருக்கும் - கிரைண்டர், மிக்சி இதெல்லாம் கிடையாது. அவன் கருணைப் பார்வை மட்டுமே.

மிகப் பெரிய பாடல் ஆகையால், இரண்டு பகுதியா பிரிச்சி போடறேன். இதற்கு சரியான காணொளியும் கிடைக்கலை. வெறும் ஒலிதான். அதை இரண்டு பதிவிலும் இணைத்திருக்கிறேன். கேட்டு ரசிங்க. வித்யாபூஷணரின் குரலில் இந்த மிக மிக அழகான பாடலை கேட்டு மகிழுங்கள்.

ஈச நின்ன சரண பஜனே ஆசேயிந்தா மாடிதேனோ தோஷராசி நாச மாடோ ஸ்ரீச கேசவ!
ஈசனே உன் பாதத்தை ஆசையுடன் வணங்கி பஜனை செய்தேன் நான் செய்த பாவத்தை நாசம் செய்வாம் ஸ்ரீ கேசவனே.

சரணு ஹொக்கேனய்யா என்ன மரண சமயதல்லி நின்ன சரண ஸ்மரணே கருணிசய்யா நாராயணா!

உன் பாதத்தை விடமாட்டேன், என்னை மரண சமயத்தில் உந்தன் சரணத்தை நினைக்கும்படி வைப்பாய் நாராயணா.
சோதிசென்ன பவத கலுஷ போதிசய்யா ஞானவெனகே பாதிசுவ யமன பாதே பிடிசு மாதவா!

வாழ்க்கையின் கஷ்டங்களை போக்கி, ஞானத்தை கொடுப்பாய் யமனால் ஏற்படும் துன்பத்திலிருந்து விடுவிப்பாய் மாதவா.

ஹிந்தனேக யோனிகளல்லி பந்து பந்து நொந்தேனய்யா இந்து பவத பந்த பிடிசோ தந்தே கோவிந்தா!

நிறைய பிறவிகள் எடுத்து வந்து நொந்து போயுள்ளேன் இந்த பந்த பாசத்திலிருந்து என்னை விடுவிப்பாய் கோவிந்தா.

ப்ரஷ்டனெனிச பேட கிருஷ்ணா இஷ்டு மாத்ர பேடிகொம்பே சிஷ்டரொடனே இஷ்டு கஷ்ட பிடிசு விஷ்ணுவே!

சுயநலவாதி என்றெண்ணாமல் இது மாத்திரம் செய்துவிடு நல்லவர்களுக்கு கஷ்டத்தை கொடுக்காதே விஷ்ணுவே.

மதனனய்யா நின்ன மஹிமே வதனதல்லி நுடியுவந்தே ஹ்ருதயதொளகே ஹுுதுகிசய்யா மதுசூதனா!
மன்மதனின் தந்தையே, உன் மகிமையை என் வாயால் எப்போதும் பாடுவதற்கு இதயத்திலே (உன் மகிமையை) வைத்திருப்பாய் மதுசூதனா.

கவிதுகொண்டு இருவ பாப சவிது போகுவந்தே மாடோ ஜவன பாதேயன்னு பிடிசோ ஸ்ரீ த்ரிவிக்ரம!
என்னை சூழ்ந்திருக்கும் பாபத்தை ஓடஓட விரட்டுவாய் யமனின் செயல் தரும் கஷ்டத்திலிருந்து என்னை காப்பாய் திரிவிக்ரமா.

காமஜனக நின்ன நாமா ப்ரேமதிந்தா பாடுவந்தா நேமவெனகே பாலிசய்யா ஸ்வாமி வாமனா!
மன்மதனின் தந்தையே உன் நாமத்தை ப்ரேமத்துடன் பாடுவதை ஒரு வழக்கமாக வைத்துக்கொள்ள அருள்வாய் வாமனா.

மொதலு நின்ன பாத பூஜே ஒதகுவந்தே மாடோ என்ன ஹ்ருதயல்லி சதன மாடோ முததி ஸ்ரீதரா!
காலையில் (முதல்வேலையாக) உன் பாதபூஜை செய்ய அருள்வாய் என் இதயத்தில் வாசம் செய்வாய் ஸ்ரீதரா.

ஹுுசியனாடி ஹொட்டே ஹொரெவ விஷயதல்லி ரசிகனெந்து ஹுுசிகே ஹாகதிரோ என்ன ரிஷிகேசனே!
வெறும் பொய்களைச் சொல்லி (சம்பாதித்து) வயிற்றை ரொப்பும் மனிதனென்று எண்ணி என்னை புறக்கணித்துவிடாதே ரிஷிகேசனே.

பித்து பவதனேக ஜனும பத்தனாகி கலுஷதிந்தா கெத்துபோப புத்தி தோரோ பத்மனாபனே!

எல்லா ஜென்மங்களிலும் பாவங்களையே செய்து வந்திருக்கிறேன் - இதை வெல்லும் புத்தியைக் கொடு பத்மநாபனே.

காமக்ரோத பிடிசி நின்ன நாம ஜிஹ்வெயொளகே நுடிசோ ஸ்ரீ மஹானுபாவனாத தாமோதரா!

காம, க்ரோதங்களிலிருந்து விடுவித்து, உன் பெயரையே என் நாவில் இருக்கச் செய்வாய் எல்லோருக்கும் தலைவனான தாமோதரனே.

**<u>கேசவ முதலான 24 நாமாக்கள் - பகுதி 2 of 2</u>**

அந்த நாராயணனின் அருமை பெருமைகளை எழுதுவதால் என்ன பயன்? இதற்கு ஸ்ரீ கனகதாசர் அருமையாக ஒரு பயனை சொல்கிறார், இந்த பாடலின் கடைசி பத்தியில்.

யாரொருவர் ஹரியின் பெயர்களை மறக்காமல் கேட்கிறார்களோ, எழுதுகிறார்களோ, காகிநெலே ஆதிகேசவன் அவர்களை கூப்பிட்டு முக்தி கொடுப்பான்.

கூப்பிட்டு கொடுப்பான் என்று சொல்கிறார். இதைவிட பேரானந்தம் வேறு ஏதாவது இருக்கமுடியுமா என்ன?

***

இப்போ பாடலின் தொடர்ச்சி:

பங்கஜாக்ஷ நேனு என்னா மந்த புத்தியன்னு பிடிசி கிங்கரன்னா மாடிகொள்ளோ சங்கர்ஷணா!

தாமரைக் கண்ணனே, என் மந்த புத்தியை நீக்கி என்னை உன் வேலையாளாக வைத்துக்கொள் சங்கர்ஷணா.

யேசு ஜன்ம பந்தரேனு தாசனல்லவேனொ நானு காசி மாடதிரு இன்னு வாசுதேவனே!

எவ்வளவு ஜென்மம் எடுத்தாலென்ன, நான் உன் வேலையாள்தானே, என்னை காயப்படுத்தாதே வாசுதேவனே.

புத்தி சூன்யனாகி என்ன பத்த கார்ய குஹகமனவ தித்தி ஹ்ருதய சுத்தி மாடோ ப்ரத்யும்னனே!

ஞானமில்லாமல் செய்த கெட்ட செயல்களினால், என் மனதில் கெட்ட எண்ணங்கள் வந்துவிட்டது. அதை சுத்தப்படுத்து பிரத்யும்னனே.

ஜனனிஜனக நீனே எந்து நெனெவேனய்யா தீனபந்து எனகே முக்தி பாலிசய்யா அனிருத்தனே!

என் தாயே, தந்தையே, கஷ்டப்படுபவர்களுக்கு உதவுபவனே, எனக்கு முக்தியை கொடு அநிருத்தனே.

ஹருஷதிந்தா நின்ன நாமா ஸ்மரிசுவந்தே மாடு நேமா விரிசு சரணதல்லி புருஷோத்தமா!

தூய்மையான மனதுடனும், சந்தோஷத்துடனும் என்றும் உன் பெயரை ஜபித்து உன் காலடியில் நான் இருக்குமாறு செய்வாய் புருஷோத்தமா.

சாதுசங்க கொட்டு நின்ன பாதபஜனெயிட்டு என்ன பேதமாடி நோடதிரோ ஸ்ரீ அதோக்ஷஜா!

என்னை வேற்று மனிதராக நினைக்காமல், நல்ல மனிதர்களின் நட்பைத் தருவாய், உனக்கு சேவை செய்யும் பாக்கியத்தை தருவாய் அதோக்ஷஜனே.

சாரு சரண தோரி எனகே பாருகாணிசய்யா கொனேகே பார ஹகுதிருவே நினகே நாரசிம்ஹனே!

உன் காலடியை காட்டி எனக்கு, கடைசியில் முக்தியை கொடுப்பாய், உன்னையே நம்பியிருக்கிறேன் நாரசிம்ஹனே.

சஞ்சிதார்த்த பாபகளனு கிஞ்சிதாத பீடேகளனு முஞ்சிதவாகி களேது பொரெயோ ஸ்வாமி அச்சுதா!

சென்ற ஜென்மங்களில் சேர்ந்துவிட்ட பாவங்களையும், மீதமிருக்கும் கஷ்டங்களையும் களைந்து என்னை நீயே காப்பாற்ற வேண்டும் அச்சுதனே.

ஞான பக்தி கொட்டு நின்னா த்யானதல்லி இட்டு சதா ஹீனபுத்தி பிடிசு முன்ன ஸ்ரீ ஜனார்த்தனா!

ஞானத்தையும் பக்தியையும் கொடுத்து, உன்னைப் பற்றிய தியானத்திலேயே என்னை இருக்கச் செய்து, என் மனதில் இருக்கும் கெட்ட எண்ணங்களை விலக்கிடுவாய் ஸ்ரீ ஜனார்தனா.

ஜபதபானுஷ்டான வில்லதே குபதாகமியாத என்ன க்ருபேயமாடி க்ஷமிசபேகு உபேந்திரனே!

ஜபங்கள், தபங்கள் எதுவும் செய்யாது, கெட்ட வழியில் சென்ற என்னை தயவு செய்து மன்னித்து அருளவேண்டும் ஸ்ரீ உபேந்த்ரனே.

மொரெய இடுவெனய்யா நினகே ஷரதி சயன சுபமதிய இரிசு பக்தனெந்து பரமபுருஷ ஸ்ரீ ஹரி!

பாற்கடலில் படுத்திருக்கும் பரமபுருஷனே, உன்னை வேண்டிக் கொள்கிறேன், என்னை உன் பக்தனென்று எண்ணிக் கொண்டு, எனக்கு நல்ல புத்தியைக் கொடுப்பாய், ஸ்ரீ ஹரியே.

புட்டிசலேபேட இன்னு புட்டிசிதகே பாலிசென்னா இஷ்டு மாத்ர பேடிகொம்பே ஸ்ரீ கிருஷ்ணனே!

என்னுடைய ஒரே ஒரு வேண்டுகோள் என்னவென்றால், எனக்கு இன்னொரு ஜென்மமே வேண்டாம்; இந்த ஜென்மம் கொடுத்துவிட்டாய், அதனால் நீயே காப்பாற்றியும்விடு, ஸ்ரீ கிருஷ்ணனே.

சத்யவாத நாமகளனு நித்யதல்லி பதிசுவவரா அர்தியிந்தா சலஹுவனு கர்த்ரு கேசவா!

(மேற்கூறிய) கடவுளின் பெயர்களை யார் சொல்கிறார்களோ, சந்தேகமில்லாமல் அவர்களை காப்பான் ஸ்ரீ கேசவன்.

மரேயதலே ஹரியநாம பரெது ஓடி கேளிதவகே கரெது முக்தி கொடுவா நெலெ ஆதிகேசவா!

யாரொருவர் ஹரியின் பெயர்களை மறக்காமல் கேட்கிறார்களோ, எழுதுகிறார்களோ, காகிநெலே ஆதிகேசவன் அவர்களை கூப்பிட்டு முக்தி கொடுப்பான்.

**ஸ்ரீ ராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே**

ஒரே சமயத்தில் பல இடங்களில் இருப்பது, எல்லா குழந்தைகளும் ஒருவராகவே தெரிவது - இந்த மாயையெல்லாம் இறைவன் எப்போது காட்டுகிறார்? டக்குன்னு சொல்லிடுவீங்க.

சிறுவனாக மாயைகளை காட்டுவதும்; பின்னாளில் (கீதையை உபதேசித்து) மாயைகளை நீக்குவதும் கிருஷ்ண அவதாரத்தில்தானே.

நிற்க.

இந்த மாயாஜாலங்களை கிருஷ்ண அவதாரத்துக்கு ரிசர்வ் செய்து வைத்திருந்தாலும், ரொம்ப நாளைக்கு முன், ராமாவதாரத்திலேயே நமக்கு ஒரு ச்சின்ன முன்னோட்டம் கிடைத்து விடுகிறது.

அட, அது எப்படி?

அதுதான் இன்றைய பாடல். ஸ்ரீ புரந்தரதாசருடையது.
***

ராம ராவண யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. இந்திரஜித் மரணமடைந்த தருணத்திற்கு வருவோம். ராவணன் தன்னுடைய core சேனையை யுத்தத்துக்கு அனுப்புகிறான். இந்த சேனையில் இருக்கும் ஒவ்வொருவரும் ராவணன் அளவுக்கு பலம் வாய்ந்தவர்கள். இந்த சேனை நகர்ந்து வரும்போது தூசி பறந்து அந்த இடத்தையே மறைத்ததாம். ஈட்டிகளின் உரசல்கள் காட்டுத்தீ அளவுக்கு தீயை வளர்த்ததாம்.

எண்ணிக்கையில் மிகவும் அதிகமான இந்த ராவண சேனையைக் கண்டு, வானர சேனைகள் பயந்து ஓடின. சுக்ரீவன், நீலன், அங்கதன் ஆகியோர் வானர சேனையை கட்டுப்படுத்த முயற்சி செய்தனர். அவர்களால் முடியவில்லை. மெல்ல மெல்ல ராவண சேனை, வானரர்களை அழித்துக் கொண்டே வந்து, ராமனையும் நெருங்கியது.

தனியொருவனாக ராமன், மிகப்பெரிய ராவண சேனையை எப்படி எதிர்கொள்வான்? அவனால் முடியுமா, முடியாதா என்று மற்றவர்கள் எண்ணிக் கொண்டிருக்க, ராமன் யுத்தத்தை துவக்குகிறான். ராமன் விட்ட அம்புகள் மழை போல் தொடர்ந்து சென்று ராவண சேனைகளை அழிக்க ஆரம்பித்தன. எப்போது அம்பை எடுக்கிறான், எப்போது வில்லில் தொடுக்கிறான், எப்போது அதை விடுவிக்கிறான் என்பதே தெரியாமல் மிகமிக வேகமாக யுத்தம் செய்கிறான் ராமன்.

ஆனாலும், ராவண சேனைகள் மிக அதிகமான எண்ணிக்கையில் இருப்பதால் வேறொரு உபாயம் செய்தே அவர்களை முடிக்க வேண்டும் என்று எண்ணுகிறான். இப்போதுதான், மேலே சொன்ன அந்த 'முன்னோட்டம்' வருகிறது.

பூம்.

திடீரென்று சண்டையிட்டுக் கொண்டிருக்கும் அனைத்து வீரர்களும், மற்றவர்களுக்கு ராமனைப் போலவே காட்சி தருகின்றனர். இங்கே பார்த்தால் ராமன். அங்கே ராமன். யாரைப் பார்த்தாலும் ராமனைப் போலவே தெரிகிறது. யுத்தகளத்தில் இடமே இல்லாமல், எல்லா இடத்திலும் ராமன். திடீரென்று எப்படி இவ்வளவு ராமன் வந்தான் என்று அனைவருக்கும் குழப்பம்.

ராவண சேனைகளுக்கு பயங்கர கோபம். ராமனாக தெரிபவர்களை எல்லாம் கொல்ல ஆரம்பித்தனர். அதாவது தங்கள் சேனையிலிருப்பவர்களையே கொன்றனர். இப்படியே எதிரிகள் தங்களை தாங்களே கொன்று அழிய ஆரம்பித்தனர்.

இந்தப் பக்கம், வானரர்கள். ஒரே ஒரு ராமன் இருந்தாலே அவனுக்கு சேவைகள் செய்து மகிழ்பவர்கள். இப்போது பற்பல ராமன்கள். ஆனந்தம் தாங்கவில்லை அவர்களுக்கு. ஆடுகின்றனர். பாடுகின்றனர். தலைகால் புரியவில்லை. இப்படி அனைத்து ராவண சேனையும் அழிந்தபிறகு, ராமன் இந்த மாயையை நிறுத்தி, மறுபடி ஒருவனாக நின்றான். ராமாயணத்தில் வரும் இந்த யுத்தக் காட்சியை, ஸ்ரீ புரந்தரதாசர் அப்படியே தன எளிமையான கன்னடத்தில் பாடியிருக்கிறார்

அல்லி நோடலு ராம இல்லி நோடலு ராம
எல்லெல்லி நோடிதரல்லி ஸ்ரீ ராம

அங்கு பார்த்தாலும் ராமன் இங்கு பார்த்தாலும் ராமன்
எங்கெங்கு பார்த்தாலும் அங்கு ஸ்ரீ ராமன்

ராவணன மூலபல கண்டு கபிசேனே
ஆவாகலே பெதரி ஓடிதவு
ஈவேளே நரனாகி இரபார தென்தெணிசி
தேவ ராமச்சந்திர ஜகவெல்ல தானாத (அல்லி)

ராவணனின் முக்கிய படையினரின் பலத்தைப் பார்த்த வானர சேனைகள் உடனடியாக அடித்துப் பிடித்து ஓடியது இனிமேல் (சாதாரண) மனிதனாக இருக்கக்கூடாது என்றெண்ணிய ராமன் உலகம் முழுக்க அவனே வியாபித்தான். (பற்பல அவதாரங்கள் எடுத்தான்).

அவனிகே இவ ராம இவனிகே அவ ராம
அவனியோள்ளுபரி ரூப உண்டே
லவ மாத்ரதி அசுர துருவலெல்லரு
அவரவர் ஹோடெதாடி ஹதராகி ஹோதரு (அல்லி)

அவனுக்கு இவன் ராமன் இவனுக்கு அவன் ராமன் உலகத்தில் ராமனைத் தவிர இன்னொரு ரூபமும் உண்டோ இது நடந்த உடனே, அசுரர்களின் பக்கத்தில் ஒருவரையொருவர் அடித்துக் கொண்டு வீழ ஆரம்பித்தனர்

ஹனுமதாதி சாது ஜனரு அப்பி கொண்டு
குணிகுனி தாடிதரு ஹருஷ திந்தா
க்ஷண தல்லி புரந்தர விட்டல ராயனு
கொனேகொனேயனு தானொப்பனாகி நிந்தா (அல்லி)

அனுமன் முதலாத வானர சேனைகள் (ஒருவரையொருவர்) கட்டிப் பிடித்துக் கொண்டு குதித்து குதித்து ஆடினர் சந்தோஷத்துடன் உடனே (ஒரு நிமிடத்தில்) புரந்தர விட்டலனான ஸ்ரீ ராமன் தன் அனைத்து ரூபங்களையும் மறைத்துக் கொண்டு ஒருவனாகி நின்றான்.

**ஸ்ரீ ராகவேந்திரைக் குறித்த இன்னொரு பாடல்.**

ஸ்ரீ ராகவேந்திரரைக் குறித்து ஹரிதாஸர்கள் பற்பல பாடல்கள் பாடியுள்ளனர். இன்று பார்க்கப் போகும் இந்த பாடலை இயற்றிவர் ஸ்ரீ அபினவ ஜனார்த்தன தாஸர். கிபி1727ம் ஆண்டு அவதரித்த இவர், ஏகப்பட்ட பாடல்களை பாடியுள்ளார். அதில் பல ஸ்ரீ ராகவேந்திரரைக் குறித்தே ஆகும். இந்த தளத்தில் ஸ்ரீ அபினவ ஜனார்த்தன தாஸரின் முதல் பாடல் இதுவாகும்.

***

ஸ்ரீ ராகவேந்திரருக்கு அறிமுகம் தேவையில்லை. துங்கபத்ரா நதிக்கரையில், மந்திராலயத்தில் பிருந்தாவனம் அடைந்திருக்கும் ஸ்ரீ ராகவேந்திரர், பற்பல பேர்களுக்கு கற்பகவிருட்சமாய், காமதேனுவாய், கேட்கும் வரங்களை தவறாது கொடுக்கும் வள்ளலாய் இருக்கிறார்.

இப்போது பாடல்.

***

துங்கா தீரதி நிந்த சுயதிவரன் யாரே பேளம்மையா
சங்கீதப்ரிய மங்கள சுகுணித ரங்க முனிபுலோத்துங்கா கணம்மா

துங்கா நதி தீரத்தில் வீற்றிருக்கும் அந்த முனி யாருன்னு சொல்லம்மா இசையைப் பிடித்தவராய், மங்களகரமாய் நல்ல குணத்துடன் இருக்கும் அந்த முனிவர் யாருன்னு சொல்லம்மா

செல்வ சுமுக பனியல்லி திலக நாமகளு பேளம்மையா
ஜலஜ மணிய கொரளலு துளசி மாலேகளு பேளம்மையா
சுலலித கமண்டல தண்டவன்ன தரிதிஹனே பேளம்மையா
குலஹிரண்யகனல்லி ஜனிசித ப்ரஹ்லாதனு தானில்லிதனம்மா (துங்கா)

அமைதி தவழும் முகத்தில், நெற்றியில் திலகம் இருக்கும் கலகலக்கும் மணிகளையுடைய துளசி மாலைகள் கழுத்தில் இருக்கும் கைகளில் கமண்டலமும், தண்டமும் ஏற்றிருப்பார் ஹிரண்யாசுரனின் குலத்தில் உதித்த பிரகலாதனின் அவதாரமே இவர் (துங்கா)

சுந்தரசரணரவிந்த சுபகுதியலிந்தா பேளம்மையா
வந்திஸி ஸ்துதிசுவ பூசுரரு பலுவிருந்தா பேளம்மையா
ஜண்ட தளங்க்ரிதியிந்த ஷோபிசுவ ஆனந்தா பேளம்மையா
ஹிந்தே வியாசமுனியெந்தெணிசித கர்மந்திகளரசனதிந்த ரஹிதனே (துங்கா)

அவருடைய அழகான பாதங்களில் மிகவும் பக்தியுடன் வணங்கி, போற்றி, பாடும் மக்கள் அனைவருக்கும் எண்ணிக்கையிலடங்கா ஆனந்தத்தைத் தரும் இவர் முன்னர் வியாச பகவானாய் அவதரித்தவரே, என்று சொல்லம்மா (துங்கா)

அபினவ ஜனார்த்தன விட்டலன தியானிசுவ பேளம்மையா
அபிவந்திபரிகே அகிலார்த்தவ சல்லிசுவ பேளம்மையா
நபமணி யந்ததி பூமியல்லிராஜிசுவ பேளம்மையா
சுபகுண நிதி ஸ்ரீ ராகவேந்திரயதி அபுஜபவண்டதல்லி ப்ரபலகணம்மா (துங்கா)

அபினவ ஜனார்த்தன விட்டலனை தியானிப்பவர்களுக்கு பூஜிப்பவர்களுக்கு உலகத்தில் இருக்கும் சந்தோஷங்கள் அனைத்தும் கிடைக்கும் இந்த பூமியை ஆளும் நற்குணங்களையுடைய ஶ்ரீ ராகவேந்திரர், உலகம் முழுக்க பிரபலமானவரென்று சொல்லம்மா (துங்கா)

**சுத்தி சுத்தி குழப்பியடிக்கும் ஒரு கண்ணன் பாட்டு!**

ஹரிதாசர்கள் பாட்டுன்னா எப்படி இருக்கும்?

கிருஷ்ணா நீ பேகனே பாரோ.
அல்லி நோடலு ராமா இல்லி நோடலு ராமா.

இப்படி பெரும்பாலும் மிகவும் எளிமையாக, கன்னடமே தெரியலேன்னாக்கூட தட்டுத் தடுமாறி, ஓரளவுக்கு புரிஞ்சிக்கக்கூடியதா இருக்கும். ஆனா, இன்னிக்கு பார்க்கப் போகிற பாடல் அப்படி இல்லை.

ஸ்ரீ கனகதாசர் எழுதியுள்ள - ஈதநீக வாசுதேவனு - என்ற இந்த பாடல் - முழுக்க முழுக்க குறியீடுகளால் நிரம்பியுள்ளது. மற்ற பாடல்களைப் போல் எளிதாக விளக்கமுடியாமல் எவ்வளவு விரிவாக சொல்ல வேண்டியிருக்குன்னு நீங்களே பாருங்க. ஒவ்வொரு வார்த்தையும் பிரித்து எழுதி, அதன் பொருளை புரிந்து கொண்டு, பிறகு மொத்த சரணத்தையும் ரசிச்சி அனுபவிக்குமாறு இருக்கும். மொதல்லே இந்த பாடலையும், அதன் பொருளையும் பாத்துடுலாம்.

****

ஈதநீக வாசுதேவனு லோகதொடேயா
தாசகொலிது தேரலேறி தேஜி பிடிது நடேசிதாத (ஈதநீக)

உலகத்தைக் காக்கும் கடவுள், இந்த வாசுதேவன் இவனே
தன் பக்தனுக்காக தேரேறி சாரதியாக சென்றவன் இவனே

தனுஜேயாள்வ தன்னநய்யன பிதன முந்தே கௌரவேந்திரன
அனுஜயாளிதவன சிரவ கத்தரிசுதா
அனுஜயாளிதவன பெங்கி முட்டதந்தே காய்தா ருக்மன
அனுஜயாளிதவன மூர்த்தியன்னு நோடிரோ (ஈதநீக)

சூரிய அஸ்தமனத்திற்கு முன் ஜயத்ரதனின் தலையை துண்டிப்பேன் - இல்லையேல் தீக்குளிப்பேன் என்று சொன்ன அர்ஜுனனை தீக்குளிக்காமல் காத்த ஸ்ரீ வாசுதேவனின் அழகான மூர்த்தியை பாருங்கள் (ஈதநீக)

க்ரூரனாத பணிபபான தருணிஜனு நிரீக்ஷிசி யாக
வீரநெஜ்ஜே எசுகே ஒப்புதன்னு ஈக்ஷிசி
தாருணிய பததளொங்கி சரண பஜப நரன காய்தா
பாரகர்த்தனாத தேவ ஈத நோடிரோ (ஈதநீக)

சூரிய புத்திரனான கர்ணன் போரின்போது நாகாஸ்திரத்தை அர்ஜுனன் மேல் எய்தபோது பூமியை காலால் அழுத்தி தேரை கீழே அழுத்தி அர்ஜுனனைக் காத்த ஸ்ரீ கிருஷ்ணனை பாருங்கள் (ஈதநீக)

வ்யோமகேஷ இப்ப தெஷேய ஆமஹா மஹிமேயுள்ள
சாமஜவனு ஏறி பருவ சக்தியனு ஈக்ஷிசி
பிரேமதிந்தா எரவநோட்டி டிங்கரிகன காய்தா
சார்வபௌம படதாதி கேசவன நோடிரோ (ஈதநீக)

ஈசன் இருக்கும் திசையிலிருந்து மிகவும் பலம் பொருந்திய யானையின் மீதேறி வந்து சண்டையிட்ட (பகதத்தனின்) விஷ்ணு அஸ்திரத்தை தன் மார்பில் மாலையாக ஏந்தி அர்ஜுனனைக் காத்த அந்த கேசவனை பாருங்கள் (ஈதநீக)

***

என்னடா, பாட்டுக்கும் பொருளுக்கும் சம்மந்தம் இருக்கற மாதிரியே தெரியலையேன்னு நினைக்கிறீங்களா? பொறுமை பொறுமை.

இப்போ பாடலின் விளக்கம். முதலில் பல்லவி, பிறகு ஒவ்வொரு சரணமா பார்க்கலாம். ரெடி? ஜூட்.

பல்லவி:
அருஞ்சொற்பொருள்:

ஈத = இவர்
ஈக = இப்போ
தாசகொலிது = தாச + கொலிது = பக்தன், இந்த இடத்தில், அர்ஜுனன். So, அர்ஜுனனைக் காப்பாற்ற
தேஜி = குதிரை

விளக்கம்:
தன் பக்தன் அர்ஜுனனைக் காப்பாற்ற, தேரிலேறி பார்த்த-சாரதியாய் சென்ற, இந்த உலகத்தை ரட்சிக்கும் வாசுதேவன் இவனே.

சரணம் 1:
அருஞ்சொற்பொருள்:

தனுஜே = த + அனுஜே = அரக்கன் + சகோதரி = அரக்கனின் சகோதரி = (மகாபாரதத்தில் வரும்) ஹிடிம்பா

ஆள்வ தன்னநய்யன பிதன = ஆள்வ + அண்ண + அய்யன + பிதன = கணவனின் அண்ணனின் தந்தையின் தந்தை. அதாவது, ஹிடிம்பாவின் கணவன் பீமன், அவர் அண்ணன் தருமர், அவர் தந்தை யமதேவன் (அம்சம்), அவர் தந்தை சூரியதேவன்.
கௌரவேந்திரன அனுஜெயாளிதவன = கௌரவேந்திரனின் + அனுஜே + ஆளிதவன. அதாவது, துரியோதனின் + சகோதரியின் + கணவனின் = ஜயத்ரதனின்

மூன்றாம் வரி:
அனுஜெயாளிதவன பெங்கி முட்டதந்தே காய்த
அனுஜே + ஆளிதவன = சகோதரியின் + கணவன் = (கிருஷ்ணனின் சகோதரி) சுபத்ராவின் கணவன் அர்ஜுனன்.
பெங்கி = நெருப்பு
முட்டதந்தே = சுடாமல்,
எரிக்காமல் காய்த = காப்பாற்றிய அதாவது, அர்ஜுனனை நெருப்பு சுடாமல் காப்பாற்றிய

நான்காம் வரி:

அனுஜே + ஆளிதவன = சகோதரியின் + கணவன் = (ருக்மனின்) சகோதரி ருக்மிணி. அவர் கணவர் கிருஷ்ணன்.
மூர்த்தியன்னு நோடிரோ = ரூபத்தை பாருங்கள்.

விளக்கக் கதை:

சக்கர வியூகத்துக்குள் நுழைந்த அபிமன்யு, வெளியில் வர முடியாதவாறு அந்த வியூகத்தை மூடிய ஜெயத்ரதனே, அபிமன்யுவின் மரணத்திற்கு காரணம் என்ற அர்ஜுனன், அடுத்த நாள் மாலைக்குள், ஜயத்ரதனை கொல்வேன் என்று சபதம் செய்தான். அப்படி கொல்ல முடியாவிடில், அன்று மாலையே நெருப்பில் குதித்து தன்னுயிரையும் மாய்த்துக் கொள்வேன் என்றும் கூறினான். பின்னர் கிருஷ்ணனின் உதவியால், ஜயத்ரதனை கொன்றான் அர்ஜுனன். இப்படியாக, அர்ஜுனன் உயிருக்கு பங்கம் வராமல், அர்ஜுனனைக் காப்பாற்றினான் கிருஷ்ணன்.

சரணம் 2 :
அருஞ்சொற்பொருள்:

க்ரூரனாத = மிகவும் அபாயமான
பணிபபான = பணிப + பாண = நாகம் + அஸ்திரம் = நாகாஸ்திரம்
தருணிஜனு = தருணி + ஜனு = சூரியனுக்கு + பிறந்த. அதாவது, சூரியனுக்கு பிறந்த, கர்ணன்.
நிரீக்ஷிசி = தக்க சமயத்துக்கு, தக்க சமயத்தில்
வீரநெஜ்ஜே எசுகே = மிகவும் வீரத்துடன், எய்த அம்பு
பப்புதன்னு = வருவதை
ஈக்ஷிசி = பார்த்து
தாருணிய பததளொங்கி = பூமியை காலால் அழுத்தி
சரண பசப நரன காய்த = சரணாகதி செய்த நரனை (அர்ஜுனனை) காப்பாற்றிய
பாரகர்த்த = அனைத்து செயல்களுக்கும் காரணமானவன். அதாவது, பிறப்பு, இறப்பு, காத்தல் ஆகிய அனைத்திற்கும் காரணமான

விளக்கக் கதை:

நாகாஸ்திரத்தை அர்ஜுனன் மேல் மட்டும்தான் பிரயோகிக்க வேண்டுமென்றும், அதுவும் ஒரே ஒருமுறைதான் பயன்படுத்த வேண்டுமென்றும், கர்ணனிடம் குந்தி வரம் பெற்றிருந்தார். அதன்படி, கர்ணன் அதை பிரயோகிக்கும்போது, அர்ஜுனனைக் காக்க வேண்டி, கிருஷ்ணன், பூமியை அழுத்தி, தேரை சற்று கீழே அழுத்தி, அர்ஜுனன் மார்புக்கு வந்த அந்த நாகாஸ்திரத்தை, கிரீடத்தில் படுமாறு செய்து, அர்ஜுனனைக் காப்பாற்றினார்.

சரணம் 3 :
அருஞ்சொற்பொருள்:

வ்யோமகேஷ = வ்யோம + கேஷ = காற்று + முடி. அதாவது, தன் தலைமுடியை காற்றில் வலை போல் விரித்து, பாய்ந்து வரும் கங்கையை அடக்கியதால், சிவனுக்கு 'வ்யோமகேசன்' என்று பெயர்.
இப்ப தெஷேய = இருக்கும் திசையில்.
சாமஜ = யானை
சக்திய = (இந்த இடத்தில்) நாராயண அஸ்திரம்
எரவநோட்டி = இடையில் (நடுவில்) புகுந்து
டிங்கரிகன = தாசனை (பக்தனை)

விளக்கக் கதை:

சிவன் இருக்கும் திசை. அதாவது கைலாயம் இருக்கும் திசை வடகிழக்கு. அந்த திசையில் இருந்த ப்ரக்ஜ்யோதிஷா என்னும் ஊரின் அரசன் பகதத்தன். தன் யானையான 'சுப்ரதீபன்' மீதேறி, கௌரவர்கள் சார்பாக போரிட்ட மாவீரன். அந்தப் போரில் ஒரு முறை, பகதத்தன், வைஷ்ணவாஸ்திரம் என்னும் அஸ்திரத்தை ஏவ, அதனால் அர்ஜுனனுக்கு கண்டிப்பாக மரணம் ஏற்படுமென்று தெரிந்து கொண்ட ஸ்ரீ

கிருஷ்ணன், நடுவில் புகுந்து அதை தன் மார்பில் ஏற்றார். அது அவர் கழுத்தில் மாலையாக விழுந்தது.

***

அவ்வளவுதான். இப்படியாக, இந்த பாட்டில், அர்ஜுனனைக் காப்பாற்றிய கிருஷ்ணனின் மகிமையை புகழ்ந்து பாடியுள்ளார் ஸ்ரீ கனகதாசர். இப்போ மறுபடி அந்த காணொளியை பாருங்கள். சூப்பரா புரியும்.

அனைத்தும் ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம்.

**<u>ஸ்ரீ ரங்கநாதனை பார்க்காத இந்த கண்கள் எதற்கு?</u>**

108 வைணவ திவ்ய தேசங்களில் முதன்மையானதும், மிகச்சிறப்பு வாய்ந்ததுமானது ஸ்ரீரங்கம். திருவரங்கம், பெரியகோயில், பூலோக வைகுண்டம் என்று பலபெயர் கொண்டு போற்றப்படும் இத்திருக்கோயிலில் சயனித் திருப்பவர் ஸ்ரீரங்கநாதர்.

த்வைத, அத்வைத மற்றும் விசிஷ்டாத்வைதத்தை சேர்ந்த மகான்கள் அனைவரும் ஸ்ரீரங்கநாதனைக் குறித்து பாடியுள்ளனர். இவர்கள் பாடிய பாடல்கள் / பாசுரங்கள் இந்த விக்கி பக்கத்தில் அழகாக தொகுக்கப்பட்டுள்ளது.

அதே போல், த்வைத சம்பிரதாயத்தை சேர்ந்த ஹரி-தாஸர்கள் பலரும் ஸ்ரீரங்கநாதனை பாடியுள்ளனர். அவற்றில் ஒரு பாட்டுதான் இன்று பார்க்கப் போவது.

***

புரந்தர தாஸர், விஜயதாஸர் இவர்களுக்கெல்லாம் முதல்மையானவர் - தாஸர்களுக்கெல்லாம் பிதாமகர் - என்று அழைக்கப்படுபவர் - ஸ்ரீ பாதராயர் ஆவார். வாழ்ந்த ஆண்டு 1420 - 1486. ஏகப்பட்ட கன்னட பக்தி பாடல்களை இயற்றியுள்ள ஸ்ரீ பாதராயர், துருவரின் அவதாரமாக கருதப்படுபவர்.

கன்னடத்தில் செய்யப்படும் எந்த கதாகாலட்சேபத்திலும் முதலில் சொல்லப்படும் ஸ்லோகத்தில், ஸ்ரீபாதராயருக்கு வந்தனம் செய்து துவக்குவதே மரபாக உள்ளது. அந்த ஸ்லோகம் இதோ.

நம: ஸ்ரீபாதராஜாய நமஸ்தே வியாஸயோகினே
நம: புரந்தரார்யாய விஜயார்யாய தே நம:

கிருஷ்ணா நீ பேகனே பாரோ - என்று பாடிய ஸ்ரீ வியாஸராயருக்கு வித்யாகுருவானவர் நம் ஸ்ரீபாதராயர்.

தன் எல்லாப் பாடல்களின் முடிவிலும் ‘ரங்க விட்டலா’ என்று முத்திரையை பதித்து பாடிய ஸ்ரீ பாதராயர், கர்னாடகாவில் முளபாகலு என்னும் இடத்தில் பிருந்தாவனஸ்தரானார்.

இன்று இவரின் புகழ்பெற்ற பாடலான ‘கண்களித்யாதகோ’வை பார்க்கலாம்.

கண்களித்யாதகோ
காவேரி ரங்கன நோடதா

இந்த கண்கள் எதற்கு
காவேரி ரங்கனை பார்க்காமல் (கண்களித்யாதகோ)

ஜகங்களொளகே மங்கள மூருத்தி
ரங்கன ஸ்ரீ பாதங்கள நோடதா (கண்களித்யாதகோ)

இந்த உலகத்தில் மிக அழகான வடிவான
ஸ்ரீ ரங்கனாதனின் பாதங்களை பார்க்காமல் (கண்களித்யாதகோ)

எந்திகாத ரொம்மே ஜனரு
பந்து பூமியல்லி நிந்து
சந்திர புஷ்கரணி ஸ்நானவ மாடி
ஆனந்த திந்தலி ரங்கன நோடதா (கண்களித்யாதகோ)

என்றாவது (ஒரு நாளாவது) இந்த மக்கள்
வந்து இந்த புண்ணிய பூமியில் நின்று
சந்திர புஷ்கரணியில் நீராடி
ஆனந்தத்துடன் ஸ்ரீ ரங்கனை பாராமல் (கண்களித்யாதகோ)

ஹரி பாதோதக சம காவேரி
விரஜா நதியல்லி ஸ்நாநவ மாடி
பரம வைகுண்ட ரங்கன மந்திர
பர வாசுதேவன நோடதா (கண்களித்யாதகோ)

ஹரியின் பாதம் பட்ட நீருக்கு சமமானதும்
பூலோக விரஜா நதியுமான காவேரியில் குளித்து
வைகுண்ட ராஜனான ரங்கனின் கோயிலில்
அந்த வாசுதேவனை காணாமல் (கண்களித்யாதகோ)

ஹார ஹீர வைஜயந்தி
தோர முத்தின ஹார பதக
தேரனேறி பீதிலி பருவ
ஸ்ரீரங்க விட்டல ராயன நோடதா(கண்களித்யாதகோ)

வைரம் மற்றும் வைஜயந்தியினாலான மாலை
முத்து இழைத்த பதக்கத்துடன்
தேரில் ஏறி வீதியில் பவனி வரும்
ஸ்ரீரங்க விட்டலனை பார்க்காமல் (கண்களித்யாதகோ)

***

பாடலில் வரும் விரஜா நதியைப் பற்றிய ஒரு சிறு குறிப்பு:

சொர்க்கத்தில் இருக்கும் நதியின் பெயர் விரஜா நதி என்று சொல்லப்படுகிறது. அந்த நதியில் ஒரு முறை முங்கி எழுந்ததும், ஆத்மாவிற்கு சம்சார பந்தங்கள் அனைத்தும் அறுந்து, அதுவரை செய்த பாவங்கள் அனைத்தும் போய்விடுமாம்.

**கூப்பிட்டால் வரக்கூடாதா?**

தாசர் பாடல் போட்டிகளில் பங்கேற்று பாடுபவர்கள், மிகமிக சின்னதாய், எளிமையாய் சில பாடல்களை தேர்ந்தெடுத்து, அதை மனப்பாடம் செய்து கொண்டு பாட ரெடியாய் இருப்பார்கள். புகழ்பெற்ற சில பாடல்கள் எல்லார் பட்டியலிலும் இருக்கும். அப்படி எளிமை, இனிமை, ச்சின்னது இப்படி எல்லா அளவுகோலிலும் வெற்றி பெற்று, அனைவர் பட்டியலிலும் இடம் பிடிக்கும்படியான ஒரு பாடல்தான் இன்னிக்கு பார்க்கப் போகிறோம்.

’கரெதரே பரபாரதே’ என்னும் இந்தப் பாடலை பாடியவர் கமலேஷ விட்டலதாசர். வாழ்ந்த காலம் 1780AD. 'கமலேஷ விட்டலா' என்னும் முத்திரையை இணைத்து பற்பல பக்திப் பாடல்களை பாடியவர் இவர். மந்திராலய மகான் ஸ்ரீ ராகவேந்திரரைக் குறித்து பாடப்பட்டுள்ளது இந்த பாடல்.

கரெதரே பரபாரதே
குரு ராகவேந்திரா (கரெதரே)

கூப்பிட்டால் வரக்கூடாதா

குரு ராகவேந்திரா (கரெதரே)

வர மந்திராலய புர மந்திர தவ
சரண சேவகரு கரவா முகிது (கரெதரே)

(புனித தலமான) மந்திராலயத்தில் உங்கள் கோவிலின் முன் நின்று
சேவை செய்யும் பக்தர்கள் கைகூப்பி தொழும்போது (கரெதரே)

ஹரிதாசரு சுஸ்வர சம்மேலதி
பரவசதல்லி பாயி தெரது கூகி (கரெதரே)

ஹரியின் பக்தர்கள் நல்ல ராக, தாளத்துடன்
பக்தி பரவசத்துடன் உன்னை போற்றி பாடி, தொழும்போது (கரெதரே)

பூஷரபித கமலேஷ விட்டலன்ன
தாசகிரேஸரு ஈ சமயதல்லி (கரெதரே)

மன்மதனின் தந்தையான கமலேஷ விட்டலனே
உன் தாசர்கள் உன்னை வணங்கும் இந்த தருணத்தில் (கரெதரே)

***

பூஜ்யாய ராகவேந்திராய சத்யதர்ம ரதாயச
பஜதாம் கல்பவிருக்ஷாய நமதாம் காமதேனவே

அவரைக் குறித்து பஜிப்பவர்களுக்கு கல்பவிருக்ஷமாகவும், அவர் பெயரை ஜபிப்பவர்களுக்கு அனைத்தையும் காமதேனுவுமாய் இருப்பவர் ஸ்ரீ ராகவேந்திரர் என்று இந்த சுலோகம் சொல்கிறது.

**பூச்சாண்டியை கூப்பிடாதேம்மா, பூச்சாண்டியை கூப்பிடாதே!**

கண்ணனின் விளையாட்டுகள், குறும்புகள் தாங்க முடியலை யசோதாவால். ஒரு நாளைப் போல தினமும் புகார்கள் வந்து குவியுது. வெண்ணையை திருடிட்டான், பாலைக் கொட்டிட்டான் அப்படி இப்படின்னு. குழந்தையை திட்டறா. ”என்ன பண்றேன் பாரு, இப்போ. முடியல என்னாலே”. கயிறால் கட்டி போட முயற்சிக்கறா. ம்ஹூம். அதுவும் முடியல. ”கூப்பிடறேன் பாரு பூச்சாண்டியை. அப்பத்தான் நீ அடங்குவே”.

அனைத்தும் அறிந்திருந்தாலும், இந்த உலகத்தையே காப்பவனானாலும், அந்த சமயத்தில் ஒரு குழந்தைதானே. அந்த தாய்க்கு மகன்தானே - பாலகிருஷ்ணன், அப்படியே பயப்படறா மாதிரி நடிக்கிறானாம். நடுங்கினானாம். ”அம்மா. வேணாம்மா. பூச்சாண்டியை கூப்பிடாதே. பயமாயிருக்கு(!!). நீ சொல்ற மாதிரியெல்லாம் கேக்கறேன். என்னை விட்டுடு. இனிமே நல்ல பிள்ளையா நடந்துக்கறேன்”.

ச்சின்ன குழந்தைமேல் தாய்க்கு வரும் கோபம் எவ்வளவு நேரம் தாங்கும். அதன் மழலையான குரலை கேட்கும்வரை. யசோதையும் கண்ணனை அப்படியே வாரியணைத்து முத்தமாரி பொழியறாளாம்.

இந்த காட்சியை ஸ்ரீ புரந்தரதாஸர் அப்படியே இந்த பாடலில் பாடியுள்ளார் - கும்மன கரெயதிரே. பாவம், அந்த குழந்தை ’பூச்சாண்டிக்கு’ பயந்து என்னல்லாம் செய்ய மாட்டேன்னு அம்மாகிட்டே சொல்லுது பாருங்க.

கும்மன கரெயதிரே அம்மா நீனு
கும்மன கரெயதிரே

பூச்சாண்டியை கூப்பிடாதேம்மா, நீ
பூச்சாண்டியை கூப்பிடாதேம்மா

சும்மனே இருவேனு அம்மிய பேடெனு
மம்மு உண்ணுதேனு அம்மா அளுவுதில்லா (கும்மன)

சும்மா இருப்பேன், முலைப்பால் கேட்கமாட்டேன்
உணவு உண்கிறேன், அம்மா இனிமேல் அழமாட்டேன் (கும்மன)

ஹெண்ணுகளிருவல்லிகே அவர
கண்ணு முச்சுவுதில்லவே
சின்னர படியேனு அண்ணன பையேனு
பெண்ணெய பேடேனு மண்ணு தின்னுவுதில்லா (கும்மன)

சிறுமிகள் இருக்குமிடத்தில் போய் அவர்களின்
கண்களை மூடமாட்டேன் (தொந்தரவு செய்ய மாட்டேன்)
சிறியவர்களை அடிக்க மாட்டேன்; அண்ணனை திட்ட மாட்டேன்
வெண்ணையை கேட்க மாட்டேன்; மண்ணைத் தின்ன மாட்டேன் (கும்மன)

பாவிகே போகே காணே அம்மா நானு
ஹாவினொளாடே காணே
ஆவின மொலெயூடே கருகள பிடே நோடே
தேவரந்தே ஒந்து டாவிலி கூடுவே (கும்மன)

கிணற்றடிக்கு போக மாட்டேன் அம்மா நான்
பாம்புகளோடு விளையாட மாட்டேன்

பசுக்களிடத்தில் (பால் குடிக்க) கன்றுகளை விட மாட்டேன்
கடவுளைப் போல் ஒரு இடத்தில் (சும்மா) அமர்ந்திருப்பேன் (கும்மன)

மகன மாதன்னு கேளுத்தா கோபிதேவி
முகுளு நகெயு நகுதா
ஜகதோதடேயனா ஶ்ரீ புரந்தர விட்டலனா
பிகிதப்பி கொண்டளு மோகதிந்தாக (கும்மன)

மகனின் பேச்சைக் கேட்டு தாயானவள்
நமுட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டு
இந்த உலகத்தைக் காப்பவனாகிய ஶ்ரீ புரந்தர விட்டலனை
மிகுந்த பாசத்துடன் வாரியணைத்துக் கொண்டாள். (கும்மன)

**<u>வெங்கி பாலாஜியின் குலதெய்வம் யாரு?</u>**

பல பேருக்கு திருப்பதியில் உள்ள வேங்கடவன் குலதெய்வம். ஆனா, அந்த வேங்கடவனுக்கே குலதெய்வம் யாரு. அவர்தான் இந்த பதிவின் ஹீரோ - ஸ்ரீ நரசிம்மர்

அட ஆமாங்க.

ஸ்ரீனிவாச கல்யாணத்திற்கான திருமண பத்திரிக்கையில் குலதெய்வம் என்ற காலத்தில் 'ஸ்ரீ நரசிம்மரை' போடுமாறு ஸ்ரீனிவாசர் கூறுகிறார். அன்று தயாரிக்கப்பட்ட விருந்து, ஸ்ரீ நரசிம்மருக்கு நைவேத்தியம் செய்தபிறகே அனைவரும் உண்கின்றனர். திருமணம் முடிந்த ஸ்ரீனிவாசரும், லக்ஷ்மி தேவியும், அஹோபிலம் சென்று ஸ்ரீ நரசிம்மரை வணங்கி வழிப்பட்டனர். இவ்விவரங்கள் 'வேங்கடேச மஹாத்மியம்' என்ற நூலில் சொல்லப்பட்டுள்ளது.

***

சத்யம் விதாதும் நிஜப்ருத்ய பாஷிதம்
வ்யாப்தம்ச பூதேஷு அகிலேஷு சாத்மன:
அத்ருஷ்யதாத் அதியத்புத ரூபமுத்வஹன்
ஸ்தம்பே சபாயாம் ந ம்ருகம் ந மானுஷம்.

ஸ்ரீமத் பாகவத்தில் நரசிம்ம அவதாரத்தில் சொல்லப்பட்ட மிகமிக முக்கியமான ஸ்லோகம்.

நாராயணன் தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான் என்று மிக நம்பிக்கையுடன் சொன்ன தன் பக்தனான பிரகலாதனின் வாக்கை காப்பாற்ற வேண்டி, மிருகமும் அல்லாத மனிதனும் அல்லாத ஒரு உருவத்தில் - நரசிம்மனாக - கம்பத்தில் இருந்து தோன்றினான்.

மேற்கண்ட ஸ்லோகத்திற்கு இது ஒரு எளிமையான விளக்கம். ஆனா, இந்த ஒரே ஒரு ஸ்லோகத்தை வைத்தே ஒரு நாள் முழுக்க விளக்கங்களால் பரவசப்படுத்தும் உபன்யாசகர்கள் உண்டு.

***

நரசிம்ம அவதாரத்தைப் பற்றி ஹரிதாஸர்கள் பல்வேறு பாடல்களை பாடியுள்ளனர். அதில் முக்கியமான ஒன்று ஸ்ரீ புரந்தரதாஸரால் பாடப்பட்ட 'சிம்ஹ ரூபனாத ஸ்ரீஹரே'. அதை இன்று பார்ப்போம்.

***

சிம்ஹ ரூபனாத ஸ்ரீஹரே
நாமகிரீஷனே

சிம்ம ரூபத்தில் இருக்கும் ஸ்ரீஹரியே

ஒம்மனதிந்த நிம்மனு பஜிசலு
சம்மததிந்த காய்வனெந்த ஸ்ரீஹரே

ஒருமனதாக உன்னை வணங்கினால்

கண்டிப்பாக காப்பேன் என்று கூறிய ஸ்ரீஹரியே (சிம்ஹ)

தரளனு கரெயே ஸ்தம்பவ பிரியே
தும்ப உக்ரவ தோரிதனு
கரளனு பகெது கொரளொளகிட்டு
தரளன சலஹித ஸ்ரீ நரசிம்ஹனே (சிம்ஹ)

ஹிரண்யகசிபு கூப்பிட்டவுடன் தூணை உடைத்துக்கொண்டு (வந்த நரசிம்மர்)
மிகவும் உக்கிரத்தை காட்டினார்
அவனைக் கொன்று தன் கழுத்தில் மாலையாக போட்டுக்கொண்டு
அனைவரையும் காத்த ஸ்ரீ நரசிம்ஹனே (சிம்ஹ)

பக்தரெல்ல கூடி பஹுதூர ஓடி
பரம சாந்தவனு பேடிதரு
கரெது தன் சிரியனு தொடெயொளு குளிசித
பரம ஹருஷவனு பொந்தித ஸ்ரீஹரி (சிம்ஹ)

பக்தர்கள் அனைவரும் (நரசிம்மரின் உக்கிரத்தால் பயந்து) வெகுதூரம் ஓடி
கோபத்தை குறைக்குமாறு வேண்டினர்
தன் பக்தனை (பிரகலாதனை) கூப்பிட்டு, தன் மடியில் உட்காரவைத்து
தன் கோபத்தை குறைத்தான் ஸ்ரீஹரி (சிம்ஹ)

ஜயஜயஜயவெந்து ஹூவ்வனு தந்து
ஹரிஹரிஹரியெந்து சுரரெல்ல சுரிசி
பய நிவாரண பாக்ய ஸவரூபனே
பரமபுருஷ நம்ம புரந்தரவிட்டலனே (சிம்ஹ)

வெற்றி வெற்றி என்று பூக்களை கொண்டுவந்து
ஹரி ஹரி என்று அனைவரும் (நரசிம்மரின் மேல்) அர்ச்சனை செய்ய
பயத்தைப் போக்கும் பாக்கியங்களை கொடுக்கும்
உத்தமமான கடவுள் நம்ம புரந்தரவிட்டலனே (சிம்ஹ)

**தாயும் நீயே! தந்தையும் நீயே!**

சரணாகதி தத்துவம்.

இப்படி சொன்னதும் நினைவில் வரக்கூடிய ஸ்லோகம் என்ன? பகவான் கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு சொன்னதுதான்.

சர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ!
அஹம் த்வா சர்வ பாபேப்யோ மோக்ஷயிஸ்யாமி மா ஷுசஹா!

அர்ச்சுனா! அனைத்தையும் துறந்து என்னை சரணடை. அனைத்து பாவங்களிருந்து உன்னை நான் காப்பாற்றுகிறேன். கவலைப்படாதே.

அர்ஜுனனைப் போல் நானும் உன்னை சரணடைந்தேன். என் தாய், தந்தை, நண்பர்கள், பொன், பொருள் அனைத்தும் நீயே. நீ இருக்கும்போது எனக்கு எந்த கவலையும் இல்லை என்று ஶ்ரீ புரந்தரதாசர் பாடும் பாடல்தான் - நான் ஏகே படவனு.

நான் ஏகே படவனு நான் ஏகே பரதேசி
ஶ்ரீநிதி ஹரி எனகே நீ இருவ தனகா (நான் ஏகே)

நான் ஏழையும் அல்ல, அனாதையும் அல்ல
ஶ்ரீ நிதியான ஹரி நீ இருக்கும்வரை (நான் ஏகே)

புட்டிசித்த தாயி தந்தே இஷ்ட மித்ரனு நீனே
அஷ்ட பந்துவு சர்வ பளக நீனே
பெட்டிகேயோளகின அஷ்டா பரண நீனே
ஸ்ரேஷ்ட மூர்த்தி கிருஷ்ணா நீனிருவ தனகா (நான் ஏகே)

பிறவியைக் கொடுத்த தாய்/தந்தை நீயே; நண்பனும் நீயே
சுற்றம் சூழ இருக்கும் உறவினர்களும் நீயே
பெட்டிக்குள் இருக்கும் என் ஆபரணங்களும் நீயே
அனைவரிலும் உத்தமனான கிருஷ்ணனே, நீ இருக்கும் வரை (நான் ஏகே)

ஒட ஹுட்டிதவா நீனே ஒடலிகக்குவ நீனே
உடலு ஹொா தியலு வஸ்த்ர கொடுவே நீனே
மடதி மக்கள நெல்ல கடே ஹாயிசுவவ நீனே
பிடதி சலஹுவ ஒடேயா நீனிருவ தனகா (நான் ஏகே)

கூடப்பிறந்த சகோதர/சகோதரியும் நீயே; எனக்கு உணவளிப்பவனும் நீயே
இந்த உடலை மறைக்கும் ஆடைகளை கொடுப்பவனும் நீயே
மனைவி / குழந்தைகளுக்கு எல்லா இடத்திலும் அருள்/நன்மை பயப்பவன் நீயே
மறக்காமல் என்னை காப்பாற்றும் தலைவனே, நீ இருக்கும் வரை (நான் ஏகே)

வித்யா ஹேளுவ நீனே புத்திகலிசுவே நீனே
உத்தாரகர்த்த மம ஸ்வாமி நீனே
முத்து ஶ்ரீ புரந்தரவிட்டல நின்னடி மேலே
பித்து கொண்டிருவ எனகேதர பயவு (நான் ஏகே)

கல்வியை கற்றுக் கொடுக்கும் ஆசிரியனும் நீயே; நல்ல புத்தி கொடுப்பவனும் நீயே
என்னை முன்னேற்றும்படி செய்யும் என் தலைவனும் நீயே
ஶ்ரீ புரந்தரவிட்டலா, உன் பாதங்களைத் தொட்டு
எப்போதும் வணங்கிக் கொண்டிருக்கும் எனக்கு எதற்கு பயம்? (நான் ஏகே)

**ஏன் எப்பவும் கடவுளை நினைக்கணும்?**

தம்பி, கோயிலுக்கு போ. கடவுளை நினை. மனசுக்கு அமைதி கிட்டும்.

போங்கண்ணா. எனக்கு தியானம் எப்படி பண்ணனும்னு தெரியாது. கடவுள் ஸ்லோகம் / பாட்டு எதுவுமே தெரியாது. கோயில் எதுவுமே பக்கத்துலே இல்லே. ரொம்ப தூரம் போய்வர நேரம் இல்லே. உங்களுக்கு வேறே வேலையே இல்லே!!

கடவுளை நினையாதிருப்பதற்கு எவ்வளவு வேணா சாக்கு சொல்லலாம். ஆனா, அப்படி சொல்லக்கூடாதுன்னு - நான் சொல்லலே - புரந்தரதாசர் சொல்றாரு.

ஆமா. கடவுளை எந்நேரமும் நினைச்சிக்கிட்டிருந்தா என்ன நடக்கும்?

விருப்பும், வெறுப்பும் இல்லாத இறைவனின் அடிகளை இடைவிடாமல் நினைப்பவர்க்கு எவ்விடத்திலும், எக்காலத்திலும் துன்பம் இல்லை.

இதுவும் நான் சொன்னதில்லை. அட, புரந்தரதாசரும் சொல்லவில்லை. சொன்னது நம்ம அய்யன்.

வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.

சரியா.

அதனால், இனிமே நோ சாக்கு. ஒன்லி ராம ராம.

இதே கருத்துகளை புரந்தரதாசர் எப்படி எல்லாருக்கும் புரியும்படி கன்னடத்தில் பாடியிருக்கிறார் பாருங்க. பிறகு கேளுங்க.

கலியுகதொளு ஹரி நாமவ நெனேதரே
குலகோடிகளு உத்தரிசுவவோ ரங்கா (கலியுக)

இந்த கலியுகத்தில், ஹரியின் பெயரை நினைத்தால்
உன் குலம் முழுவதற்கும் புண்ணியம் கிட்டும் (கலியுக)

சுலபத முக்திகே சுலபவெந்தேணிசுவ
ஜலருஹநாபன நெனே மனவே (கலியுக)

சுலபமாய் முக்தி பெற, சுலபமாய் நினைவில் வைக்கும்படியான
ஸ்ரீ கமலாநாபனின் (பத்மநாபனின்) பெயரை நினைத்திரு மனமே (கலியுக)

ஸ்னானவனறியேனு மௌனவனறியேனு
த்யானவனறியேன் எந்தெணபேடா
ஜானகிவல்லப தசரத நந்தன
கானவினோதன நெனெ மனவே (கலியுக)

ஸ்னானம் எப்படி செய்யணும்னு தெரியாது; மௌனமாய் இருக்கத் தெரியாது
தியானம் செய்யத் தெரியாது என்று சொல்ல வேண்டாம்
ஜானகியின் கணவனை, தசரதனின் மைந்தனை
பாடலை விரும்பிக் கேட்கும் ஸ்ரீ ராமனை நினைத்திரு மனமே (கலியுக)

அர்ச்சிஸலறியேனு மெச்சிசலறியெனு
துச்சனு தானெந்தெணபேடா

அச்சுதானந்த கோவிந்த முகுந்தன
இச்சேயிந்தலி நெனெமனவே (கலியுக)

அர்ச்சனை / பூஜை செய்யத் தெரியாது; கடவுளை மெச்சவும் (புகழ் பாடவும்) தெரியாது
(அதனால்) நான் ரொம்ப கெட்டவன் என்று நினைக்க வேண்டாம்
அச்சுதன், ஆனந்தன், கோவிந்தன், முகுந்தன், (ஆகிய ஹரியை)
பாசத்துடன் நினைத்திரு மனமே (கலியுக)

ஜபவொந்தறியேனு தபவொந்தறியேனு
உபதேச வில்ல எந்தெணபேடா
அபார மஹிமே ஶ்ரீ புரந்தரவிட்டலன
உபாயதிந்தலி நெனெ மனவே (கலியுக)

(மந்திரங்களை) ஜெபிக்கத் தெரியாது; தபஸ் (தியானம்) செய்யத் தெரியாது
(தக்க குருவினிடத்தில்) உபதேசமும் பெற்றுக் கொள்ளவில்லை என்று சொல்ல வேண்டாம்
பெரும் மகிமை வாய்ந்த ஶ்ரீ புரந்தர விட்டலன் பெயரை
உத்தியுடன் (ஆபத்து காலத்தில் துடுப்பு போல்) நினைத்திரு மனமே (கலியுக)

**வைகுண்டம் எப்படி இருக்கும்?**

புரந்தரதாசர் சமஸ்கிருதத்தில் பாடியுள்ள பாடல்.
மிகச் சிறிய பாடல்
மிகவும் புகழ் பெற்ற பாடல்.
முதல் வரியைக் கேட்டவுடன், MLV அம்மாவின் குரல் டக்கென்று காதில் கேட்கும் பாடல்.

அது என்ன?

வைகுண்டம் எப்படி இருக்கும்?

வைகுண்டத்தைப் பற்றி புரந்தரதாசர், கனகதாசர் ஆகியோர் பல பாடல்கள் பாடியிருக்கின்றனர். கருணையே உருவான ஸ்ரீமன் நாராயணன் - எவ்வித களங்கமும் இல்லாத சுந்தர வடிவானவன் - காதில் குண்டலங்கள்; கழுத்தில் ஆபரணங்கள்; முகத்தில் புன்னகை - லக்ஷ்மி தேவியுடன் ஆதிசேஷன் மேல் வீற்றிருப்பான். பிரம்ம, ருத்ராதிகள் அவன் புகழ் பாடிக் கொண்டிருக்க, வேத கோஷங்கள் முழங்கிக் கொண்டிருக்கும். நாரதர் முதலானோர் இறைவனைக் குறித்து பஜித்துக் கொண்டிருப்பார்கள்.

இப்படியான வைகுண்டக் காட்சியை பின்வரும் பாடலில் தாசர் விவரிக்கிறார்.

வேங்கடாசல நிலையம் வைகுண்ட புரவாசம்
பங்கஜ நேத்ரம் பரம பவித்ரம்
சங்க சக்ரதர சின்மய ரூபம் (வேங்கடாசல)

வேங்கடாசலத்தில் (திருப்பதியில்) வீற்றிருப்பவன் வைகுண்டத்தில் வசிக்கிறான்
தாமரை மலர் போன்ற அழகான கண்கள்; எவ்வித களங்கமுமில்லாத தூய்மையானவன்
இரு கைகளிலும் சங்கு, சக்கரம் தரித்த அழகே வடிவானவன் (வேங்கடாசல)

அம்புஜோத்பவ வினுதம் அகணித குண நாமம்
தும்புரு நாரத கான வினோலம் (வேங்கடாசல)

எப்பொழுதும் அவன் பேரை ஜபித்துக் கொண்டே இருக்கும் பிரம்மன்;
கூடவே தம்புரா வைத்துக்கொண்டு பாடிக் கொண்டிருக்கும் நாரதர் (வேங்கடாசல)

மகர குண்டலதர மதனகோபாலம்
பக்த போஷக ஸ்ரீ புரந்தரவிட்டலம் (வேங்கடாசல)

பளபளக்கும் குண்டலங்களை அணிந்திருக்கும் மதனகோபாலன்
பக்தர்களை காக்கும் ஸ்ரீ புரந்தர விட்டலனே (வேங்கடாசல)

**வரம் தந்த சாமிக்கு பதமான லாலி!**

பகவான் கண்ணனுக்கு சுப்ரபாதம், அவன் குறும்புகள், விளையாட்டுகள், ஆகிய எல்லாவற்றிற்கும் பாடிய ஹரிதாஸர்கள், அந்த கண்ணன் தூங்குவதற்கும் நிறைய லாலி பாடல்கள் பாடியிருக்கின்றனர். 20-25 பத்திகள் கொண்ட லாலி பாட்டுகளும் உண்டு. அவைகளில் மிகவும் புகழ்பெற்றது இந்த 'தூகிரே ரங்கன' பாடலாகும்.

ராகவேந்திரர் மடங்களில் மாலை நேர பூஜையில், வேத பாராயணங்கள், ஸ்தோத்திரம், பாட்டு, நைவேத்தியம் எல்லாம் ஆனபிறகு, பகவானை தூங்கச் செய்கிற வேளையும் வரும். 'லாலி ப்ரியா லாலி சேவா மமதாரயா' என்று சொன்னவுடன், யாராவது லாலி பாட ஆரம்பிப்பார்கள். பெரும்பாலும் அனைவரும் பாடும் பாடல் இதுவாகத்தான் இருக்கும்.

தூகிரே ரங்கன தூகிரே கிருஷ்ணன
தூகிரே அச்சுதானந்தன (தூகிரே)

ரங்கனை, கிருஷ்ணனை, அச்சுதனை, அனந்தனை
தாலாட்டுங்கள் (தூகிரே)

தூகிரே வரகிரியப்பா திம்மப்பன
தூகிரே காவேரி ரங்கய்யன (தூகிரே)

திருப்பதியில் இருக்கும் பாலாஜியை,
காவேரிக்கரையில் இருக்கும் ரங்கனை
தாலாட்டுங்கள் (தூகிரே)

நாகலோகதல்லி நாராயண மலக்யானே
நாககன்னிகெயரு தூகிரே
நாகவேணியரு நேண பிடிதுகொண்டு
பேகனே தொட்டில தூகிரே (தூகிரே)

நாகலோகத்தில் நாராயணன் படுத்திருக்கிறான்
நாககன்னிகைகள் தூங்கச் செய்யுங்கள்
நீளமான கூந்தலையுடைய பெண்கள் தொட்டில்கயிறை பிடித்துக்கொண்டு
வேகமான தொட்டிலை தாலாட்டுங்கள் (தூகிரே)

இந்திரலோகதல்லி உபேந்திர மலக்யானே
இந்துமுகியரல்ல தூகிரே
இந்திரகன்னிகேயரு சந்ததி பந்து
முகுந்தன தொட்டில தூகிரே (தூகிரே)

இந்திரலோகத்தில் உபேந்திரன் படுத்திருக்கிறான்
சந்திரனைப் போல் முகத்தையுடைய பெண்கள் தாலாட்டுங்கள்
இந்திரலோகத்திலுள்ள பெண்கள் உடனே வந்து
முகுந்தனின் தொட்டிலை தாலாட்டுங்கள் (தூகிரே)

ஆலத எலய மேலே ஸ்ரீலோல மலக்யானே
நீலகுந்தலேயரு தூகிரே
வ்யாலஷயன ஹரி மலகு மலகெந்து
பாலகிருஷ்ணய்யன தூகிரே (தூகிரே)

ஆலமர இலையில் லக்ஷ்மியின் கணவன் நாராயணன் படுத்திருக்கிறான்
நீளமான கூந்தலையுடைய பெண்கள் தாலாட்டுங்கள்

ஆதிசேஷன் மேல் படுத்திருக்கும் ஹரியை
தூங்கு தூங்கு என்று தாலாட்டுங்கள் (தூகிரே)

சாசிர நாமனே சர்வோத்தமனெந்து
சூசுத்தா தொட்டில தூகிரே
லேசாகி மடுவினோளு சேஷன துளுதிட்ட
தோஷ விதூரன தூகிரே (தூகிரே)

ஆயிரம் நாமங்கள் கொண்டவனே, நீயே அனைவரிலும் உத்தமமானவன் என்றவாறு
ஜபித்துக் கொண்டே தாலாட்டுங்கள்
விஷசர்ப்ப குளத்தில் (காளிந்தி) சர்ப்பத்தின் மேல் குதித்தாடிய
களங்கமில்லாதவனை தாலாட்டுங்கள் (தூகிரே)

அரளேலே மாகாயி கொரள முத்தினஹார
தரளன தொட்டில தூகிரே
ஸ்ரீதேவி ரமணன புரந்தரவிட்டலன
கருணதி மலகெந்து தூகிரே (தூகிரே)

நெற்றியில் ஆபரணமும்; கழுத்தில் முத்து மாலையும் அணிந்துள்ள
குழந்தையின் தொட்டிலை தாலாட்டுங்கள்
ஸ்ரீதேவி ரமணனை புரந்தரவிட்டலனை
தூங்கு என்று வேண்டிக் கொண்டு தாலாட்டுங்கள் (தூகிரே)

**குரு பிரம்மா குரு விஷ்ணு.**

குரு = ஆசிரியர்.

முந்தைய காலங்களில், வேத சாஸ்திரங்களை மாணவர்கள், குருகுல வாசம் செய்து படித்து வந்தனர். அதாவது, குருவின் வீட்டிலேயே தங்கி, அவருக்கு பணிவிடைகள் செய்து, அவர் சொல்லிக் கொடுப்பதை கற்று வந்தனர். தன்னலமில்லாமல் கற்றுக் கொடுக்கும் குருவை, தெய்வத்துக்கு ஒப்பிட்டு,

குரு பிரம்மா குருர் விஷ்ணு குரு தேவோ மகேஸ்வர:
குரு சாக்ஷாத் பரப்ரம்ம தஸ்மை ஸ்ரீ குருவே நம:

என்றும் சொல்லியிருக்கின்றனர்.

மாயாஜாலங்கள் எதுவும் செய்யாமல்; அந்த மாயாஜாலங்களை செய்யும் நாராயணனின் அருமை பெருமைகளை எடுத்துச் சொல்லும், பல்வேறு வித்யைகளை கற்றுக் கொடுப்பவரை குருவாக தேர்ந்தெடுத்தல் நலம்.

அப்படிப்பட்ட ஒரு நல்ல குருவை தேர்ந்தெடுத்து, அவரிடம் சரணடைந்து அனைத்தையும் கற்கும் பட்சத்தில், இதைவிட முக்திக்கு குறுக்குவழி எதுவும் கிடையாது என்று தாசர் சொல்கிறார்.

***

குருவின் முக்கியத்துவத்தை குறித்து பாடும் இந்த பாடலை பாடும்போது அவன் குருவைப் பற்றியும் சில வார்த்தைகள்.

பல வருடங்களுக்கு முன்னர், அவனுக்கும் ஒரு குரு கிடைத்தார். அதுவும் அவனாக தேடவில்லை. குருவாக தேடி அவனிடம் வந்தார். வேத, சாஸ்திரங்கள், ஜோசியம், வான் சாஸ்திரம், ஹரிதாஸ சாஹித்யங்கள், உபன்யாசம் ஆகிய எல்லாவற்றிலும் தேர்ச்சி பெற்ற பண்டிதர். ஒரு சமயம் அவருக்கு தவறுதலாக செய்யப்பட்ட கண் அறுவை சிகிச்சையினால், ஒரு வருடம் வரை கண் பார்வை பாதிக்கப்பட்டு அவதிப்பட்டார். அச்சமயம் அவனும் வேலையில்லாமல் (அப்பவுமா?) ச்சும்மா இருந்ததால், அவருடனே முழுவதும் இருந்து அவருக்கு சேவை செய்யும் பாக்கியத்தை அடைந்தான். அவர் மகன் / மகள்களைப் போல் அவனை அவரும், அவருடைய உறவினர்கள் அனைவரும் நடத்தினர். தற்போதும் அப்படியே.

அவருக்குத் தெரிந்த பற்பல விஷயங்களை தொடர்ந்து பல வருடங்களுக்கு, அவர் அவனுக்கு கற்றுத் தந்தார். அவன் எவ்வளவு கத்துக்கிட்டான்றது தனிக்கதை.
.
திருவல்லிக்கேணியில் வாழும் அவனது குருவிற்கு தற்போது 85 வயது.

ஸ்ரீ குருப்யோ நம:

***

குருவின குலாமனாகுவ தனகா
தொரயதண்ண முகுதி (குருவின)

குருவிற்கு அடிமையாய் ஆகாதவரை
கிடைக்காது முக்தி (குருவின)

பரிபரி ஷாஸ்த்ரவனேகவனோதி
வ்யர்தவாய்து பகுதி (குருவின)

விதவிதமான சாஸ்திரங்கள் பலவற்றை படித்தாலும்
வீணாகிப் போய்விடும் பக்தி (குருவின)

ஆறு ஷாஸ்த்ரவ ஓதிதரேனு
மூராறு புராணவ முகிசிதரேனு
சாரி சஜ்ஜனர சங்கவ மாடதே
தீரனாகி தான் மெரெதரேனு (குருவின)

ஆறு சாஸ்திரங்களை படித்தாலென்ன
(3x6) 18 புராணங்களை முடித்தாலென்ன
கற்று உணர்ந்த பெரியவர்களிடம் எதையும் கற்காமல்
கர்வத்துடன் எனக்கு எல்லாம் தெரியும் என்று சொன்னாலும் (குருவின)

கொரளலு மாலெய தரிசிதரேனு
கரதல்லி ஜபமணி எணிசிதரேனு
மருளனந்தெ ஷரீரக்கே லேபவா
ஒரசிகொண்டு தா திரிகிதரேனு (குருவின)

கழுத்தில் (துளசி) மாலை அணிந்தாலென்ன
கைகளில் ஜபமணி இருந்தாலென்ன
ஹரிதாஸனென்று உடம்பில் கோபிசந்தனத்தை
தரித்துக் கொண்டு சுற்றினாலும் (குருவின)

நாரியர சங்கவ அளிதரேனு
ஷரீரக்கே துக்கவ படிசிதரேனு
மரையண்ண ஸ்ரீ புரந்தர விட்டலன
மரெயதே மனதொளு பெரெயுவ தனகா (குருவின)

பெண்களை புறக்கணித்து சன்னியாசி ஆனாலென்ன
பட்டினி கிடந்து உடம்பை துக்கப் படுத்தினாலென்ன
ஸ்ரீ புரந்தரவிட்டலனை மறக்காமல்
மனதில் வைத்து நினைக்கும் வரை (குருவின)

**லக்ஷ்மிதேவி எவ்வளவு பாக்கியம் செய்திருக்கிறார்?**

தன்னை வணங்கும் பக்தர்களுக்கு அளப்பரிய செல்வத்தையும், வளத்தையும் அளிக்கும் லக்ஷ்மியானவள், ஸ்ரீமன் நாராயணனை ஒருகணமும் விட்டுப் பிரியாமல் கூடவே இருந்து பணிவிடை செய்கிறாள்.

லக்ஷ்மி நரசிம்மர்
லக்ஷ்மி நாராயணன்
திருமால்

என்று பெயரில்கூட ஸ்ரீ ஹரியை விட்டுப் பிரியாமல் இருப்பதால்தான், நாம் ஸ்ரீமன் நாராயணனை வழிபடும்போது, 'லக்ஷ்மி சமேத ஸ்ரீ சத்ய நாராயணாய நமஹ' என்று லக்ஷ்மியையும் சேர்த்தே வழிபடுகிறோம்.

ஏன், ரெண்டு பேரில் ஒருத்தருக்குத் தெரியாமே இன்னொருத்தரை வணங்கக் கூடாதான்னு கேட்டா - சீதை இல்லாத ராமரை கவர முற்பட்ட சூர்ப்பனகைக்கும் ;

ராமர் இல்லாமல் சீதையை கவர்ந்திட்ட ராவணனுக்கும் என்ன கதி ஆனதென்று ராமாயணம் சொல்லும்.

நிற்க.

அனைவரிலும் உத்தமமான, அதிசுந்தரனான, களங்கமில்லாத குணபரிபூர்ணனான ஹரிக்கு எக்காலமும்; எந்நேரமும் பணிவிடை செய்து கொண்டே இருப்பதென்பது எப்படிப்பட்ட புண்ணியம் தரும் செயலாகும்? அப்படி செய்வதற்கு லக்ஷ்மிதேவி எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்?

இதைத்தான் புரந்தரதாசர், 'ஏனு தன்யளோ' என்னும் இந்தப் பாடலில் பாடியிருக்கிறார்.

இப்போ பாடல்.

***

ஏனு தன்யளோ லக்குமி
எந்தா மான்யளோ
சானு ராகதிந்தா ஹரியா
தானே சேவே மாடுதிஹளு (ஏனு)

எத்தனை அதிர்ஷ்டம் வாய்ந்தவளோ லட்சுமி
எவ்வளவு மரியாதைக்கு உரியவளோ
சானு ராகத்தினால் அந்த ஹரியை
சேவை செய்து கொண்டிருக்கிறாள் (ஏனு)

கோடி கோடி ப்ருத்யரிரலு
ஹாடகாம்பரனா சேவே
சாடியில்லதே பூர்ண குணலு
ஸ்ரேஷ்டவாகி மாடுதிஹளு (ஏனு)

கோடி (எண்ணிக்கை) பணியாட்கள் இருந்தும்
ஸ்ரீ ஹரியின் சேவையினை
சாடியில்லதே ; குற்றமில்லாதவளான லட்சுமி
மிகவும் அருமையாக செய்து வருகிறாள் (ஏனு)

சத்ர சாமர வ்யஜன பர்யங்க
பாத்திர ரூபதல்லி நிந்து
சித்ர சரிதனு ஹாத ஹரியா
நித்ய சேவே மாடுதிஹளு (ஏனு)

குடை சாமரம் விசிறி கட்டில்
ஆகிய ரூபங்களில் நின்று
அதி சுந்தரனாகிய ஹரியை
தினமும் பணிவிடை செய்கிறாள் (ஏனு)

சர்வஸ்தலதி வ்யாப்தனாதா
சர்வதோஷ ரஹிதனாதா
கருட கமனன நாத
புரந்தர விட்டலன சேவிசுவளு (ஏனு)

எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருப்பவனும்

களங்கமில்லாதவனும்
கருடனை வாகனமாகக் கொண்டிருப்பவனுமாகிய
புரந்தர விட்டலனை வணங்குபவள் (ஏனு)

**கோவிந்தனை கண்டேன்**

ஜகத்ப்ரபும் தேவதேவம்
அனந்தம் புருஷோத்தமம் !
ஸ்துவன் நாம சஹஸ்ரேண
புருஷஸ் ஸததோஸ் தித: !!

தருமரின் சந்தேகங்களுக்கு பதிலளிக்கும் பீஷ்மர், விஷ்ணு சஹஸ்ரநாமத்தை அருளும் முன்னர், இந்த ஸ்லோகத்தை சொல்கிறார்.

உலகத்துக்கெல்லாம் தலைவன், தேவர்களுக்கெல்லாம் தேவன், ஆயிரம் நாமங்கள் கொண்டவனை எப்போதும் நினைத்துக் கொண்டே இருக்கவேண்டும். அவன் பெயரை எப்பொழுதும் சொல்லிக் கொண்டே இருக்கவேண்டும்.

இதற்கு பிறகே, விஸ்வம் விஷ்ணுர் வஷட்காரோ என்று ஆரம்பிக்கிறார்.

ஸ்லோகத்தில் பகவானின் பெயர்கள் தொடர்ச்சியா வருவது சரி. அதே மாதிரி பாட்டு இயற்ற முடியுமா? புரந்தரதாசரால் முடியும். அப்படிப்பட்ட ஒரு புகழ்பெற்ற பாடல்தான் இன்று பார்க்க இருப்பது.

தன வாழ்நாள் முழுக்க ஸ்ரீமன் நாராயணனின் புகழைப் பாடியே ; அவன் நாமங்களை சொல்லியே மகிழும் தாசரின் முன்னால் அந்த இறைவன் வந்தால், தாசர் என்ன கேட்பார்?

ஒன்றுமே கேட்க மாட்டார்.

மறுபடி அந்த நாராயணனின் பெயரைச் சொல்லியவாறே பாட ஆரம்பிப்பார். அப்படி அவர் பாடிய பாடல்தான் இது.

***

கண்டேன கோவிந்தன
புண்டரிகாக்ஷ பாண்டவ பக்ஷ கிருஷ்ணன (கண்டேன)

கோவிந்தனை கண்டேன்
புண்டரீகாக்ஷனை ; பாண்டவர்கள் பக்கம் நின்ற கிருஷ்ணனை (கண்டேன)

கேசவ நாராயண ஸ்ரீ கிருஷ்ணன
வாசுதேவ அச்சுதா அனந்தன
சாசிர நாமத ஸ்ரீ ரிஷிகேஷன
சேஷ சயன நம்ம வசுதேவ சுதன (கண்டேன)

கேசவனை நாராயணனை ஸ்ரீ கிருஷ்ணனை
வாசுதேவனை அச்சுதனை அனந்தனை
ஆயிரம் நாமங்கள் கொண்ட ஸ்ரீ ரிஷிகேசனை
சேஷன் மேல் சயனித்திருக்கும் நம்ம வசுதேவரின் புதல்வனை (கண்டேன)

புருஷோத்தம நரஹரி ஸ்ரீ கிருஷ்ணன
சரணாகத ஜன ரக்ஷகன
கருணாகர நம்ம புரந்தர விட்டலன
நேரே நம்பிதேனோ பேலூர சன்னிகனா (கண்டேன)

புருஷோத்தமனை நரஹரியை ஸ்ரீ கிருஷ்ணனை

சரணாகதி செய்யும் பக்தர்களை காப்பவனை
கருணாகரனை; நம்ம புரந்தர விட்டலனை
உன்னையே நம்பியிருக்கிறேன்; பேலூரில் சென்னகேசவனாய் இருப்பவனை (கண்டேன)

**<u>வேங்கடரமணனே வாராய்...</u>**

புரந்தரதாசருக்கு திருப்பதி வேங்கடரமணன் மேல் தனியான அபிமானம் இருந்தது. அவர் மேல் பற்பல பாடல்கள் பாடியிருக்கிறார். பாலாஜியின் பார்வை / தயை / தரிசனம் வேண்டி, அப்படி தரிசனம் கிடைத்தபிறகு ஆனந்தத்தில் - இப்படி பல சூழ்நிலைகளில் பாடல்கள் இயற்றியுள்ளார்.

அப்படிப்பட்ட ஒரு புகழ்பெற்ற பாடல்தான் இன்று பார்க்க இருப்பது.

வேங்கடரமணனே பாரோ என்னும் இந்த பாடலில், அவரை ஸ்ரீ கிருஷ்ணனாக, குழந்தையாக பாவித்து, கொஞ்சி, முத்தம் கொடுத்து, அவன் லீலைகளை பாடி தரிசனம் தரவேண்டுகிறார்.

***

வேங்கடரமணனே பாரோ
சேஷாசல வாசனே பாரோ (வேங்கட)

வேங்கடரமணனே வாராய்
சேஷாச்சலத்தில் (திருப்பதியில்) வசிப்பவனே வா
ராய் (வேங்கட)

பங்கஜநாபா பரமபவித்ரா சங்கர மித்ரனே பாரோ (வேங்கட)

தாமரைக் கண்ணனே மிகவும் பவித்ரமானவனே
சங்கரனின் நண்பனே வாராய் (வேங்கட)

முத்து முகத மகுவே நினகே
முத்து கொடுவேனு பாரோ
நிர்தயவேகோ நின்னோளகே நானு
பொந்தித்தேனு பாரோ (வேங்கட)

அழகான முகத்தையுடைய குழந்தையே உனக்கு
முத்தம் கொடுக்கிறேன் வாராய்
ஏன் தயவில்லை; உன்னில் நான்
கரைந்திருக்கிறேன் வாராய் (வேங்கட)

மந்தர கிரியனெத்திதானந்த
மூருத்தியே பாரோ
நந்தன கந்த கோவிந்த முகுந்த
இந்திரேயரசனே பாரோ (வேங்கட)

மந்தர மலையை தூக்கியவனே
எப்போதும் ஆனந்தமாய் இருப்பவனே வாராய்
நந்தனின் மைந்தனே; கோவிந்தனே முகுந்தனே
இந்திரனின் அரசனே வாராய் (வேங்கட)

காமனய்யா கருணாளோ
ஷ்யாமள வர்ணனே பாரோ
கோமளாங்க ஸ்ரீ புரந்தர விட்டலனே
ஸ்வாமி ராயனே பாரோ (வேங்கட)

மன்மதனின் தந்தையே கருணையே உருவானவனே

கறுமை நிறத்தவனே அழகானவனே
ஶ்ரீ புரந்தர விட்டலனே ;
தலைவனே வாராய் (வேங்கட)

**அஜாமிளன் என்ன உன் அக்கா மகனா?**

தாசர்கள் ஸ்ரீமன் நாராயணனை குழந்தையாக, மகனாக, தோழனாக, தகப்பனாக - இப்படி பல்வேறு ரூபங்களில் நினைத்து பாடியிருக்கின்றனர். ஒவ்வொன்றிலும் அந்த உறவிற்கேற்ப - கெஞ்சல், கொஞ்சல், மிரட்டல், அதட்டல் என்று பாடும் தொனி மாறும்.

திருப்பதி வேங்கடரமணனிடம், தாசர், தனக்கு தரிசனம் / மோட்சம் தரவேண்டி பல நாட்களாய் வேண்டிக் கொண்டிருக்கிறார். பல்வேறு பாடல்கள் பாடுகிறார். இறைவனுக்கு சேவை செய்கிறார். அப்படியும் இறைவன் வரவில்லை. இவருக்கு கோபம் (மாதிரி!) வந்துவிடுகிறது. அதெப்படி எனக்கு கருணை காட்டாமல் போகலாம்? பல்வேறு சமயங்களில் பல பேருக்கு கருணை
/ தரிசனம் தந்திருக்கிறாயே, ஹரியே, எனக்கு மட்டும் ஏன் இப்படி பாரபட்சம் காட்டுகிறாய்? என்று உதாரணங்கள் காட்டி 'நானேன மாடிதேனொ' என்று இறைவனை தோழனாக வரித்து, உரிமையுடன் கோபமாக பாடுகிறார்.

இப்படி கோபப்பட்டு, கடவுளை திட்டுகிறா மாதிரி பாடுவதை 'நிந்தா ஸ்துதி' என்று அழைக்கிறார்கள்.

சரி. அது என்ன உதாரணங்கள்?

திரௌபதி தேவி, அகலிகை, துருவன், குசேலன் - இப்படி பல்வேறு உதாரணங்களை சொன்னாலும், highlightஆ ஒண்ணு சொல்றாரு தாசர். அஜாமிளன். தன் வாழ்நாள் முழுக்க பாவ காரியங்களை செய்தவனாகிய அஜாமிளன், மரணப்படுக்கையில், தன் கடைசி மகனான நாராயணனைக் கூப்பிட்டதால், மோட்சத்துக்கு சென்றான். நான் இப்படி கஷ்டப்பட்டு உனக்கு தினமும் சேவை செய்கிறேன். ஆனா நீ என்னடான்னா, எதுவுமே கேட்காத, எதுவுமே (சத்காரியங்கள்) செய்யாத அந்த அஜாமிளனுக்கு முக்தியைக் கொடுத்தாய். அவன் என்ன உனக்கு அக்கா மகனா? என்று கேட்கிறார்.

வாங்க. அந்த பாட்டையும் பொருளையும் பார்த்தாலே உங்களுக்கு புரிஞ்சிடும். மிகமிகமிக அற்புதமான பாடல்.

***

நானேன மாடிதேனோ ரங்கய்யா ரங்கா
நீ என்ன காய பேகோ (நானேன)

நான் என்ன (பாவம்) செய்தேன், ரங்கா
நீ என்னை காப்பாற்ற வேண்டும் (நானேன)

மானாபி மானவு நின்னது எனகேனு
தீன ரக்ஷக திருப்பதிய வேங்கடரமணா (நானேன)

(பக்தர்களுக்கு காட்டும்) அன்பு, பாசம் முதலியன உன்னுடையது எனக்கென்ன++
தீன ரக்ஷகனே திருப்பதி வேங்கடரமணா (நானேன)

கரிராஜ கரெசிதனே த்ரௌபதி தேவி
பரெதோலே களுஹிதளே
ஹருஷதிந்தலி ரிஷிபத்னிய சாபவ
பரிஹரிசிதேயல்லோ (நானேன)

துரியோதனன் கூப்பிட்டு (அவமானப்படுத்தியபோது) திரௌபதி தேவி
கடிதமா எழுதி அனுப்பினாள்?
(கூப்பிட்ட நேரத்திற்கு வந்து காப்பாற்றினாயல்லவா?)

ஒரு நிமிடத்தில் ரிஷிபத்தினியின் (அகலிகை) சாபத்தை
போக்கினாய் அல்லவா? (நானேன)

ரக்கசசூதனனே கேளோ
த்ருவராயா சிக்கவனல்லவேனோ
உக்கிபருவா கர்மா மாடித அஜாமிள
நின்னக்கன மகவேனோ (நானேன)

அரக்கர்களை அழித்தவனே கேளாய்
துருவ மகாராஜா சின்னப்பையன்தானே?
மறுபிறவி எடுக்கும்படியான பாவத்தை செய்த அஜாமிளன்
(அப்படி எடுக்காமல் மோட்சத்தை கொடுத்து காப்பாற்றினாயே)
அவன் என்ன உன் அக்கா மகனா? (நானேன)

முப்பிடி அவலக்கியா தந்தவனிகே
வப்புவந்தே கொடலில்லவே
சர்ப்பசயன ஸ்ரீ புரந்தரவிட்டலா
அப்ரமேய காயோ (நானேன)

மூன்று பிடி அவல் தந்தவருக்கு
உலகிலுள்ள அனைத்து செல்வங்களையும் நீ கொடுத்தாய் அல்லவா?
சர்ப்பத்தின் மேல் சயனித்திருக்கும் புரந்தர விட்டலனே
இறைவனே (எண்ணிக்கையில் அடங்காதவனே) என்னைக் காப்பாற்று (நானேன)

++நான் பக்தவத்சலன் - அதாவது பக்தர்களை அரவணைத்து காப்பாற்றுவேன் என்று நீயே கூறியிருக்கிறாய். அதனால் உன் வாக்குப்படியே நீ என்னை காப்பாற்றி ஆகவேண்டும். அப்படி செய்யவில்லையென்றால், அதைப் பற்றி கவலைப்படுபவன் நீதானேயன்றி நானில்லை.

***

தீன ரக்ஷக திருப்பதிய வேங்கடரமணா!

**<u>ரங்கனே வாராய் பாண்டுரங்கனே வாராய்</u>**

ஒரு கோவிலைப் பற்றி, அதில் இருக்கும் கடவுளின் சிறப்புகளைப் புகழ்ந்து தாசர்கள் பாடிய பல பாடல்கள் உள்ளன. அது நமக்குத் தெரியும். ஆனால், ஒரே பாடலில் பல க்ஷேத்ரங்களை குறிப்பிட்டு பாடியதோடல்லாமல், இறைவனை குழந்தை, மகன், தந்தை என்று பல்வேறு உறவுமுறைகளை குறிப்பிட்டு பாடியிருக்கும் ஒரு பாடலும் உண்டு.

அதுதான் இன்றைக்கு பார்க்க இருப்பது.

இந்த புகழ் பெற்ற பாடலில் வரும் க்ஷேத்ரங்கள்: ஸ்ரீரங்கம், திருப்பதி, காஞ்சிபுரம், மகிஷபுரி (பேலூர்) மற்றும் உடுப்பி.

***

ரங்க பாரோ பாண்டுரங்க பாரோ
ஸ்ரீரங்க பாரோ நரசிங்க பாரோ (ரங்க)

ரங்கனே வாராய் பாண்டுரங்கனே வாராய்
ஸ்ரீரங்கனே வாராய் நரசிங்கனே வாராய் (ரங்க)

கந்த பாரோ என்ன தந்தே பாரோ
இந்திரா ரமண முகுந்த பாரோ (ரங்க)

குழந்தையே வாராய் என் தந்தையே வாராய்
இலக்குமியின் கணவனே முகுந்தனே வாராய் (ரங்க)

அப்ப பாரோ திம்மப்பா பாரோ
கந்தர்பனய்யனே கஞ்சி வரத பாரோ (ரங்க)

தந்தையே வாராய் திம்மப்பா (வேங்கடவன்) வாராய்
மன்மதனின் தந்தையே காஞ்சி வரதனே வாராய் (ரங்க)

அண்ண பாரோ என்ன சின்ன பாரோ
புண்ணியமூர்த்தி மஹிஷபுரிய சென்ன பாரோ (ரங்க)

தந்தையே வாராய் எந்தன் செல்லமே (தங்கமே) வாராய்
புண்ணியமூர்த்தி மகிஷபுரியின் சென்ன கேசவனே வாராய் (ரங்க)

விஷ்ணு பாரோ உடுப்பி கிருஷ்ண பாரோ
என் இஷ்ட மூர்த்தி புரந்தர விட்டல பாரோ (ரங்க)

விஷ்ணுவே வாராய் உடுப்பி கிருஷ்ணனே வாராய்
என் இஷ்ட தெய்வமே புரந்தர விட்டலனே வாராய் (ரங்க)

**ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை**

கடவுளர்களுக்கு 'காலை வேளை' என்று கருதப்படும் 'உத்தராயண புண்யகாலம்' (ஆறு மாத காலம்) துவங்கிவிட்டது. சூரியன் மகர ராசிக்கு பிரவேசிக்கும் இந்த நாள் மிக புனிதமான நாளாகும்.

பகீரதன் தன் முன்னோர்களுக்கு கங்கைக் கரையில் 'தர்ப்பணம்' செய்தது இந்நாளே. அம்புப்படுக்கையில் படுத்திருந்த பீஷ்மர், இந்த நாளுக்காகவே காத்திருந்து தன் உயிரை விட்டார். நாமும் இந்த நன்னாளில் தாசர் பாடல்களில் 'சீசன்-2'வை, அந்த 'ஐந்து கரத்தனை, ஆனை முகத்தனை' வணங்கி துவக்குவோம்.

பிள்ளையாரை பிடிக்காதவர் யாரேனும் இருக்க முடியுமா? தன் செல்ல நண்பனாய் அவரை நினைத்து அவரை வணங்குபவர்களே அதிகம். சரிதானே? அவரைப் போலவே அவர் பாடல்களும் மிக இனிமையானவை. உடனே 'விநாயகனே வினை தீர்ப்பவனே, வேழ முகத்தோனே, ஞான முதல்வனே' பாட்டு நினைவுக்கு வருதா?

கணபதியை குறித்து தாசர்கள் நிறைய பாடல்கள் பாடியிருக்கின்றனர் 'கஜவதன பேடுவே' எனத் தொடங்கும் இன்றைய பாடலில் நாம் தெரிந்துகொள்ளும் சிறப்புச் செய்தி என்னன்னு பார்ப்போம்.

பாசக்கயிறு யாரிடம் இருக்கும்? இதென்ன கேள்வி? எமதர்மனிடம்தான்னு டக்குன்னு சொல்லிடுவீங்க. ஆனா புரந்தரதாசர் என்ன சொல்றாரு? பிள்ளையாரிடமும் பாசக்கயிறு இருக்காம். 'பாச', 'அங்குச' இந்த இரண்டையும் வைத்திருப்பவனே.

அங்குசம் தெரியும். மிகப்பெரிய யானையையும் அடக்கிடும் சிறிய ஆயுதம் - அங்குசம். நம் மனமென்னும் யானையை அடக்கி, சுயகட்டுப்பாடு வேண்டும் என்று வலியுறுத்த அங்குசத்தை ஏந்தியிருக்கிறார் என்று சொல்கிறார் தாசர்.

சரி. பாசக்கயிறு? இறப்புக்கு அப்பாற்பட்ட விநாயகனை வணங்குபவர்களுக்கு மரணம் குறித்த பயம் அகற்றுபவன் என்பதைக் காட்டவே பாசக்கயிறு வைத்திருக்கிறார் என்று தாசர் விளக்குகிறார்.

கஜானனின் பெருமைகளை சொல்லி, அவன் தாள் வணங்கி தாசர் கேட்பது என்னன்னா, சர்வோத்தமனான அந்த ஸ்ரீமன் நாராயணனை எப்பொழுதும் நினைத்திருக்க செய்யுமாறு அருள் செய் என்பதேயாகும். வழக்கம்போல் மிக எளிதான சொற்கள், ஆழ்ந்த கருத்துகள். பாடல், அதன் பொருள், தொடர்ந்து சில காணொளிகள் பாருங்க. கணபதி பப்பா மோரியா!

***

கஜவதன பெடுவே கௌரி தனய
த்ரிஜக வந்திதனே சுஜனர பொரவென (கஜவதன)

யானை முகத்தனே கௌரியின் புதல்வனே
மூவுலகத்திலும் அனைவராலும் வணங்கப்படுபவனே
நல்லவர்களை காப்பவனே (கஜவதன)

பாசாங்குசதர பரம பவித்ர
மூஷிகவாகன முனிஜன பிரேம (கஜவதன)

பாசக்கயிறையும், அங்குசத்தையும் ஏந்தியவனே, பரம பவித்ரனே
மூஞ்சூறு வாகனனே, முனிவர்களுக்கு பிரியமானவனே (கஜவதன)

மோததி நின்னய பாதவ தோரோ
சாது வந்திதனே ஆதரதிந்தலி (கஜவதன)

சந்தோஷத்துடன் (கருணையுடன்) உன் பாதங்களைக் காட்டு
மிகவும் பணிவுடன் சாதுக்களால் வணங்கப்படுபவனே (கஜவதன)

சரசிஜநாப ஸ்ரீ புரந்தரவிட்டலன
நிருத நெனேயுவந்தே தய மாடோ (கஜவதன)

நாபிக் கமலத்தில் தாமரைக்கொடியை கொண்ட ஸ்ரீ புரந்தரவிட்டலனை எப்போதும் (நான்) நினைக்குமாறு தயை காட்டுவாய் (கஜவதன)

**குருவே பாராட்டிய சிஷ்யர் புரந்தர தாசர்.**

இன்று ஸ்ரீ புரந்தரதாசரின் ஆராதனை தினம். (1/23/2012).

விஜய நகர சாம்ராஜ்யத்தில் முக்கிய பதவியில் இருந்தவரும், திருப்பதி வேங்கடவனின் ஆலயத்தில் பல காலங்கள் சேவை புரிந்தவரும், மத்வ சம்பிரதாயத்தில் மிக முக்கியமானவருமான ஸ்ரீ வியாசராஜர், புரந்தர தாசரின் குருவாவார். அப்பேற்பட்ட அந்த குரு, தன் சிஷ்யரை பாராட்டி ஒரு பாடலே பாடியிருக்கிறார் என்றால் அது எப்பேற்பட்ட பெருமைக்குரிய விஷயம்? அவர்கள் இருவரையும் வணங்கி, அந்த சிறப்புமிக்க பாடலை இங்கு பார்ப்போம்.

மேலும் பாகவதம் மற்றும் உபநிஷத்களின் சாரமாகக் கருதப்படும் ஸ்ரீ புரந்தரதாசரின் பாடல்களை தொகுத்து அவற்றிற்கு 'புரந்தரோபநிஷத்' என்று பெயரிட்டார் ஸ்ரீ வியாசராஜர்.

ஸ்ரீ புரந்தரதாசரின் காலம்: 1480 to 1564 AD
ஸ்ரீ வியாசராயரின் காலம்: 1460 to 1539 AD

***

தாசரெந்தரே புரந்தர தாசரய்யா
வாசுதேவ கிருஷ்ணன சூசி பூஜிசுவ (தாசரெந்தரெ)

தாசரென்றால் அது புரந்தரதாசர்தான்
வாசுதேவ கிருஷ்ணனை வேண்டி பூஜை செய்யும்

க்ராஸகில்லதே போகி பரர மனெகள பொக்கு
தாசனெந்து துளசி மாலே தரிசி
பேசரில்லதே அவர காடி பேடி பளலிசுத
காசு கடிசுவ புருஷ ஹரிதாஸனே? (தாசரெந்தரெ)

பிக்ஷை எடுக்கும் நோக்கத்துடன் ஒவ்வொரு வீட்டுக்கும் சென்று
தாசர் என்று சொல்லி துளசி மாலைகள் அணிந்து
காசு மற்றும் பொருட்களை பிக்ஷை கேட்டு
அவர்களை துன்புறுத்தும் தாசன் ஹரிதாசனா? (இல்லை)

யாயிவாரவ மாடி விப்ரரிகே ம்ரிஷ்டான்ன
ப்ரியதலி தானொந்து கொடத லோபி
மாயா சம்சாரதல்லி மமதே ஹெச்சாகித்து
காயனவ மாடலவ ஹரிதாசனே? (தாசரெந்தரெ)

லாபம் தரும் வியாபாரத்தை செய்துகொண்டு,
தேவைப்படுவர்களுக்கு அன்னதானம் செய்யாமல்
உதவி செய்யாத கஞ்சன் சம்சார சாகரத்தில் மதி மயங்கி
(இறைவனைக் குறித்து) பாடல்கள் பாடாதவன் ஹரிதாசனா? (இல்லை)

நீதியெல்லவனரிது நிகமவேத்யன நித்ய
வாதசுதநல்லிஹன வர்ணிசுதலி
கீதா நர்த்தனதிந்தா கிருஷ்னன பூஜிசுவ
பூதாத்ம புரந்தர தாசரிவய்யா (தாசரெந்தரெ)

அனைத்து நீதிகளையும் அறிந்து வேதங்களை காப்பாற்றுபவனை (ஸ்ரீ கிருஷ்ணனை),

வாயு புத்திரனின் இதயகமலத்தில் இருப்பவனை
வர்ணித்தபடி ஆடல் பாடல்களுடன்
பூஜிக்கும் தாசரே புரந்தர தாசர் ஆவார்

**ரங்கா, கிருஷ்ணா - எனக்கு எதுவும் தெரியாதுப்பா!**

* ராமாயணம், பாரதம், பாகவதம் இப்படி எல்லாவற்றிலுமிருந்தும் சிறந்த பக்தர்களை மேற்கோள் காட்டி தாசர் பாடும் பாடல்.

* தியானம், காதல், பக்தி, நட்பு, பாட்டு இப்படி பல்வேறு விதங்களில் இறைவனை பக்தி செய்த பக்தர்களின் சிறப்புகளை பற்றி பாடும் பாடல்.

* அப்படி இந்த பக்தர்களுக்குத் தெரிந்த எதுவுமே எனக்கு தெரியாது. ஆனாலும் உன்னை நம்பி வந்துவிட்டேன். என்னை காப்பாற்று என்று ரங்கனை ஸ்ரீ புரந்தரதாசர் பாடும் பாடல்.

* இவ்வளவு விதமாக அந்த கிருஷ்ணனை வணங்கி வழிபடலாமென்று நமக்கு எடுத்துரைக்கும் பாடல்.

* தாயின் அன்பு, மனைவியின் காதல் - ஆகிய உணர்சிகளை வெகு அழகாக காட்டும் பாடல்.

* பக்தி மார்க்கத்தில் மிக மிக உன்னதமான நிலையை அடைந்த ஸ்ரீ புரந்ததாசரின் மிகச்சிறந்த பாடல்களில் ஒன்றாக இந்த பாடலை குறிப்பிட்டு சொல்வார்கள்.

* ஸ்ரீ புரந்தரதாசர் எந்த அளவுக்கு இதை பக்தியுடன் படைத்துள்ளாரோ, அதற்கு சற்றும் குறையாத அளவில் (தவறாக ஒப்பிட்டிருந்தால் மன்னிக்க) நம் பீமண்ணர் பாடியுள்ளார் என்பதை, கீழேயுள்ள காணொளியை சொடுக்கி, கேட்டு, அனுபவியுங்கள்.

* தாசர் இறைவனிடம் கேட்பது என்ன? பொன்னோ பொருளோ அல்ல. அப்புறம்? கீழே பாட்டில் இருக்கு. வாங்க பார்க்கலாம்.

***

**கருணிசோ ரங்கா கருணிசோ**

ஹகலு இருளு நின்னா
ஸ்மரணே மரெயேதந்தே (கருணிசோ)

அருள் செய்வாய், ரங்கா, அருள் செய்வாய்

பகலும் இரவும் உந்தன்
நினைவு மறக்காதிருக்க (கருணிசோ)

ருக்குமாங்கதனந்தே வ்ரதவ நானறியேனோ
சுகமுனியந்தே ஸ்துதிசலுஅறியே
பகவைரியந்தே த்யானவ மாடலறியே
தேவகியந்தே முத்திசலறீயேனோ ரங்கா (கருணிசோ)

ருக்குமாங்கதனைப் போல் விரதங்களை கடைப்பிடிக்க எனக்குத் தெரியாது
சுக முனிவரைப் போல் ஸ்லோகங்களைச் சொல்லி துதி செய்யத் தெரியாது
பகாசுரனின் பகைவன் [பீமன்] போல் தியானம் செய்யத் தெரியாது
தேவகியைப் போல் உன்னை கொஞ்ச தெரியாது (கருணிசோ)

கருடனன்ததி பொத்து திருகலு அறியே
கரெயலு அறியே கரிராஜனந்தே
வரகபியந்தே தாச்யவ மாடலறியே
சிரியந்தே நெரெது மோஹிசலறியேனு கிருஷ்ணா (கருணிசோ)

கருடனைப் போல் [என்] தோளில் [உன்னை] சுமந்து வரத் தெரியாது
கரிராஜன் [ஆதிமூலம் - யானை] போல் உன்னை கூப்பிடவும் தெரியாது
வரகபி [ஆஞ்சநேயர்] போல் உனக்கு சேவை செய்யவும் தெரியாது
ஶ்ரீ மஹாலக்ஷ்மியைப் போல் உன் மேல் காதல் செய்யவும் தெரியாது கிருஷ்ணா (கருணிசோ)

பலியந்தே தானவ கொடலு அறியேனு
பக்தி சலவனு அறியே ப்ரஹ்லாதனந்தே
ஒலிசலு அறியே அர்ஜுனனந்தே சகனாகி
சலஹோ தேவர தேவா
புரந்தரவிட்டலா ஶ்ரீ (கருணிசோ)

பலிச் சக்கரவர்த்தியைப் போல் தானம் கொடுக்கத் தெரியாது
பிரகலாதனைப் போல் திடமான பக்தி செய்யவும் தெரியாது
அர்ஜுனனைப் போல் உன் மேல் நட்பு பாராட்டவும் தெரியாது
என்னை காப்பாற்று இறைவனின் இறைவனே
ஶ்ரீ புரந்தர விட்டலனே (கருணிசோ)

**கிருஷ்ணா கிருஷ்ணா கிருஷ்ணா...**

இன்றைய பாட்டின் முன்னுரை - திரு. வேளுக்குடி கிருஷ்ணன் அவர்களின் தொடர் 'கண்ணன் நாமம் சொல்லும் கதைகள்'லிருந்து எடுக்கப்பட்டது.

பகவானுக்காக அவனது திருநாமத்தை நீங்கள் சொல்லவில்லை. உங்களுக்காக, உங்களின் நலனுக்காகத்தான் அவனது திருநாமத்தைச் சொல்கிறீர்கள். ஆகவே, அவனுடைய திருநாமத்தை, அனுதினமும் சொல்லவேண்டும்; சொல்லிக் கொண்டே இருக்கவேண்டும் என்று நீங்கள் மனதார ஆசைப்பட வேண்டும். ஒரு பொருளை

அடைவதற்கு ஆசைப்படுகிறோம். இத்தனைக்கும் அந்தப் பொருள், மிகமிகச் சாதாரணமானதாக இருக்கலாம்; கீழே விழுந்தால், சுக்குநூறாக உடையக்கூடிய தன்மை கொண்டதாகவும் இருக்கலாம்.

ஆக, நிலையற்ற ஒரு பொருளை அடைவதற்கு, எவ்வளவு ஆசைப்படுகிறோம்! அந்த ஆசையை, பகவானின்மீது வையுங்கள்; அவனை நினைப்பதில் விருப்பமாக ஈடுபடுங்கள்; அவனுடைய திருநாமத்தைச் சொல்வதில் கிடைக்கிற ஆத்மதிருப்தியை நேசியுங்கள். பகவானின் திருநாமத்தை ஆசையுடனும் பிரியத்துடனும், அன்புடனும் நேசத்துடனும் நீங்கள் சொல்லச் சொல்ல, அவனது பரிபூரணமான ஆசீர்வாதம் உங்களையும் உங்களின் சந்ததியையும் வந்து அடையும் என்பதில் மாற்றமில்லை!

எனவே, பகவானின் நாமங்களை, ஒரு கடமையாக, ஒரு தவமாக, சந்தோஷமாக, ஆழ்ந்த ஈடுபாட்டுடன் சொல்லி வாருங்கள். யார் கண்டது… உங்கள் வீடு தேடி அந்தக் கண்ணனே வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை!

***

நரஜன்ம பந்தாக நாலிகே இருவாக
கிருஷ்ணா என பாரதே
கிருஷ்ணா எந்தரே கஷ்டவு பரிஹார
கிருஷ்ணா என பாரதே (நரஜன்ம பந்தாக)

மனிதப் பிறவி வாய்த்திருக்கும்போது, நாக்கும் (பேச்சும்) இருக்கும்போது
கிருஷ்ணா என சொல்லக் கூடாதா?
கிருஷ்ணா என்று சொன்னால், அனைத்து கஷ்டங்களும் போய்விடுமே,
கிருஷ்ணா என சொல்லக் கூடாதா?

ஸ்நான பான ஜப தபகள மாடுத்தா கிருஷ்ணா என பாரதே
ஷால்யான்ன ஷடுரச திந்து த்ருப்தனாகி கிருஷ்ணா என பாரதே
கந்தன்ன பிகி பிகிதப்பி முத்தாடுதா கிருஷ்ணா என பாரதே
மந்தகாமினியொளு சரசவாடுத்தலொம்மே கிருஷ்ணா என பாரதே
(நரஜன்ம பந்தாக)

குளிக்கும்போதும், குடிக்கும்போதும், தியானங்கள் செய்யும்போதும்
அறுசுவைகளுடன் செய்த விருந்தினை உண்டு திருப்தியாக இருக்கும்போதும்
உடலெங்கும் சந்தனம் பூசிக் கொள்ளும்போதும்
மனதுக்கு பிரியமானவளுடன் சிரித்துப் பேசும்போதும்
கிருஷ்ணா என சொல்லக்கூடாதா?

பரிஹாஸ்யத மாத ஆடுத லொம்மே கிருஷ்ணா என பாரதே
பரிபரி கெலசதொளு ஒந்து கெலசவெந்து கிருஷ்ணா என பாரதே
துரித ராசிகளன்னு தரிது பிடிசுவ கிருஷ்ணா என பாரதே
கருடகமன நம்ம புரந்தர விட்டலன கிருஷ்ணா என பாரதே (நரஜன்ம பந்தாக)

நகைச்சுவையாக பேசும்போதும்
தினப்படி வேளைகளில் இன்னொரு வேலையாகவும்
துஷ்ட ராசிகள் தூர விலகிப் போகும்படியான
கருட வாகனனான நம் புரந்தர விட்டலனை
கிருஷ்ணா என சொல்லக் கூடாதா?

****

கேட்டீங்கல்லே? சொல்லுங்க. கிருஷ்ணா கிருஷ்ணா கிருஷ்ணா கிருஷ்ணா..

**தேனீயை போன்ற வாழ்க்கை என்னுடையது.**

தோழனாக, தாயாக, குழந்தையாக இன்னும் பலவாறெல்லாம் தன்னை எண்ணி பாடியிருக்கும் ஸ்ரீ புரந்தரதாசர் இந்த பாடலில், தன்னை ஒரு தேனீ'யாக நினைத்து பாடியிருக்கிறார்.

தேனுக்காக எப்பொழுதும் மலர்களையே சுற்றி வரும் தேனீயைப் போல, இவரும் அந்த புரந்தரவிட்டலனின் பாதமலர்களையே சுற்றி வருவதாக கற்பனை செய்து பாடுகிறார்.

இதோ பாடல்.

***

மதுகர விருத்தி என்னது -
அது பலு சன்னது
பதுமனாபன பாத - பதும மதுபவெம்ப (மதுகர)

தேனீயைப் போன்ற வாழ்க்கை என்னுடையது
அது (வாழ்க்கை) மிக அருமையானது
பத்மனாபனின் சரணத்தை - தாமரையாக பாவித்து
அதை சுற்றி வரும் (மதுகர)

காலிகெ கெஜ்ஜெ கட்டி நீல வர்ணன குண
ஆலாபிஸுத்த பலு ஒலக மாடுவந்த (மதுகர)

கால்களில் கொலுசு அணிந்து - நீலவண்ணனின் குணத்தை
புகழ்ந்து பாடியவாறே திரிந்தவாறு இருக்கும் (மதுகர)

ரங்கனாதன குண ஹிங்கதெ பாடுத்த
சிருங்கார நோடுத்த கண்களானந்த வெம்ப (மதுகர)

ரங்கனாதனின் குணங்களை மறைக்காமல் பாடியவாறு
அவன் அழகை என் கண்களால் ரசித்தவாறே இருக்கும் (மதுகர)

இந்திராபதி புரந்தர விட்டலனல்லி செந்தத
பக்தியிந்தானந்தவ படுவந்த (மதுகர)

இலக்குமியின் கணவனாகிய புரந்தர விட்டலனிடத்தில்
ஆழமான பக்தி வைத்து
அதனால் ஆனந்தமாய் பாடியவாறு இருக்கும் (மதுகர)

**பாரய்யா வேங்கடரமணா...**

புரந்தரதாசருக்கு திருப்பதி வெங்கடரமணன் மேல் அபார பிரியம். அவரைக் குறித்து பற்பல பாடல்களைப் பாடியிருக்கிறார். அனைத்துமே புகழ் பெற்ற பாடல்கள்தான். அவற்றில் ஒன்றுதான் இன்று பார்க்கப் போவது. இதுவும் ஒரு புகழ்பெற்ற பாடல்தான்.

ஸ்ரீமன்நாராயணனின் பத்து அவதாரங்களையும் சொல்லி, அவன் சிறப்புகளை பாடி, அவனை எப்படி அழைக்கிறார் என்று இந்த பாடலில் பார்ப்போம்.

பாரய்யா வேங்கடரமணா பாக்யதா நிதியே
பாரோ விஸ்வம்பரனே பாரோ
பக்தர சலஹுவனே பாரோ (பாரய்யா)

அளவில்லாத செல்வத்தை வேண்டியவருக்கு
வாரி வழங்கும் வேங்கடரமணனே, நீ வாராய்.
உலகத்தையே ஆடை/அணிகலனாக அணிந்தவனே,
பக்தர்களை கைவிடாமல் காப்பவனே, நீ வாராய் (பாரய்யா)

வேத கோசரனே பாரோ ஆதி கஷ்யபனே பாரோ
மேதினி சுரரொடெயனே பாரோ
பிரஹ்லாதன காய்தவனே பாரோ (பாரய்யா)

வேதங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவனே,
முதன்முதலில் தோன்றிய கூர்மமே,
வராகனாய் உலகத்தை மீட்டவனே,
பிரகலாதனை காத்த நரசிம்மனே நீ வாராய் (பாரய்யா)

வாமன பார்கவனே பாரோ ராம கிருஷ்ணனே பாரோ
பிரேமதிம் பௌத்தனே பாரோ சுவாமி கல்கி நீ பாரோ (பாரய்யா)

வாமனனே, பார்கவனே, ராம, கிருஷ்ணனே,
அன்பே உருவான பௌத்தனே, கல்கியே நீ வாராய் (பாரய்யா)

குரு மத்வபதி நீ பாரோ வரத கேசவனே பாரோ
பரமாத்மா நீ பாரோ புரந்தரவிட்டலனே நீ பாரோ (பாரய்யா)

மத்வபதியான ஸ்ரீ மத்வரே, வரதராஜனே,
பரமாத்மனே, ஸ்ரீ புரந்தர விட்டலனே, நீ வாராய் (பாரய்யா)

**எப்போதும் என் இதயத்திலேயே வசிப்பாயாக.**

இந்த உடம்பே ஆலயம்; என் இதயமே உன் கோயில்; இங்கேயே இருந்துவிடு. ஆரத்தி எடுத்து, பாட்டு பாடி, உன்னை வணங்கியவாறே இருப்பேன். என்னை விட்டு போய்விடாதே. என்னை காப்பாற்று.

இதைத்தான் ஸ்ரீ விஜயதாசர் இந்த பாடலில் பாடுகிறார்.

சதா என்ன ஹ்ருதயத்தல்லி
வாச மாடோ ஸ்ரீ ஹரி (சதா)

எப்போதும் என் இதயத்திலேயே
வசிப்பாயாக, ஸ்ரீ ஹரியே (சதா)

நாதமூர்த்தி நின்ன பாத
மோததிந்தா பஜிசுவே (சதா)

நாத வடிவானவனே, உன் பாதங்களை
மகிழ்ச்சியுடன் (உணர்ச்சி வசப்பட்டு) வணங்குவேன் (சதா)

ஞானவெம்போ நவரத்னத மண்டபத மத்யதல்லி
கானலோலன குள்ளிரிசி த்யானதிந்தா பஜிசுவே (சதா)

அறிவு என்னும் நவரத்தின மண்டபத்தின் நடுவே
பாடல்களின் ரசிகனே உன்னை உள்ளிறுத்தி, த்யானம் செய்து, வணங்குவேன் (சதா)

பக்தி ரசவெம்போ முத்து மாணிக்யத ஹரிவாணதி
முக்தனாக பேகு எந்து முத்தினாரதி எத்துவே (சதா)

முத்து மற்றும் மாணிக்கத்தால் ஆன,
பக்தி என்னும் இந்த கூடையால்,
முக்தி வேண்டும் என்று வேண்டி ஆரத்தி எடுப்பேன் (சதா)

நின்ன நானு பிடுவேனல்லா என்ன நீனு பிடது சல்லா
பன்னக சயன விஜயவிட்டல நின்ன பகுதர கேளோ சொல்லா (சதா)

உன்னை நான் விடப்போவதில்லை; என்னை நீயும் விட்டுவிடாதே ஆதிசேஷன் மேல் சயனித்திருக்கும் விஜயவிட்டலனே,
உன் பக்தர்களின் குரலை கேட்பாயாக (சதா)

**எழுந்தருள் எழுந்தருள் கோவிந்தா!**

திருப்பதியில் தினமும் அந்த ஏழுமலையானை எழுப்பும் எம்.எஸ்.அம்மா பாடும் சுப்ரபாதம் ஆகட்டும், அதையே தமிழில் மொழிபெயர்த்து வந்திருக்கும் திருப்பள்ளியெழுச்சி ஆகட்டும், கேட்கும்போதே எவ்வளவு இனிமையாகவும் அருமையாகவும் இருக்கிறது. நாராயணனின் அவதாரங்கள், லீலைகள், பெருமைகள் என அனைத்தையும் பாடியுள்ள தாசர்கள், அந்தக் கண்ணனை தாலாட்டு பாடி தூங்கச் செய்வதோடு மட்டுமல்லாமல், தூங்கும் இறைவனை எழுப்பும் சுப்ரபாத பாடல்களையும் பாடியுள்ளனர்.

ஒரு வருடம் கழித்து மறுபடி பதிவுகளைத் துவக்கும் இந்த நாளில், இறைவனை எழுப்பி, நம்மை பார்த்து அருளுமாறு கேட்போம். யுத்தத்திற்கு உதவி செய்ய அழைக்க வந்த அர்ஜுனன், தூங்கிக் கொண்டிருக்கும் கண்ணனின் காலடியில் அமர்ந்து, அவனுடைய முதல் பார்வை தன் மேல் பட்டதாலேயே, தான் வேண்டிய வரத்தைப் பெற்றான் என்பது போல், நாமும் அவன் காலடியில் அமர்ந்து, இந்த சுப்ரபாதத்தைப் பாடி, அவன் கருணைப் பார்வை நம் மேல் படுமாறு வேண்டுவோம்.

இனி கனகதாசர்.

ஏளு நாராயணனே ஏளு லட்சுமி ரமணா
ஏளு ஸ்ரீ கிரியொடெயா, வேங்கடேசா

எழுந்தருள் நாராயணனே, எழுந்தருள் லட்சுமி ரமணனே
எழுந்தருள் மலைவாசனே, வேங்கடேசனே

காசித ஹாலன்னு காவடியொளு ஹெப்பிட்டு
லேசாகி கடெது ஹொசபெண்ணெ கொடுவே
சேஷ சயனனே ஏளு சமுத்ர மதனவ மாடு
தேச கெம்பாயித்து ஏளய்யா ஹரியே (ஏளு)

காய்ச்சிய பாலை பாத்திரத்தில் நிரப்பி
மெதுவாக கடந்து புதிதாக திரட்டிய வெண்ணையை கொடுப்பேன்
நாகத்தில் படுத்திருப்பவனே எழுந்திரு, பாற்கடலை கடைய வா
வானம் சிவந்துவிட்டது, எழுந்திருப்பாயாக (ஏளு)

அரளு மல்லிகே ஜாஜி பரிமளத புஷ்பகள
சுரரு தந்தித்தாரே பலு பகுதியிந்தா
அரவிந்தனாபா சிரி விதி பவாதிகளொடேயா
ஹிரிதாகி கோளி கூகிது, ஏளய்யா ஹரியே (ஏளு)

அரளி, மல்லிகை, ஜாஜி (ஒரு விதமான Jasmine) போன்ற மணம் மிகுந்த பூக்களை
பக்தர்கள் மிகவும் பக்தியுடன் கொண்டு வந்திருக்கிறார்கள்
தாமரை மணாளனே லட்சுமிதேவி, பிரம்மா, சிவன் ஆகியவர்களை கொண்டவனே,
கோழி கூவியாயிற்று, எழுந்திருப்பாயாக (ஏளு)

தாசரெல்லரு பந்து, தாளி தர்சன கொண்டு
லேசாகி தாள தண்டிகேயனு பிடிது
ஸ்ரீஷ நெலெயாதி கேசவ நிம்ம பாதவனு
லேசாகி ஸ்மரிசி பொகளுவரு ஹரியே (ஏளு)

தாசர்கள் அனைவரும் அதிகாலையில் உன் தரிசனத்தை வேண்டி
மெதுவாக தாளத்துடன் ஜதி சேர்த்து
ஆதிகேசவனான உன் பாதத்தை நினைத்து

எந்த நேரமும் உன்னை புகழ்ந்தவாறே இருக்கின்றனர் (ஏளு)

**எப்போதும் ஹரியை நினை மனமே!**

அஜாமிளன். துவக்கத்தில் ஒரு நல்ல பக்தனாக இருந்து தினசரி பூஜைகளெல்லாம் செய்து வந்தவர். நடுவில் மதி மயங்கி, அனைத்தையும் மறந்து வேறொரு பெண்ணின் பின்னால் திரிந்து வாழ்ந்தார். தன் இறுதிக் காலத்தில் அவரை அழைத்துப் போக எமதூதர்கள் வந்து நின்றிருந்தபோது, கடைசி மகனை 'நாராயணா' என அழைத்த நேரத்தில் உயிர் பிரிந்ததால், நாராயணனின் தூதர்கள் வந்து அவரை சுவர்க்கத்திற்கு அழைத்துப் போனார்கள் என்று சொல்வார்கள்.

அப்படின்னா, நாம ஏன் வாழ்நாள் முழுக்க நாராயணனை நினைக்கணும்? அவன் பெயரை சொல்லணும்? அஜாமிளன் மாதிரி கடைசி காலத்தில் மட்டும் சொன்னால் போதுமேன்றவங்களுக்கு தாசர் ஒரு தனி பாடலில் - தம்பி, அப்படி முடியாது. அந்த நேரத்தில் உன்னால் எதுவுமே செய்ய முடியாது என்கிறார். அந்த பாட்டு வேறொரு நாளில். இன்றைய பாட்டு வேறே.

இன்னிக்கு தாசர் சொல்றது - எப்போதும் ஹரியை நினைத்துக் கொண்டேயிரு; அதுவே மோட்சத்திற்காக சுலபமான வழி என்கிறார். அதற்கு அவர் சொல்கிற உதாரணங்கள், நாம அடிக்கடி, எல்லா பாடல்களிலேயும் பார்க்கிற உதாரணங்கள்தான். கஜேந்திரன், திரௌபதி, மேலே பார்த்த அஜாமிளன் இப்படி. 'ஹரி ஸ்மரணே மாடோ' என்ற இந்தப் பாட்டு மிகவும் புகழ்பெற்றது. யூட்யூபில் தேடினால் பற்பல பாடகர்கள் பாடியுள்ளதாக காணொளிகளை காணலாம்.

ஹரி ஸ்மரணே மாடோ நிரந்தர
பரகதிகே இது நிர்தார நோடோ (ஹரி)

எப்போதும் ஹரியை நினைத்துக் கொண்டே இரு
மோட்சத்திற்கு இதுதான் கண்டிப்பான வழி பாரு (ஹரி)

துரித கஜக்கே கண்டீரவ எனிசித
சரணாகத ரக்ஷக பாவன நீ (ஹரி)

கஷ்டத்தில் இருந்து பிளிறிய கஜேந்திரனுக்கு விரைவாக
சரணாகதி கொடுத்து ரட்சித்தவனை நீ (ஹரி)

ஸ்மரணேகைத ப்ரஹ்லாதன ரக்ஷிஸித
துருள ஹிரண்யகன கரவ சீளித
தருணி த்ரௌபதி மொரெயிடதாக்ஷண
பரதிந்தாக்ஷயவிட்ட மஹாத்மன (ஹரி)

எப்போதும் அவனை நினைத்துக் கொண்டேயிருந்த பிரகலாதனை ரட்சித்து
ஹிரண்யகசிபுவின் கையை முறித்து
(காப்பாற்று என்று) த்ரௌபதி முறையிட்ட அதே நொடியில்
முடிவில்லாத ஆடையை வழங்கிட்ட மகாத்மாவான (ஹரி)

அந்து அஜாமிள கந்தன கரெயலு
பந்து சலஹி ஆனந்தவ தோரித
ஸ்ரீஷ புரந்தர விட்டல ராயன
சிருஷ்டிகொடேயன முக்தி பஜிஸி நீ (ஹரி)

அன்று அஜாமிளன் தனது மகனை கூப்பிட்டபோது
உடனே வந்து அவனுக்கு ஆனந்தத்தை காட்டிய
ஸ்ரீபதியான புரந்தர விட்டலனிடம்;
பிறப்பை தருபவனிடம், முக்தியை வேண்டி பாடல்களைப் பாடி நீ (ஹரி)

**வாராய், கிருஷ்ணா வாராய்...**

கிருஷ்ணா நீ பேகனே பாரோ. இந்தப் பாடலை கண்டிப்பா அனைவரும் கேட்டிருப்பீங்க. ஏற்கனவே நம்ம தளத்தில் பாத்துட்டோம். குட்டி கிருஷ்ணனை, வேகமாய் வந்து உன் திருமுகத்தை காட்டு என்னும் அந்தப் பாடலை இயற்றியவர் ஸ்ரீ வியாசதீர்த்தர். (1460-1539). இவர் ஸ்ரீ புரந்தரதாசரின் குரு. புரந்தரதாசரின் காலம் (1484-1564). தன் குருவைப் போலவே இவரும் கிருஷ்ணனை வாராய் என்று அழைக்கும் சில பாடல்களைப் பாடியுள்ளார். அவற்றில் ஒன்றுதான் இன்று பார்க்கப்போவது.

கிருஷ்ணன், மாடு மேய்க்கும்போது, புல்லாங்குழல் ஊதாத சமயங்களில் அங்கிருக்கும் நண்பர்களுடன் என்ன விளையாடுவார்? பந்து, பம்பரம் ஆகியவற்றை விளையாடுவதுடன், டாண்டியா நடனமாடியபடி பொழுதைக் கழிக்கிறாராம். இப்படி விளையாடும் சிறுவனை, சங்கு சக்கரம் ஏந்திய நாராயணனை, பல அவதாரங்கள் எடுத்த பகவானை - அவன் புகழை, அருமை பெருமைகளை உலகில் பரப்புவதே தன் வேலை/ கடமை என்று கூறி அழைக்கிறார் தாசர்.

சினிகொளு = டாண்டியா குச்சிகள்
செண்டு = பந்து
புகிரி = பம்பரம்

***

யாதவ நீ பா யதுகுல நந்தன
மாதவ மதுசூதன பாரோ (யாதவ)

கிருஷ்ணா நீ வாராய், யதுகுலத்தின் பிறந்தவனே
மாதவா, மதுசூதனா, வாராய்.

சோதரமாவன மதுரெலி மடஹித
யசோதே கந்தா நீ பாரோ (யாதவ)

தாய்மாமனை (கம்சன்) மதுராவில் கொன்றவனே
யசோதை மைந்தனே நீ வாராய் (யாதவ)

கனகாலந்திகே குலுகுலு எனுதலி
ஜணஜண எனுதிக நாதகளு
சினிகொளு செண்டு பொகரெயனாடுதா
சன்னவரொடெகூடி நீ பாரோ (யாதவ)

கணுக்காலில் (கட்டிய) ஜல்ஜல் என்னும் சத்தமிடும் (கொலுசுடன்)
ஜண்ஜண் என்று அதிரும் (இனிமையான உன் புல்லாங்குழல்) இசையுடன்
டாண்டியா, பந்து, பம்பரத்துடன் நீ ஆடிக்கொண்டு
உன் நண்பர்களுடனே நீ வாராய் (யாதவ)

சங்கசக்ரவு கையலி ஹொளெயுத
பிங்கத கோவள நீ பாரோ
அகளங்க மஹிமனே ஆதி நாராயணா
பேகெம்ப பகுதரிகொலி பாரோ (யாதவ)

ஜொலிக்கும் சங்கு சக்கரத்தை கையில் பிடித்து
எப்போதும் வெற்றி பெறுபவனே, இடையனே நீ வாராய்
குறைகளேயில்லாத மஹாத்மனே ஆதி நாராயணனே
உன்னை வேண்டும் பக்தர்களை காப்பாற்றுபவனே, வாராய் (யாதவ)

ககவாஹனனே பகெ பகெ ரூபனே
நகேமுக தர்சனனே நீ பாரோ
ஜகதொளு நின்னய மஹிமெயா பொகளுவே
புரந்தர விட்டலா நீ பாரோ (யாதவ)

கருட வாஹனனே, பல அவதாரங்களை எடுத்தவனே
சிரித்த முகத்தையுடையவனே நீ வாராய்
உலகத்தில் உன் மகிமையை பாடி பரப்புவேன்

புரந்தரவிட்டலா நீ வாராய் (யாதவ)

**ராம நாமம் என்னும் பாயசம்.**

பாயசம். பால் பாயசம். இப்படி சொன்னவுடன் வாயில் எச்சில் ஊறும். அது சாதாரண மக்களாகிய நமக்கு.

புரந்தரதாசருக்கு?

வேதங்கள், புராண இதிகாசங்கள் அனைத்தையும் கற்றதோடு இல்லாமல், அவற்றின் சாரத்தை அனைவருக்கும் புரியும்வண்ணம் எளிய கன்னடத்தில், பல இடங்களில் நகைச்சுவையையும் சேர்த்துக் கொடுப்பவராயிற்றே. அவருக்கு இறைவனின் திருநாமத்தை உச்சரிக்கும்போதே வாயில் எச்சில் ஊறுகிறதாம்.

ராமா. கிருஷ்ணா. விட்டலா.

இந்தப் பெயர்களை அடிக்கடி சொன்னால், பால் பாயசத்தைக் குடித்தது போல் அவ்வளவு இனிமையாக இருக்குமாம்.

நாமும் சொல்லிப் பார்ப்போமா?

ராமா
கிருஷ்ணா
விட்டலா

இப்போ பாட்டு.

இந்தப் பாட்டில் பாயசம் செய்வதற்கான சமையல் குறிப்பைச் சொல்லி, அதே போல் இறைவனின் நாமங்களை உச்சரிக்க வேண்டிய வழிமுறைகளையும் விளக்குகிறார் தாசர்.

ராம நாம பாயஸக்கே கிருஷ்ண நாம சக்கரே
விட்டல நாம துப்பவ கலசி பாயி சப்பரிசிரோ (ராம)

ராமா என்னும் பாயசத்தை தயாரிக்க, கிருஷ்ணா என்னும் சர்க்கரையை பயன்படுத்தவும்;
விட்டலா என்னும் நெய்யைப் போட்டுக் கலக்கி, சுவைத்துப் பாருங்கள், சப்புக் கொட்டுங்கள் (வாயில் எச்சில் ஊறும்) (ராம)

ஒம்மன கோதிய தந்து வைராக்ய கல்லலி பீசி
சும்மனே சஜ்ஜிய தெகெது சன்ன ஷாவிகே மாடிரோ*** (ராம)

கவனம் (ஒருமுனைப்படுத்தல்) என்னும் கோதுமையைக் கொண்டு வந்து, வைராக்யம் என்னும் கல்லில் போட்டு
அந்த மாவைக் கையில் எடுத்து மெல்லிய இழையாக செய்வீராக (ராம)

ஹ்ருதயவெம்போ மடிகேயல்லி பாவவெம்போ எசரு இட்டு
புத்தியிந்தா பக்வவ மாடி ஹரிவாணலி படிசிகொண்டு
ஆனந்த ஆனந்தவெம்போ டேகு பந்தாக எரடு டேகு பந்தாக
ஆனந்த மூர்த்தி நம்ம புரந்தர விட்டலன நெனெயிரோ (ராம)

இதயம் என்கிற பானையில்; எண்ணம் என்கிற அந்த மாவைப் போட்டு
புத்தியுடன் அதை நன்றாக சமைத்து; ஹரி என்கிற பெரிய தட்டில் போட்டு
(சாப்பிட்டபிறகு) ஆனந்த ஆனந்த என்கிற இரண்டு ஏப்பங்கள் வரும்போது
ஆனந்த மூர்த்தி நம் புரந்தர விட்டலனை நினையுங்கள் (ராம)

***சஜ்ஜிகே - கோதுமை & சர்க்கரையால் செய்யப்படும் ஒரு இனிப்புப் பண்டம்.
ஷாவிகே - சேமியா போல் மெல்லிய, நீண்டதாக ஆக்கிக் கொள்ளுதல்

மேலே கூறிய பாட்டின் பொருளில் பாயசத்திற்கான குறிப்புகளை நீக்கிவிட்டுப் படித்தால் தாசர் கூறவரும் பக்தியின் தத்துவம்; ராம நாமத்தின் மகிமை ஆகியவை புரியும்.

அதாவது இப்படி:

கவனத்துடனும், வைராக்யத்துடனும் செய்ய வேண்டியது என்னவென்றால்; இதயத்தில் (ராமா) என்கிற எண்ணத்தை விதைத்து; புத்தியால் அதன் மகிமையை உணர்ந்து கொண்ட பிறகு, வரும் சந்தோஷத்தை / ஆனந்தத்தை எப்படி கொண்டாடுவது? மறுபடி ராமா, ராமா என்கிற புரந்தர விட்டலனை நினைத்துதான்.

**இறைவனின் திருவடிக்காக எதையெல்லாம் இழக்க முடியும்?**

கனகதாசருடைய பெரும்பாலான பாடல்களில் வைராக்கியம் நிரம்பியிருக்கும். அதாவது, மனைவி, மக்கள், ஊர், உலகம் அனைத்தையும் விட்டுடறேன் - எனக்கு நீதான் வேண்டும். உன் திருவடிகளே போதும். வேறு எதையும் நாம் விரும்ப மாட்டேன். எதுவுமே எனக்கு வேண்டாம். இப்படி.

இன்றைய பாடலும் அப்படியே. இறைவா, உன் திருவடிகளுக்காக, அவற்றை பார்த்துக் கொண்டேயிருப்பதற்காக, நான் எதையும் விடத் தயாராக இருக்கிறேன்னு அவர் சொல்ற பட்டியலைப் பார்த்தால் பெரும் மலைப்பாக இருக்கிறது. இவ்வளவையும் சொல்றவர் அடக்கத்துடன் ‘இவற்றை நான் தற்பெருமைக்காக சொல்லவில்லை. நிஜமாவே (அனுபவத்திலும்) சொல்றேன். உன்னை விட்டு என்னால் ஒரு நொடியும் இருக்கவே முடியாது என்று பாடுகிறார்.

***

தொரெது ஜீவிஸபஹுதே ஹரி நின்ன சரணவ
பரிதே மாதேகின்னு அரிது பேளுவேனய்யா (தொரெது)

உன் காலடியை விட்டு (யாராலும்) சந்தோஷமாய் வாழமுடியுமா (முடியாது)
தற்பெருமைக்காக சொல்லவில்லை; அனுபவத்தில் சொல்கிறேன் ஐயா (தொரெது)

தாயி தந்தெயா பிட்டு தபவு மாடலு பஹுது
தாயாதி பந்துகள பிடலு பஹுது
ராய முனிதரே ராஜ்யவ பிடபஹுது
காயஜாபித நின்ன அடிய பிடலாகது (தொரெது)

தந்தை தாயை விட்டுப் போய் தவம் செய்யவும் முடியும்
தாயாதி (பங்காளிகள்) உறவினர்களை உதறவும் முடியும்
அரசன் (நம் மேல்) கோபப்பட்டால், ஊரை விட்டுப் போய்விடவும் முடியும்
என்னை இந்தப் பிறப்பை அளித்தவனே, உன் அடியை விடவே முடியாது (தொரெது)

ஒடலு ஹசிதரே அன்னவ பிடபஹுது
படெத க்ஷேத்ரவ பிட்டு ஹொரடலுபஹுது
மடதி மக்கள கடெகே தொளகிஸி பிடபஹுது
கடலொடெய நிம்மடியா களிகே பிடலாகது (தொரெது)

பசித்த வயிறாயினும் உணவை விட்டு (பட்டினியாக) இருக்க முடியும்
இருக்கும் இடத்தை விட்டு கிளம்பவும் முடியும்
மனைவி மக்களை (குடும்பத்தை) விட்டு போகவும் முடியும்
பாற்கடலில் இருப்பவரே, உன் அடியை ஒரு நொடியும் விடமுடியாது (தொரெது)

பிராணவா பரரிகே பேடிதரே கொடபஹுது
மானாபிமானவ தக்கிச பஹுது
ப்ராணதாயகனாத ஆதிகேசவராய
ஜான ஸ்ரீ கிருஷ்ணா நின்னடிய பிடலாகது (தொரெது)

யாராவது (என்) உயிரைக் கேட்டாலும் கொடுக்க முடியும்
(என்) கௌரவம் / சுயமரியாதையை குறைத்துக் கொள்ளவும் முடியும்
எனக்கு உயிரைக் கொடுத்த ஆதிகேசவனே
தலைசிறந்தவனே, கிருஷ்ணனே, உன் அடியை விடவேமுடியாது (தொரெது)

**பிள்ளையார்பட்டி ஹீரோ**

விநாயகர். அனைவருக்கும் மிகவும் பிடித்தமானவர். வெறும் மஞ்சளைப் பிடித்துக் கூப்பிட்டாலும் ஓடோடி வருவார் என இவரது பெருமைகளை சொல்லிக் கொண்டே போகலாம்.

தாரதம்யம். ஆங்கிலத்தில் Hierarchy. தமிழில் படிநிலை. த்வைதத்தில் கடவுள்கள் ஒரு படிநிலையில் அடுக்கப்பட்டுள்ளனர். (பார்க்க: விக்கி சுட்டி) நிலையின் மேல் ஸ்ரீவிஷ்ணு. அவருக்கு அடுத்து மகாலட்சுமி. பிறகு பிரம்மா. இப்படியான படியில் சற்று கீழே வருபவரே விநாயகர். ஆனாலும் இவர் மேல் புரந்தரதாசர் முதலான அனைத்து தாசர்களும் பற்பல பாடல்களைப் பாடியுள்ளனர்.

விநாயகர் முதல் இந்த படிநிலையில் உள்ள அனைத்து கடவுள்களுமே ஸ்ரீவிஷ்ணுவை வணங்குகின்றனர் என்பதால், தாசர் இத்தகைய பாடல்களின் இறுதியில், புரந்தரவிட்டலனின் பக்தனே, தாசனே என்று விளித்துவிடுவார். இன்றைய பாடலிலும் இதை கவனிக்கவும்.

தாசர் பாடிய இன்னொரு பிள்ளையார் பாடலை ஏற்கனவே பார்த்திருக்கிறோம். சுட்டி: http://dasar-songs.blogspot.in/2012/01/blog-post.html

சரணு சித்தி விநாயகா - மிகவும் புகழ்பெற்ற பாடல்.

சரணு சித்தி விநாயகா சரணு வித்ய பிரதாயகா
சரணு பார்வதி தனைய மூர்த்தி சரணு மூஷிக வாகனா (சரணு)

மோட்சத்தை, கல்வியை கொடுப்பவனே விநாயகா, உன்னை வணங்குகிறேன்
பார்வதியின் மைந்தனே, மூஞ்சூறு வாகனனே, உன்னை வணங்குகிறேன் (சரணு)

நித்தில நேத்ரனே தேவி சுதனே நாகபூஷண பிரியனே
கடிகடாங்கத கோமளாங்கனே கர்ண குண்டல தாரணே (சரணு)

நெற்றியில் கண் இருப்பவரின் (சிவனின்) மனைவியின் புதல்வனே,
பாம்பை ஆபரணமாக அணியப் பிரியப்படுபவனே,
பெரிய பானையைப் போல் வயிறு உடையவனே,
குண்டலங்கள் அணிந்த காது உடையவனே (சரணு)

பட்ட முத்தின பதக ஹாரனே பாஹு ஹஸ்த சதுஸ்தனே
இட்ட தோடுகயா ஹேம கங்கண பாஷாங்குஷ தரனே
குக்ஷி மகா லம்போதரனே இக்ஷு சாப கேளிதனே
பக்ஷி வாகன ஸ்ரீ புரந்தர விட்டலன நிஜ தாசனே (சரணு)

வட்டமான முத்துமாலையை அணிபவனே,
நான்கு கரங்கள் உடையவனே,
தங்க வளையல்கள், ஆபரணங்கள் அணிந்தவனே,
கயிறு, அங்குச ஆயுதங்களை தரித்தவனே,

பெரிய வயிறு உடையவனே,
இக்ஷு சாபனை (என்னும் அரக்கனை) வென்றவனே
கருட வாகனான ஸ்ரீ புரந்தர விட்டலனின்
நிஜமான தாசனே (சரணு)

**ஸ்ரீ ராம ஜெயராம ஜெய ஜெய ராமா.**

கேட்டதில் பிடித்தது:

ராம், ராமன் என்கிற பெயர்களை வைத்தால், சொல்லவும்/கூப்பிடவும் மிகவும் எளிது. போகிற வழிக்கு புண்ணியமும் சேரும். சிலருக்கு நாராயணன், லட்சுமி நாராயணன், நரசிம்மன் என்றெல்லாம் பேர் வைக்கிறார்கள். அதை அப்படியே கூப்பிட்டால், ராம நாமத்தைப் போல பலனைப் பெறலாம். ஆனால் கூப்பிடுவதோ, முறையே, நாணா, லச்சு, நர்ஸு என்று கூப்பிடுகிறார்கள். அதுவே ராமன் என்று பெயர் வைத்தால், அதை சுருக்கினாலும் ராம் என்றே ஆகும். ஆகவே, அனைத்து வகையிலும் ராம நாமம் சுலபமானது, சிறந்தது.

***

பார்வதி சிவபெருமானிடம் கேட்கும் கேள்வி:

கேனோபாயேன லகுனா விஷ்ணோர் நாம சஹஸ்ரகம்
பட்யதே பண்டிதைர் நித்யம் ஸ்ரோதும் இச்சாம்யஹம் ப்ரபோ.

இறைவனின் ஆயிரம் நாமங்களை கற்று, மனப்பாடம் செய்து தினம்தோறும் சொல்வது கற்றறிந்த பண்டிதர்களால் மட்டுமே முடியும். அப்படியில்லாதவர்கள் இறைவனை நினைக்க சுலபமான வழி எது?

அதற்கு சிவபெருமான் சொன்னது:

ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே
சஹஸ்ர நாம தத் துல்யம் ராம நாம வரானனே

'ஸ்ரீராம ராம ராமா' என்ற அழகான நாமத்தை சொன்னால், 1000 திருநாமங்களை சொன்னதன் பலன் கிடைக்கும்.

***

எந்தவொரு விஷயத்தையும் பெரியவர்கள் சொன்னால், 'அவரே சொல்லிட்டார்'னு சொல்வதைக் கேட்டிருக்கலாம். அதைப் போல் தாசரும், ராம நாமத்தின் மகிமையை சொல்லும்போது, பரமசிவன் தன் மனதுக்கு இனியவளிடம் சொன்ன மந்திரம் என்று இதன் பெருமையை எடுத்துரைக்கிறார். நாம் சாதாரணமாக அது இது என்று பேசுவதைப் போல், அந்த மந்திரம், இந்த மந்திரம்னு எதையாவது சொல்லிக்கிட்டிருக்காமல், 'இந்த' மந்திரத்தை சொல்லுங்கள் என்கிறார். பாடலையும் அதன் பொருளையும் பாருங்கள். அவ்வப்போது 'ராம ராம' என்று சொல்லுங்கள்.

***

ராம மந்தரவ ஜபிஸோ, ஹே மனுஜா
ராம மந்த்ரவ ஜபிஸோ
ஆ மந்த்ர ஈ மந்த்ர மெச்சி கெடலுபேடா
சோம சேகர தன்ன பாமெகே ஹேளித மந்த்ர (ராம)

ராம நாமத்தை ஜபியுங்கள், ஹே மக்களே
அந்த நாமம், இந்த நாமத்தையெல்லாம் பெரிதென்று சொல்லி கெட்டுப் போக வேண்டாம்

அந்த சிவபெருமான் தன் மனதிற்கு இனியவளிடம் (பார்வதியிடம்) சொன்ன நாமம் இதுவே (ராம)

குலஹீனனாதரு கூகி ஜபிஸுவ மந்த்ர
சல பீதியொளு உச்சரிப மந்த்ர
ஹலவு பாபங்கள ஹதகெடிசுவ மந்த்ர
சுலபதிந்தலி ஸ்வர்க சூரெகொம்புவ மந்த்ர (ராம)

அனைவரும் கூடி சொல்லக்கூடிய மந்திரம்
சாலை/தெருக்களில் போகும்போதும் சொல்லக்கூடிய மந்திரம்
எண்ணிலடங்கா பாவங்களை தொலைத்துக் கட்டும் மந்திரம்
சுலபமாக சொர்க்கத்தை அடைய வைக்கும் மந்திரம் (ராம)

மருதாத்மஜ நித்ய ஸ்மரணெ மாடுவ மந்த்ர
சர்வ ரிஷிகளிலி சேரித மந்த்ர
துரித கானனகிது தாவானல மந்த்ர
பொரெது விபீஷணனிகே பட்ட கட்டித மந்த்ர (ராம)

வாயு மைந்தன் (அனுமன்) தினமும் நினைத்து பூஜிக்கும் மந்திரம்
அனைத்து முனிவர்களும் ஜபிக்கும் மந்திரம்
பிரச்னைகளுக்கு விரைவாக தீர்வு அளிக்க உதவும் மந்திரம்
உச்சரித்த விபீஷணனுக்கு ஆட்சியைப் பெற உதவிய மந்திரம் (ராம)

ஞானநிதி நம்ம ஆனந்த தீர்த்தரு
சானுராகதி நித்ய சேவிப மந்த்ர
பானுகுலாம்புதி சோம நேனிப மந்த்ர
தீன ரக்ஷக புரந்தர விட்டலன மந்த்ர (ராம)

ஞான நிதியாகிய நம்ம ஆனந்த தீர்த்தர் (ஸ்ரீ மத்வாச்சாரியர்)
காலை எழுந்ததிலிருந்து முழு நாளும் (எப்போதும்) வணங்கும் மந்திரம்
சூரிய குலத்தில் உதித்த (ராமச்)சந்திரனை நினைக்க வைக்கும் மந்திரம்
(நமது) கஷ்டத்தில் எப்போதும் உதவும் புரந்தரவிட்டலனின் மந்திரம் (ராம)

**கற்கண்டு சாப்பிடுங்கள் கற்கண்டு!!**

கற்கண்டை விட இனிமையானது எது? அந்த கிருஷ்ணனின் நாமம்தான். அதை சொல்லுவதால் நாக்கில், மனதில் எவ்வளவு இனிமை பரவுகிறது என்று சொல்கிறார் புரந்தர தாசர்.

இந்தப் பாடல் முழுக்க கற்கண்டையும், ஸ்ரீ கிருஷ்ணனின் பெயரையும் ஒப்பிட்டு, பின்னதின் இனிமையை அழகாக விவரிக்கிறார்.

கற்கண்டுன்னா எறும்பு வரும், நிறைய இருந்தா திருட்டு போயிடும், சந்தையில் வாங்கலாம், விற்கலாம், வண்டி கட்டி எடுத்துப் போயிடலாம் - ஆனால், கற்கண்டை விட மிகமிக இனிமையானதாக இருந்தாலும், ஸ்ரீகிருஷ்ணனின் நாமத்தை மேற்கண்ட எதாலும் எதுவும் செய்ய முடியாது என்கிறார்.

இன்று புரந்தர தாசரின் புண்ய தினம். அடுத்த சீசனை இந்த அருமையான பாட்டுடன் துவக்குவோம். புரந்தர விட்டலா.... வாங்க கற்கண்டு சாப்பிடலாம்...

கல்லு சக்கரே கொள்ளீரோ நீவெல்லரு
கல்லு சக்கரே கொள்ளீரோ
கல்லு சக்கரே சவி பல்லவரே பல்லரு
புல்ல லோசன ஸ்ரீ கிருஷ்ண நாமவெம்ப (கல்லு)

கற்கண்டு சாப்பிடுங்கள் கற்கண்டு - நீங்க எல்லோரும்
கற்கண்டு சாப்பிடுங்கள் கற்கண்டு
கற்கண்டை சாப்பிட்டவருக்கே தெரியும் (அது எவ்வளவு இனிமையென்று)
மலர்க் கண்களை உடைய ஸ்ரீ கிருஷ்ணனின் பெயர் என்னும் (கற்கண்டு)

எத்து ஹேருகளிந்தா ஹொத்து மாருவதல்லா
ஒத்தொத்தி கோணியளு தும்புவதல்லா
எத்த ஓதரு பாடிகே சுங்க இதக்கில்லா
உத்தம சரக்கிது அதி லாப பருவந்தா... (கல்லு)

எருமைகளால் இதை இழுத்துப் போகமுடியாது
எடுத்துப் போட்டு கோணியில் நிரப்பமுடியாது
எங்கு எடுத்துப் போனாலும் இதற்கு வாடகை, சுங்கம் (வரி) கிடையாது
உத்தமமான சரக்கு (பொருள்) இது, அதிகமான லாபம் தரும் பொருளான (கற்கண்டு)

நஷ்ட பீடுவதல்லா நாத ஹுட்டுவதல்லா
எஷ்டு ஒய்தரு பெலே ரொக்க இதக்கில்லா
கட்டிருவெய திந்து கடிமே ஆகுவதில்லா
பட்டணதொளகே பிரசித்த ஆகிருவந்தா.. (கல்லு)

(இதனால்) நஷ்டமே வராது.. (எவ்வளவு சேர்த்தாலும்) துர்நாற்றம் வராது
(உங்களிடமிருந்து) யாராவ்து எடுத்துப் போனாலும் மதிப்பு குறையாதது
கட்டெறும்பு தின்றாலும் குறையவே குறையாதது
பட்டணத்தில் மிகவும் பிரசித்தமானதாக இருக்கும்... (கற்கண்டு)

சந்தே சந்தேக்கே ஹோகி சிரம படிசுவதல்லா
சந்தே ஔகேயிட்டு மாருவதல்லா
சந்தத பக்தர நாலகே சவிகொம்ப
காந்த புரந்தர விட்டல நாமவெம்ப.. (கல்லு)

சந்தை சந்தையாக போய் விற்க முடியாதது

சந்தையில் வைத்து வாங்கவும் முடியாதது
எப்போதும் (அவர் பெயர் சொல்லும்) பக்தரின் நாக்கில் இனிமையை தரும்
புரந்தர விட்டலா என்னும் நாமமான ... (கற்கண்டு)

**எமன் எங்கேயிருக்காரு?**

பெரும்பாலும் புரந்தரதாசரின் பாடல்களுக்கு மொழிபெயர்ப்பே தேவையில்லை. சிறிது கன்னடம் தெரிந்திருந்தாலே புரிந்துகொள்ளக்கூடியதாகவே இருக்கும். இன்றைய பாடலும் அப்படிதான். ராமன் & கிருஷ்ணன் - இவர்களை நம்பியவர்களுக்கு எப்படி உதவி கிடைத்தது? இவர்களை நம்பாதவர்கள் / சாராதவர்கள் என்ன ஆனார்கள்? இவற்றை விளக்கும் பாடலே இது.

சொந்த சகோதரனை விட்டு ராமனிடம் சரணாகதி பெற்ற விபீஷணன்; உனது படைகள் வேண்டாம், நீ மட்டும் என்னுடன் இருந்தாலே போதும் என்ற அர்ஜுனன்; கண்டிப்பாக இந்த தூணில் நாராயணன் இருப்பான் என்று நம்பிக்கையில் சொன்ன பிரகலாதன்; கிருஷ்ணனை நம்பிய உக்ரசேனர் - இவர்களை எப்படி இறைவன் ஆட்கொண்டு காப்பாற்றினான் என்று இந்த பாடலிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

மாறாக ராவணன், துரியோதனன், ஹிரண்யகசிபு, கம்சன் - இவர்களுக்கு என்ன ஆனது? - அந்த பகவானே எமன் ஆனான் என்று கூறுகிறார் தாசர்.

யமனெல்லி காணேனெந்து ஹேள பேடா
யமனே ஶ்ரீராமனெந்து சந்தேஹ பேடா (யமனெந்து)

யமன் எங்கே, காணவில்லையே என்று கேட்க வேண்டாம்
ஶ்ரீராமன்தான் எமன் என்ற சந்தேகம் வேண்டாம்

நம்பித விபீஷணகே ராமனாதா
நம்பதித்த ராவணகே யமனாதா (யமனெந்து)
நம்பித அர்ஜுனகே மித்ரனாதா
நம்பதித்த துர்யோதனகே சத்ருவாதா (யமனெந்து)

(ராமனை) நம்பிய விபீஷணனுக்கு ராமன் ஆனார்
நம்பாத ராவணனுக்கு யமன் ஆனார் (யமனெந்து)
நம்பிய அர்ஜுனனுக்கு நண்பன் ஆனார்
நம்பாத துரியோதனனுக்கு எதிரி ஆனார் (யமனெந்து)

நம்பித ப்ரஹ்லாதனிகே ஹரியாதா
நம்பதித்த ஹிரண்யக்கே குறியாதா (யமனெந்து)
நம்பித உக்ரசேனகே ப்ருத்யனாதா
நம்பதித்த கம்சக்கே சத்ருவாதா (யமனெந்து)

நம்பிய பிரகலாதனுக்கு ஹரி ஆனார்
நம்பாத ஹிரண்யகசிபுவிற்கு குறி (இலக்கு) ஆனார் (யமனெந்து)
நம்பிய உக்ரசேனனுக்கு உறவினர் ஆனார்
நம்பாத கம்சனுக்கு எதிரி ஆனார் (யமனெந்து)

நம்பிக்கொள்ளி பேக ஶ்ரீ கிருஷ்ண தேவனா
கம்பு சக்ரதாரி ஶ்ரீ புரந்தர விட்டலன (யமனெந்து)

ஶ்ரீ கிருஷ்ணனை இப்போதே நம்பிடுங்கள்
சங்கு சக்கரங்களை உடைய ஶ்ரீ புரந்தரவிட்டலனை நம்பிடுங்கள் (யமனெந்து)

**ஸ்ரீமஹாலக்ஷ்மி யாரை திருமணம் செய்து கொள்வார்?**

பாற்கடலை கடைய தேவர்களும், தேவர்களின் அரசனான இந்திரனும் முடிவு செய்தார்கள். அதற்காக மந்திர மலையை மத்தாகவும், சிவபெருமானின் கழுத்தில் நாகாபரணமாக இருக்கும் வாசுகி பாம்பினை கயிறாகவும் கொண்டு கடைய முடிவெடுத்தார்கள். அதற்கு தேவர்கள் மட்டும் போதாதென அரக்கர்களுக்கும் சமபங்கு தருவதாகக் கூறி அவர்களையும் அழைத்தார்கள். பாற்கடலை கடைய கடைய, அதிலிருந்து முதலாவதாக வந்தவர் ஸ்ரீ மஹாலக்ஷ்மி. இவர் ஸ்ரீமன் நாராயணனுக்கே உரியவர் ஆகையால், உடனே அவரிடம் போய்த் தஞ்சமானார்.

இந்த இடத்தில், ஸ்ரீ மஹாலக்ஷ்மி தோன்றியவுடன், புரந்தர தாசர் அவரிடம் பல கேள்விகளைக் கேட்பது போல் இந்தப் பாடல் உள்ளது. அதாவது, நீ யாரைத் திருமணம் செய்து கொள்ளப்போகிறாய்? என தாசர் கேட்பதாக உள்ளது. பல தலங்களில் இருக்கும் பரந்தாமனை நினைவு கூறும் வகையில் அமைந்துள்ள இந்த இனிமையான பாடலை பார்ப்போம்.

***

க்ஷீராப்தி கன்னிகே ஸ்ரீ மஹாலக்ஷ்மி
யாரிகே வதுவாகுவே - நீனு யாரிகே வதுவாகுவே

பாற்கடலில் உதித்த கன்னியே ஸ்ரீ மஹாலக்ஷ்மி
யாரை திருமணம் செய்துகொள்வாய் - நீயே..

சாரதி பந்தன ராமசந்திர மூர்த்திகோ
பரமாத்மா அனந்த பத்மனாபனிகோ
சரசிஜனாப ஸ்ரீ ஜனார்த்தன மூர்த்திகோ
உபய காவேரி ரங்க பட்டணத அரசகோ (யாரிகே)

(இலங்கைக்கு) பாலம் கட்டிய ஸ்ரீ ராமசந்திரனையா
பரமாத்மாவான அனந்த பத்மனாபனையா
நாபிக்கமலத்தில் தாமரை மலருடைய ஜனார்த்தனனையா
காவேரிக்கரையில் இருக்கும் ஸ்ரீரங்கத்தின் அரசனையா (யாரிகே)

செலுவ மூர்த்தி பேலூர சென்னிகராயனிகோ
கெலதி ஹேலு ஸ்ரீ உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண ராயனிகோ
இளெயளு பாண்டுரங்க விட்டல ராயனிகோ
நலினாக்ஷி ஹேளம்மா பதரி நாராயணனிகோ (யாரிகே)

அழகே வடிவான பேலூர் சென்னிகிருஷ்ணனையா
உன் நண்பன் கேட்கிறேன், உடுப்பி கிருஷ்ணனையா
அல்லது பாண்டுரங்க விட்டலனையா
தாமரை போன்ற கண்கள் உடையவளே, பத்ரி நாராயணனைய (யாரிகே)

மலயஜகந்தி பிந்து மாதவ ராயரிகோ
சுலப தேவரு புருஷோத்தமனிகோ
பலதாயக நித்ய மங்கள தாயககோ
செலுவ நாசதே ஹேளு ஸ்ரீ வேங்கடேசனிகோ (யாரிகே)

மலையிலிருந்து வரும் நறுமணத்தை கொண்ட பிந்து மாதவனையா
யாவரும் சுலபமாக தொடர்பு கொள்ளக்கூடிய புருஷோத்தமனையா
வரங்களை அருளும் நித்ய மங்களமானவனையா
வெட்கப்படாமல் சொல், ஸ்ரீ வேங்கடேசனையா (யாரிகே)

வாசவார்சித கஞ்சி வரதராஜனிகோ
ஆ ஸ்ரீமுஷ்ணதல்லி ஆதி வராகனிகோ
சேஷசாயியாத ஸ்ரீமன் நாராயணனிகோ
சாசிர நாமதொடய அழகிரீசகோ (யாரிகே)

இந்திரன் வழிபட்ட காஞ்சி வரதராஜனையா
அந்த ஸ்ரீமுஷ்ணத்தில் இருக்கும் ஆதி வராகனையா
நாகத்தின் மேல் படுத்திருக்கும் ஸ்ரீமன் நாராயணனையா
ஆயிரம் பெயர்களை உடைய அழகிய மலைகளில் வசிப்பவனையா? (யாரிகே)

சரணாகத ரக்ஷக சாரங்கபாணிகோ
வரகள நீடுவ ஸ்ரீநிவாசனிகோ
குரு குலாந்தகனாத ராஜகோபால மூர்த்திகோ
ஸ்திரவாகி புரந்தர விட்டல ராயனிகோ (யாரிகே)

சரணடைந்தவர்களை காப்பாற்றும் சாரங்கபாணியையா
வரங்களைக் கொடுக்கும் ஸ்ரீனிவாசனையா
’குரு’ வம்சத்தை அழித்த ராஜகோபாலனையா
நிரந்தரமாக புரந்தர விட்டலனையா (யாரிகே)

**நீ நிஜமாகவே கருணையுள்ளவன்தானா?**

பற்பல பாடல்களில் சொல்லப்பட்ட அதே கருத்துகள்தான். சர்வோத்தமனிடம் தாசர் என்ன வேண்டுவார்? இம்மையில் எப்பொழுதும் நின் கருணை; மறுமை வேண்டாம். இவ்வளவுதான். இதை 'வைராக்கிய' வகைப் பாடல் என்பார்கள். இந்த வகையில் புரந்தரதாசர், கனகதாசர் முதலானோர் ஏகப்பட்ட பாடல்களைப் பாடியுள்ளனர். இதில் பரந்தாமனை திட்டிப் பாடுவது இன்னொரு வகை. அதை 'நிந்தா ஸ்துதி' என்பர். இந்த பாடல் இவ்விரு வகையிலும் வருமாறு உள்ளது.

முன்னர் இறைவன் பல அவதாரங்களில் தன் பக்தர்களை எப்படி காப்பாற்றினான், என்னை ஏன் இந்தப் பிறவியில் இன்னும் விட்டிருக்கிறாய்? நீ கருணையுள்ளவன்தானா என்று எனக்கு நம்பிக்கை போய்விடும் போலிருக்கிறதே என்றெல்லாம் புரந்தரதாசர் பாடியிருக்கும் இந்த அற்புதமான பாடலை பார்ப்போம்.

***

கருணாகர நீனெம்புவது யாதகோ
பரவச வில்ல எனகே
பரி பரியலி நர ஜெம்னவனித்து
திருகி திருகி மன கரகிசுவத கண்டு (கருணாகர)

கருணாகரன் என்று உன்னை சொல்வது எதற்காக?
(நீ கருணாகரன் என்ற) நம்பிக்கையில்லை எனக்கு
மறுபடி மறுபடி எனக்கு மானிட ஜென்மத்தைத் தந்து
திரும்பத் திரும்ப என் மனம் கஷ்டப்படுவதைக் காணும் உன்னை (கருணாகர)

கரி த்ருவ பலி பாஞ்சாலி அஹல்யெயா
பொரெதெவா நீனந்தே
அரிது விசாரிசி நோடல தெல்லவு
பரி பரி கந்தேகளெந்தே (கருணாகர)

யானை (கஜேந்திரன்), துருவன், பலி மகாராஜா, பாஞ்சாலி, அகல்யை
(ஆகிய எல்லாரையும்) காப்பாற்றியவன் நீயே என்கிறார்கள்
தானாகவும், கேட்டு தெரிந்துகொண்ட இது (மேற்கண்ட) எல்லாமும்
மறுபடி மறுபடி (கற்பனைக்) கதைகளாகவே தோன்றுகிறதே? (கருணாகர)

கருணாகர நீனாதரே ஈகலே
கரபிடிதென்னனு ஹரி காயோ
சரசிஜாக்ஷனே அரச நீனாதரே
துரிதகளென்னனு பீடிபதுண்டே? (கருணாகர)

நீ கருணையுள்ளனவன் என்றால் இப்போதே
என் கைகளைப் பிடித்து என்னை காப்பாயாக ஹரியே
தாமரைக் கண்ணனே, நீ (அனைவருக்கும்) அரசன் என்றால்
கஷ்டங்கள் என்னை பீடிப்பது ஏன்? (கருணாகர)

மரண காலதல்லி அஜாமிள கொலிதே
கருடத்வஜனெம்ப நாமதிந்தா
வரபிருதுகளு உளிய பேகாதரே
த்வரிததி காயோ, புரந்தர விட்டலா (கருணாகர)

மரணத் தருவாயில் (இருந்த) அஜாமிளனுக்கு கருணை காட்டினாய்
கருடத்வஜன் (வாகனம்) என்ற பெயரால் அழைக்கப்படுபவனே

(உனக்கு இருக்கும்) நல்ல பெயர்கள் நிலைத்திருக்க வேண்டுமானால்
உடனடியாக என்னைக் காப்பாற்றுவாய், புரந்தர விட்டலனே (கருணாகர)

**<u>கோவிந்தன் - எவ்வளவு அழகான பெயர்!</u>**

கோவிந்தன் - கோ (Go) என்ற சொல்லுக்கு புவி, பசு, பேச்சு & வேதம் என்று பல அர்த்தங்கள் உள்ளன. இந்த உலகத்தையும், அதில் உள்ள அனைத்து உயிரினங்களையும் காப்பாற்றுபவன்; கோகுலத்தில் இருந்த பசுக்களை காப்பாற்றியவன்; அவனில்லாது யாருடைய தொண்டையிலிருந்தும் பேச்சு வரவே வராது; அனைத்து வேதங்களும் யாரைக் குறித்து எழுதப்பட்டனவோ, அவன் ; - இதெல்லாம் யாருன்னு கேட்டால் - கோவிந்தன், அந்தப் பெயரை சொல்லச் சொல்ல ஆனந்தம்.

இதையே குறிப்பிட்டு பாடப்பட்டுள்ள இந்தப் பாடல், மிகவும் சிறியது; ஆனால் கோவிந்தா என்ற பெயரைப் போல் மிகவும் அழகான பாடல்; மிகவும் புகழ் பெற்றதும் ஆகும்.

***

கோவிந்தா நின்ன நாமவே சந்தா
கோவிந்தா நின்ன நாமவே சந்தா (கோவிந்தா)

கோவிந்தா, உன் பெயரே மிகவும் அழகு
கோவிந்தா, உன் பெயரே மிகவும் அழகு (கோவிந்தா)

அனுரெணு த்ருண கஷ்ட பரிபூர்ண கோவிந்தா
நிர்மலாத் மனாகி இருவதே ஆனந்தா (கோவிந்தா)

அணுவைப் போல சின்னஞ்சிறிய கஷ்டங்களை போக்குபவனே கோவிந்தா
மனது சுத்தமாக இருப்பதே ஆனந்தம் (கோவிந்தா)

ஸ்ரிஷ்டி ஸ்திதி லய காரண கோவிந்தா
பரி மஹிமெய திளியுவுதே ஆனந்தா
பரம புருஷ ஸ்ரீ புரந்தர விட்டலன
ஹிங்கதே தாசர சலஹுவுதே ஆனந்தா (கோவிந்தா)

ஆக்குதல் காத்தல் அழித்தல் ஆகிய அனைத்திற்கும் காரணமானவனே கோவிந்தா
(உன்) அளவில்லாத மகிமையை தெரிந்து கொள்வதே ஆனந்தம்
பரமபுருஷன் ஆன ஸ்ரீ புரந்தரவிட்டலனை
(எப்பொழுதும் பாடித் திரியும்) தாசர்களுடன் பேசிப் பழகுவதே ஆனந்தம் (கோவிந்தா)

**சொல்வன்மை அல்லது நாக்கை அடக்குதல்**

ஐம்புலன்களை அடக்குதல் பற்றி நிறைய கேள்விப்பட்டிருப்பீர்கள். அவற்றை கட்டுப்படுத்தி, வென்றிட வேண்டும் என்பதுதான் இலக்காக இருக்க வேண்டும் என்று பல சான்றோர்கள் கூறியுள்ளனர். தாசரும் இந்தப் பாடலில் ஐம்புலன்களில் ஒன்றான நாக்கை கட்டுப்படுத்தி எப்பொழுதும் அந்த நாராயணனின் பெயரையே சொல்லிக் கொண்டிருக்க வேண்டும் என்று பாடியிருக்கிறார்.

அடுத்தவரை திட்டக்கூடாது, கோள் சொல்லக்கூடாது, காலையில் எழுந்தவுடன் ஸ்ரீராமனின் பெயரைச் சொல்ல வேண்டும் என்று வரிசையாக தாசர் நாக்கிற்கு புத்திமதி சொல்வதைக் கேட்டு ரசிக்கவும்.

***

ஆச்சாரவில்லத நாலிகே
நின்ன நீச புத்திய பிடு நாலிகே
விசாரவில்லதே பரர தூஷிசுவுதக்கே
சாசிகொந்திருவந்தா நாலிகே (ஆச்சார)

நல்ல பழக்கங்கள் இல்லாத நாக்கே
உன் கெட்ட புத்தியை விட்டுவிடு நாக்கே
(எந்தக்) காரணமுமே இல்லாமல் அடுத்தவரை திட்டுவதற்காக
வெளியில் வருகிறாயே நாக்கே

ப்ராத: காலதொள் எத்து நாலிகே
ஸ்ரீ பதி எனபாரதே நாலிகே
பதித பாவனா நம்ம ரதிபதி ஜனகன
சததவு நுடி கண்ட்யா நாலிகே (ஆச்சார)

காலையில் எழுந்து, நாக்கே
ஸ்ரீபதி என்று சொல்லக்கூடாதா, நாக்கே
அனைத்து பாவங்களையும் போக்குபவனான நம் மன்மதனின் தந்தை (ஸ்ரீமன் நாராயணன் பெயரை)
எப்பொழுதும் சொல்ல வேண்டும் கேட்டாயோ, நாக்கே (ஆச்சார)

சாடி ஹேளலு பேடா நாலிகே
நின்ன பேடிகொம்பேனு நாலிகே
ரூடிகொடெயா ஸ்ரீரமணன நாமவ
பாடுதலிரு கண்ட்யா நாலிகே (ஆச்சார)

கோள் மூட்டாமல் இரு நாக்கே
உன்னை வேண்டி கேட்டுக்கொள்கிறேன் நாக்கே
இந்த உலகத்தின் நாயகன் ஸ்ரீரமணனின் நாமத்தை
பாடிக்கொண்டேயிரு நாக்கே (ஆச்சார)

ஹரிய ஸ்மரணே மாடு நாலிகே
நர ஹரிய பஜிசு கண்ட்யா நாலிகே
வரத புரந்தர விட்டலராயன
சரண கமலவ நெனெ நாலிகே (ஆச்சார)

அந்த ஹரியின் நினைவாகவே இரு நாக்கே
நாராயணனை எப்பொழுதும் பஜித்துக் கொண்டேயிரு நாக்கே
வரங்களை அருளும் புரந்தர விட்டலனின்

**அறிவுரை: கருமியாக இருக்காதீர்கள்...**

தங்கள் செல்வத்தை தானும் அனுபவிக்காமல், வேண்டியவர்களுக்கும் கொடுக்காமல் கருமியாக இருப்பவர்களைப் பார்த்து தாசர் பாடும் பாடல் இது. பணத்தை வீட்டினுள் பதுக்கிவிட்டு, சரியாக வயிறார சாப்பிடவும் செய்யாமல், கருமியாக இருப்பவர்களே, உதவி வேண்டும் உறவினர்களுக்கு எதுவும் செய்யாமல் சாக்கு சொல்லி அனுப்பிவிடுகிறீர்களே, எமன் வந்து கூப்பிடும்போது, இது எதுவும் கூட வராது - அப்போது உங்களுக்கு இருக்கும் ஒரே உறவினன் நம் புரந்தரவிட்டலன்தான் என்று சொல்கிறார்.

***

ஹரி கொட்ட காலக்கே உணலில்லா, உணலில்லா
ஹரி கொடத காலக்கே பாயி பிடுவேயெல்லோ ப்ராணி (ஹரி)

ஹரி (உனக்கு) அதிகமாக கொடுத்தபோது (அதை) பயன்படுத்தவில்லை
ஹரி கொடுக்காத சமயங்களில் (இன்னும் அதிகம் வேண்டுமென்று) கேட்க மறக்கவில்லையே மனிதனே (ஹரி)

ஹத்து சாவிர ஹொன்னு திப்பேலி ஹோளிட்டு
மத்தே உப்பில்லதே உண்டேயல்லோ ப்ராணி
ஹத்து சாவிர ஹொன்னு திப்பேலி போபாகா
ம்ருத்திகே பாயல்லி பித்தல்லோ ப்ராணி (ஹரி)

பத்தாயிரம் தங்கக் காசுகளை உள்ளே பத்திரமாக இட்டுவிட்டு
(கருமியாக) உப்பில்லாமல் உண்டாயே மனிதனே
(அந்த) பத்தாயிரம் தங்கக் காசுகள் காணாமல் போய்விட்டால்
உயிரையே விட்டுவிடுகிறாயே மனிதனே (ஹரி)

ஹுக்கியு துப்பவு மனெயொளகிரலிக்கே
குக்குரி அன்னவ திந்தெயல்லோ ப்ராணி
ஹெக்களத பாக்ய களிகெயலி போபாக
புக்கெய ஹொய்கொண்டு ஹோதேயல்லோ ப்ராணி (ஹரி)

நெய்யும், அரிசியும் வீட்டில் நிறைய இருந்தாலும்
(கருமியாக) கடலை கலந்த அன்னத்தை தின்கிறாயே மனிதனே
நிறைந்த செல்வம் ஒரு நாழிகையில் போய்க்கொண்டிருக்கும்போது
நீ காணாமல் போன ஒரு காசை தேடிப் போகிறாயே மனிதனே (ஹரி)

நெண்டரிஷ்டரு பந்து மனெ முந்தே குளிதிதரு
குண்ட சுத்தி நீனாடித்யல்லோ ப்ராணி
கண்டக யமனவரு குண்டிசுத எளெவாக
நெண்ட ஸ்ரீ புரந்தரவிட்டலனு ப்ராணி

உறவினர்கள் உன் வீட்டுமுன் (உதவிகள் வேண்டி) காத்திருந்தபோது
சாக்குகள் சொல்லி அவர்களை தவிர்த்தாயே மனிதனே
யமதூதர்கள் உன்னை கயிற்றில் கட்டி இழுக்கும்போது
உன் உறவினர் (ஒரே ஒருவன்தான், அவனே) ஸ்ரீ புரந்தரவிட்டலன் (ஹரி)

**பயப்படாதீங்க.. பயப்படாதீங்க...**

த்வைத மார்க்கத்தில் ஸ்ரீ மத்வாச்சாரியர் முந்தைய அவதாரங்களில் ஹனுமன் மற்றும் பீமனாக இருந்தார் என்று சொல்லப்படுகிறது. ஹனும, பீம, மத்வ என்ற இந்த வரிசையை புரந்தரதாசர் மற்றும் பிற தாசர்கள் தங்கள் பாடல்களில் பாடியிருக்கின்றனர். இன்றைய பாடலிலும் இம்மூவரையும் நம்பியவருக்கு இவ்வுலகில் எதைப்பற்றிய பயமும் தேவையில்லை என்கிறார் தாசர். மிகவும் எளிமையான, சிறிய பாட்டு. தாசர் பாடல் போட்டிகளில் யாராவது சிறுவர்கள் கண்டிப்பாக பாடும் பாட்டு ஆகும்.

***

அஞ்சிகென்யாதகய்யா சஜ்ஜனரிகே
பயவு இன்யாதகய்யா
சஞ்சீவி ராயர ஸ்மரணெ மாடித மேலே (அஞ்சிகெ)

அச்சம் எதுக்கய்யா நல்லவர்களுக்கு
பயமும் எதுக்கய்யா
ஹனுமனை நினைப்பவர்களுக்கு அதற்குப்பின் (அஞ்சிகெ)

கனசல்லி மனசல்லி களவளவாதரெ
ஹனுமன நெனெதெரே ஹாரிஹோகுதே பீதி (அஞ்சிகெ)

கனவிலும் நினைவிலும் இறுக்கம் (இருந்தால்)
ஹனுமனை நினைத்தால் ஓடிப்போகுமே அந்தப் பயம் (அஞ்சிகெ)

ரோம ரோமக்கே கோடி லிங்கவுதுரிசித
பீமன நெனெதெரே பிட்டுஹோகுதே பீதி (அஞ்சிகெ)

(தன் உடம்பில் உள்ள) ஒவ்வொரு முடிக்கும் கோடி சிவலிங்கங்களை நிர்மாணித்த
பீமனை நினைத்தால் விட்டுப்போகுமே அந்தப் பயம் (அஞ்சிகெ)

புரந்தர விட்டலன பூஜெய மாடுவ
குரு மத்வராயர ஸ்மரணெ மாடித மேலே (அஞ்சிகெ)

புரந்தர விட்டலனை புஜை செய்யும்
குரு மத்வாச்சாரியரை நினைத்த பிறகு (அஞ்சிகெ)

**எதை செய்யணுமோ அதை செய்யாமல்...!!**

நம்மை பெற்ற தாய், தந்தை; மனைவி, மக்கள், சொந்தபந்தம் இவர்களை எல்லாம் கஷ்டப்படுத்திவிட்டு, காயப்படுத்திவிட்டு, தேவைப்படும்போது அவர்களுக்கு உதவி செய்யாமல், தானங்கள், ஜப தப ஹோமங்கள் செய்வதால் எந்தவித பலனும் கிடையாது. முதலில் இதையெல்லாம் சரியாகச் செய்துவிட்டு பிறகு மற்ற காரியங்களைச் செய் என்று கூறும் தாசர், கூடவே மறக்காமல் புரந்தரவிட்டல னையும் நினைக்கவேண்டும்; இல்லையேல் இந்த ஜென்மம் எடுத்து எந்த பலனும் இல்லை என்றும் கூறி முடிக்கிறார்.

***

ஹெட்ட தாயி தந்தெகள சித்தவ நோயிசி
நித்ய தானவ மாடி பலவேனு
சத்ய சதாசார இல்லதவனு ஜப
ஹத்து சாவிர மாடி பலவேனு (ஹெட்ட)

பெற்ற தாய் தந்தையின் மனதை நோகவிட்டு
தினமும் தானங்கள் செய்து என்ன பலன்?
உண்மை பேசாமலும், நல்ல பழக்கங்களும் இல்லாதவன்
பத்தாயிரம் ஜபங்கள் செய்து என்ன பலன்?

தன்ன சதிசுதரு பந்துகள நோயிசி
சின்ன தானவ மாடி பலவேனு
பின்னானந்ததலி தேசதேசவ திருகி
அன்ன தானவ மாடி பலவேனு (ஹெட்ட)

தன் மனைவி மக்கள் உறவினர்களை நோகவிட்டு
செல்வத்தை தானம் செய்வதில் என்ன பலன்?
பகட்டுக்காக ஊர் ஊராகப் போய்
அன்னதானங்கள் செய்வதில் என்ன பலன்? (ஹெட்ட)

ஸ்னானக்கே பானக்கே ஆகுவ திளி நீரு
கானனதொளகித்து பலவேனு
ஆனந்த மூர்த்தி புரந்தர விட்டலன
நெயெனாத தனுவித்து பலவேனு (ஹெட்ட)

குளிக்கவும் குடிக்கவும் முடியாத சுத்தமான நீரானது
(யாரும் புகமுடியாத) காட்டுக்குள் இருந்து என்ன பலன்?
நமக்கு எப்போதும் ஆனந்தத்தைத் தரும் புரந்தரவிட்டலனை
நினைக்காத இந்த உடம்பு இருந்து என்ன பலன்? (ஹெட்ட)

**ஒரு பாடல் எப்படி இருக்க வேண்டும்?**

கர்நாடக சங்கீதத்தின் பிதாமகர் (தாத்தா) என்று போற்றப்படும் புரந்தரதாசர், இந்த சங்கீதத்தைக் கற்றுக் கொள்ள வேண்டிய முறை, துவக்கத்தில் பாடப்பட வேண்டிய பாடல்கள், மாயாமாளவகொளை ராகம் என பலவற்றை உருவாக்கியவர். தனது அனைத்துப் பாடல்களிலும் 'புரந்தர விட்டல' என்னும் தன் முத்திரையைப் பதித்து, அவை அனைத்தையும் அந்த புரந்தரவிட்டலனுக்கு சமர்ப்பித்து மகிழ்ந்தவர். இறைவனின் பல அவதாரங்கள், வேத உபநிஷத்துகள், த்வைத சித்தாந்தத்தின்

சாரங்கள் என அனைத்தைப் பற்றியும் பாடியுள்ள தாசர், மக்களுக்கு அறிவுரை வழங்கியும் பாடல்களைப் புனைந்துள்ளார். ஒரு ராகம் எப்படிப் பாடப்பட வேண்டும், வர்ண மெட்டுக்கள் என்றால் என்ன என்று இன்றளவும் பாடகர்கள் பயன்படுத்தும் விஷயங்களைக் குறித்து விதிகளை வகுத்தவர் தாசரே.

ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடியதுடன், ஒரு பாடல் எப்படி இருக்க வேண்டும் என்ற லட்சணங்களைக் குறித்தும் ஒரு பாடல் பாடியுள்ளார். நல்ல தாளத்துடன், பின்னணி இசையுடன் இருக்க வேண்டுமாம். பாடலைப் பாடுபவர் அந்தப் பாடலின் மொழி, பொருள் ஆகியவற்றை தெரிந்து கொண்டு, உணர்ந்து பாட வேண்டும் என்றும் சொல்கிறார். அந்தப் பாடலை கேட்பவர் மனம் ஆனந்தப்படுமாறு இருக்க வேண்டும் என்று சொல்லி இறுதியில் தன் முத்திரையுடன் பாடலை முடிக்கிறார்.

***

தாள பேகு பக்க மேள பேகு
சாந்த வேளே பேகு கானவ கேளபேகு எம்புவரிகே (தாள)

தாளம் இருக்க வேண்டும்; பக்க வாத்தியங்களும் இருக்க வேண்டும்
அமைதியான நேரம்/காலம் இருக்க வேண்டும்; பாடலை கேட்க விரும்புபவர்களுக்கு (தாளம்)

கள சுத்த இரபேகு திளிது பேளலு பேகு
களவள பிடபேகு களெமுக இரபேகு (தாள)

(பாடுபவர்) குரல் சுத்தமாக இருக்க வேண்டும்;
(பாடும் வரிகளை) தெரிந்து புரிந்து உச்சரிக்க வேண்டும்
(பாடுபவர், அவரது) மனதில் குழப்பங்களை விடவேண்டும்
(பாடுபவர் முகம்) நல்ல களையுடன் இருக்க வேண்டும் (தாள)

ஜதிப்ராச இரபேகு கதிகே நில்லச பேகு
ரதிபதிபிதனோளு அதி ப்ரேம இரபேகு (தாள)

எதுகை/மோனை இருக்க வேண்டும்;
(தக்க இடத்தில்) நிறுத்திப் பாட வேண்டும்;
ரதியின் கணவனான மன்மதனின் தந்தையான ஸ்ரீமன் நாராயணனிடத்தே பக்தி இருக்க வேண்டும் (தாள)

அரிதவரு இரபேகு ஹருஷ ஹெச்சலி பேகு
புரந்தரவிட்டலனல்லி த்ருட சித்த இரபேகு (தாள)

(என்ன பாடுகிறோம் என்று) தெரிந்தவராக இருக்க வேண்டும்;
(பாடலை) கேட்பவர்கள் ஆனந்தம் அடைய வேண்டும்
புரந்தரவிட்டலனிடம் திடமான பக்தி இருக்க வேண்டும் (தாள)

**அழைத்தால் உடனே வருபவன் யார்?**

அ. கஜேந்திரன் என்னும் யானை ஆபத்துக் காலத்தில் 'ரங்கா' என்று அழைத்ததும் வந்து காப்பாற்றியவர்
ஆ. தன்னால் இனிமேல் ஒன்றும் செய்ய முடியாது என்றபோது இரு கைகளையும் தூக்கி 'கிருஷ்ணா, என்னைக் காப்பாற்று' என்று தொழுத திரௌபதியை காப்பாற்றியவர்
இ. இங்கே கண்டிப்பாக இறைவன் இருப்பான் என்ற பிரகலாதன் நம்பிக்கையை காப்பாற்ற தூணில் வந்து நின்றவர்.
ஈ. தன் பக்தர்களை எப்பொழுதும் கைவிடாதவர்

என்றெல்லாம் இறைவனை, அந்த ஸ்ரீமன் நாராயணனின் புகழை பல்வேறு பாடல்களில் புரந்தரதாசர் பாடியிருக்கிறார்.

அதேபோல் இன்றைய பாடலிலும் கூப்பிட்ட குரலுக்கு வருபவன் யார், அந்த ரங்கனா? அல்லது கிருஷ்ணனா? என்று பாடி, இறுதியில் அந்த புரந்தரவிட்டலன் யார் அழைத்தாலும் வருவான் என்ற பொருள் படுமாறு பாடலை முடிக்கிறார். வழக்கம்போல் எளிமையான, மொழிபெயர்க்கவே தேவையில்லாத இந்த பாடலை பார்த்துவிட்டு, வித்யாபூஷணர் குரலிலும் கேட்டுவிடலாம்.

***

யாரே ரங்கன யாரே கிருஷ்ணன
யாரே ரங்கன கரெய பந்தவனு (யாரே)

ரங்கனை, கிருஷ்ணனை யார் அழைத்தார்கள்?
(அழைத்தால் உடனே வந்துவிடுவானே என்று பொருள்)

கோபால கிருஷ்னன பாப விநாசன
ஈபரி இந்தலி கரெய பந்தவனு (யாரே)

கோபால கிருஷ்னனை பாவங்களை போக்குபவனை
இந்த கணத்தில் அழைத்த மாத்திரத்தில் வருபவன் யார்? (யாரே)

வேணு விநோதன ப்ராண ப்ரியன
ஜானெயரரசன கரெய பந்தவனு (யாரே)

புல்லாங்குழல் ஊதுபவனை என் உயிரிலும் மேலானவனை
நல்லனவற்றை ஏற்றுக்கொள்பனை யார் அழைத்தது? (யாரே)

கரிராஜ வரதன பரம புருஷன
புரந்தர விட்டலன கரெய பந்தவனு (யாரே)

கஜேந்திரனை (யானை) காப்பாற்றியவன் அனைவரிலும் சிறந்தவனை
புரந்தர விட்டலனை கூப்பிட்டால் உடனே வருவானே (யாரே)

**நடப்பதெல்லாம் நன்மைக்கே...**

தன் பக்தையை கருமியான கணவனிடமிருந்து காப்பாற்ற இன்னொரு மூக்குத்தியைக் கொடுத்த கருணை வடிவானவனைப் போற்றிப் பாட தன் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தார் தாசர். சம்சார சாகரத்தில் மூழ்கியிருந்த அவர், உடனடியாக தம்புரா, கைத்தடி, பிச்சை எடுப்பதற்கு ஒரு தட்டு ஆகியவற்றை எடுத்து

வீட்டை விட்டு வெளியே வந்தார். அப்போது அவர் முதன்முதலாக இயற்றிய பாடல் என்று இந்தப் பாடலையே குறிப்பிடுகிறார்கள். தன் இந்த மாற்றத்திற்குக் காரணமான மனைவியைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

ஆதத்தெல்லா ஒளிதே ஆயித்து நம்ம
ஶ்ரீதரன சேவே மாடலு சாதன சம்பத்தாயித்து (ஆதத்தெல்லா)

நடந்தவையெல்லாம் நல்லதாகவே ஆயிற்று நம்
ஶ்ரீதரனின் சேவையைச் செய்வதற்கு சந்தர்ப்பம் கிடைத்தது (ஆதத்தெல்லா)

தண்டிகே பெட்டா ஹிடியுவுதக்கே
மண்டே பாகி நாசுதலித்தே
ஹெண்டத்தி சந்ததி சாவிரவாகலி
தண்டிகே பெட்டா ஹிடிசிதளய்யா (ஆதத்தெல்லா)

தம்புரா & கைத்தடி (இந்த இரண்டையும்) பிடிப்பதற்கு
தலை குனிந்து வெட்கப்பட்டேன்
என் மனைவியின் குலம் ஆயிரம் ஆகட்டும் (செழிக்கட்டும்)
தம்புரா & கைத்தடியை (என்னை) பிடிக்கவைத்தாளே (ஆதத்தெல்லா)

கோபாள புட்டி ஹிடியுவுதக்கே
பூபதி எந்து கர்விசுதித்தே
ஆ பத்னீ குல சாவிரவாகலி
கோபாள புட்டி ஹிடிசிதளய்யா (ஆதத்தெல்லா)

பிட்சைத் தட்டு பிடிப்பதற்கு
(நான் ஒரு) பணக்காரன் என்று எண்ணி கர்வத்தோடு இருந்தேன்
அந்த (என்) மனைவியின் குலம் ஆயிரம் ஆகட்டும் (செழிக்கட்டும்)
பிட்சைத் தட்டை (என்னை) பிடிக்கவைத்தாளே (ஆதத்தெல்லா)

துளசிமாலே ஹாகுவதக்கே
அரசனெந்து திருகுதலித்தே
சரசிஜாக்ஷ புரந்தரவிட்டலனு
துளசிமாலே ஹாகிதனய்யா (ஆதத்தெல்லா)

துளசிமாலையை அணிந்துகொள்வதற்கு
(நான் ஒரு) அரசன் என்று நினைத்து திரிந்து கொண்டிருந்தேன்
அந்த தாமரைக் கண்ணனான புரந்தரவிட்டலன்
(என் கழுத்தில்) துளசிமாலையை அணிவித்தானே (ஆதத்தெல்லா)

**கண்டேன் மலையப்பனை..**

புரந்தரதாசருக்கு 24x7 இறைவனின் சிந்தனையில், அவன் புகழைப் பாடி, அவன் சரிதங்களை பரப்புவதிலேயே கழிந்தது. நினைவில் இருக்கும்போது கோயில்களில் புரந்தரவிட்டலனை தரிசிப்பார். தூங்கும்போது கனவிலும் அவனே வருவான். கனவிலுமா? ஆமாம். அதுவும் எப்படி? நெற்றியில் நாமம்; காது, கை, கால்களில் நகைகள், கலகல என்னும் கொலுசு சத்தம் - இவற்றுடன் அந்த திம்மய்யன் வந்து காட்சியளித்தானாம். வாயுதேவர், பிரம்மாதி தேவர்கள் அனைவரும் அந்த பரம்பொருளுக்கு சேவை செய்ய வரிசையாக நிற்கும் காட்சியும் தெரிந்ததாம். இதை அருமையாக வர்ணிக்கும் இந்த புகழ்பெற்ற பாடலை கேட்டு ரசியுங்கள்.

ஏனு ஹேளலி தங்கி திம்மய்யனா பாதவனு கண்டே
கனசு கண்டேனே மனதல்லி களவளகொந்தேனே (ஏனு)

என்ன சொல்வேன் தங்கையே, திம்மய்யனின் பாதங்களை கண்டேன்
கனவு கண்டேனே மனதினில் கலவரம் கொண்டேனே (ஏனு)

ஹொன்ன கடகவனிட்டு திம்மய்ய தா கொள்வ நாமவனிட்டு
அந்துகே பலுக எனுதா என்ன முந்தே பந்து நிந்திதனல்லே (ஏனு)

தங்க வளையல் அணிந்து திம்மய்யன் அவன் பளிச்சிடும் நாமத்துடன்
காலில் கொலுசு அணிந்து என் முன்னே வந்து நின்றானே (ஏனு)

மகர குண்டலவனிட்டு திம்மய்ய தா கஸ்தூரி திலகவனிட்டு
கெஜ்ஜே கலுக எனுதா ஸ்வாமியு பந்து நிந்திதனல்லே (ஏனு)

காதில் தோடுடனே திம்மய்யன் அவன் நெற்றியில் திலகமிட்டு
கொலுசு சத்தத்துடனே ஸ்வாமி வந்து நின்றானே (ஏனு)

முத்தின பல்லக்கி யதிகளு ஹொத்து நிந்திதனல்லே
சத்ர சாமரதிந்தா ரங்கய்யன உத்சவ மூருத்திய (ஏனு)

முத்தால் வேய்ந்த பல்லக்கை யதிகள் (மத்வ ஆச்சார்யர்கள்) தூக்கி நின்றனரே
குடை விசிறியுடனே ரங்கய்யனின் உத்சவ மூர்த்தியை (தூக்கி நின்றனரே) (ஏனு)

தாமர கமலதல்லி கிருஷ்ணய்ய தா பந்து நிந்திதனல்லே
வாயு பொம்மாதிகளு ரங்கய்யன சேவேய மாடுவரே (ஏனு)

தாமரை மலரினிலே கிருஷ்ணய்யன் அவன் வந்து நின்றானே
வாயு, பிரம்மாதி தேவர்கள் ரங்கய்யனின் சேவையை செய்கின்றனரே (ஏனு)

நவரத்ன கெட்டிசித ஸ்வாமி என்ன ஹ்ருதய மண்டபதல்லி
சர்வாபரணதிந்த புரந்தர விட்டலன கூடிதனே (ஏனு)

நவரத்தினங்களால் கட்டப்பட்ட என் இதயக்கோவிலில்
நகைகளால் அலங்காரம் செய்யப்பட்ட புரந்தரவிட்டலன் வந்து நின்றானே (ஏனு)

**உத்தமர் தம் உறவு வேண்டும்!**

அனைவருக்கும் இனிய 2015 ஆங்கிலப் புத்தாண்டு வாழ்த்துகள்!

இன்றைய பாடலை இயற்றிய ஸ்ரீபாதராயர் பற்றி ஏற்கனவே நாம் பார்த்துள்ளோம். ஹரிதாசர்கள் வரிசையை துவக்கி வைத்தவரும், புரந்தரதாசர் முதலனாவர்களுக்கே முன்னோடியான இவரைப் பற்றி, இந்தப் பதிவில் பார்த்துக் கொள்ளவும்.

http://dasar-songs.blogspot.in/2011/05/blog-post.html

இந்தப் பிறப்பில் செய்யும் விதவிதமான பாவங்கள், மற்றவர்களுக்கு / உடன் இருப்போருக்குக் கொடுக்கும் தொந்தரவுகள் / துன்புறுத்தல்கள், இவை எதுவும் வேண்டாம், ஏன் என்னை மறுபடி மறுபடி பிறக்க வைக்கிறாய்? உன் பக்தர்கள் அனைவரையும் நீ காப்பாற்றியதைப் போல், என்னையும் காப்பாற்று. இப்போதைக்கு, இந்தப் பிறவியில், நான் எப்போதும் உத்தமர்களோடே இருக்கச் செய், மேன்மேலும் பாவங்களைச் செய்ய வைக்காதே - என்றெல்லாம் மனமுருகி கடவுளிடம் வேண்டுகிறார் ஸ்ரீபாதராயர்.

ஞான, பக்தி, வைராக்கியத்தை அடைந்து, இறைவனை தொடர்ந்து வழிபட்டு, அவனை அடைந்த ஸ்ரீபாதராயரே இப்படியெல்லாம் பாடினால், நாமெல்லாம் எந்த மூலைக்கு?

மிகமிக அருமையான இந்தக் கீர்த்தனையை கேட்டு / படித்து மகிழவும்.

உத்தமர சங்க எனகித்து சலஹோ
சித்த ஜனக சர்வோத்தம முகுந்தா (உத்தமர)

உத்தமர்கள் உடனே என்னை எப்போதும் இருக்கச் செய்
அனைவரில் உத்தமரே, முகுந்தனே, (உத்தமர)

திருதிருகி புட்டலாரே பரர பாதிசலாரே
பரிபரிய பாபகள மாடலாரே
மரண ஜனனகளெரடு பரிஹார மாடய்யா
கருணா சமுத்ரா முரவைரி கிருஷ்ணா (உத்தமர)

திரும்பத் திரும்பப் பிறக்க மாட்டேன்; (அப்படிப் பிறந்து) மற்றவரை துன்புறுத்த மாட்டேன்
விதவிதமான பாவங்களை செய்ய மாட்டேன்
மரணம், பிறப்பு இவ்விரண்டையும் (இந்த சுழற்சியை) எனக்குக் கொடுக்காதே
கருணைக்கடலே, முர (என்னும்) அரக்கனின் எதிரியான கிருஷ்ணனே (உத்தமர)

ஏன பேளலி தேவ நா மாடித கர்ம
நானா விசித்ரவை ஸ்ரீனிவாசா
ஹீனஜனரொளகாடா ஷ்வானிதகள கூடா
ஞானவந்தன மாடோ ஜானகிரமணா (உத்தமர)

என்ன சொல்வேன் தேவனே, நான் செய்த பாவங்கள்
விதவிதமானவை, ஸ்ரீனிவாசனே
கீழ்த்தரமானவர்களுடனான என் சேர்க்கை, அவர்களுடனான என் நட்பு (இவைகளை விடுவித்து)
(என்னை) ஞானியாக்குவிடு ஜானகி ரமணனே (உத்தமர)

நின்ன நம்பித மேலே இன்னுபய(வ்) யாதகே

பன்னகாதிப சயன மன்னிசய்யா
முன்ன பகுதரனெல்லா சென்னாகி பாலிசித
ஒடெய ரங்கவிட்டலா என்ன தொரெயே (உத்தமர)

உன்னை நம்பிய பிறகு, எனக்கு பயம் எதற்கு
பாம்புப் படுக்கையில் படுத்திருப்பவனே, என்னை மன்னித்துவிடு
முந்தைய பக்தர்களையெல்லாம் நன்றாக காப்பாற்றிய
ரங்க விட்டலனே, என் தலைவனே (உத்தமர)

**கேசவா நாரயணா மாதவா!**

இன்றைய மிகமிக அருமையான, என் மனதுக்கு மிகவும் நெருங்கிய இந்தப் பாடலை எழுதியவர் - நம் தளத்தில் இவரது முதலாம் பாடல் இதுவே - அவர், ஸ்ரீ வாதிராஜர். இவர் வாழ்ந்த காலம் 1480 - 1600. 120 வருடங்கள் வாழ்ந்து, மாத்வ வழியில் பல்வேறு முக்கிய முடிவுகளை, புத்தகங்களை, பாடல்களை எழுதியவர். புரந்தரதாசர் இவரது சமகாலத்தில் வாழ்ந்தவர். வாதிராஜரின் விக்கி பக்கம் இங்கே : http://en.wikipedia.org/wiki/Vadirajatirtha

விழித்திருக்கும் நேரம் எல்லாம் அந்த கேசவன், நாராயணன், மாதவன் பெயரைச் சொல்லிக் கொண்டே இருக்கலாமே என்கிறார். அந்த பெயர் எப்படிப்பட்டது, அதனை உச்சரித்ததால் பலன் அடைந்தவர்கள் என்பதற்கு சில உதாரணங்கள் - இப்படிப்பட்ட விஷயங்களை இந்தப் பாடலில் பாடுகிறார்.

வாதிராஜரின் பாடல்களில் அவரது முத்திரையான ‘ஹயவதன’ என்னும் பெயர் இருக்கும். இவர் பூஜித்து வணங்கிய ஸ்ரீ ஹயக்ரீவரின் பெயரே அது. இந்தப் பாடலிலும் கடைசி வரியில் ‘ஹயவதன’ என்று பாடியிருக்கிறார்.

மாது மாதிகே கேசவா நாராயண மாதவ எனபாரதே

(ஒவ்வொரு முறை) பேசும்போதும், கேசவ, நாராயண, மாதவ என்று சொல்லக்கூடாதா..

ப்ராதஹ் காலதி எத்து பார்த்தசாரதி எந்து
ப்ரீதிலி நெனெது சத்கதிய ஒந்ததே வ்யர்த்த
மாதுகள் ஆடல்யாகே, ஹே ஜிஹ்வே, மாதவ எனபாரதே (மாது)

காலையில் எழுந்தவுடன் பார்த்தசாரதி என்று (அவன் பெயர்) சொல்லி,
(அவனைப் பற்றி) அன்புடன் நினைத்து, பிறவிப்பயனை அடையவில்லையென்றால் இந்தப் பிறவியே பயனற்றது;
வெட்டிப் பேச்சு பேசித் திரியாமல், ஹே நாக்கே, மாதவா என்று சொல்லக்கூடாதா (மாது)

ஜலஜ நாபன நாமவு ஈ ஜகக்கெல்ல ஜனன மரண ஹரவு
சுலபவாகிவுது சுகக்கே காரணவிது
பலித பாபகளனல்ல பரிஹரிசுவுதெந்து
திளிது திளியதிஹரே, ஹே ஜிஹ்வே மாதவ எனபாரதே (மாது)

அந்தப் பத்மநாபனின் பெயரானது, மறுபிறப்பு என்பதே இல்லாமல் செய்துவிடும்
உச்சரிக்க மிகவும் சுலபமானது; சுகங்கள் பெறுவதற்கு காரணமானது;
செய்து குவித்துள்ள பாவங்கள் அனைத்தையும் போக்க பரிகாரமானது;
இவை அனைத்தையும் தெரிந்தும், தெரியாதவாறே இருக்கிறாயே, ஹே நாக்கே, மாதவா என்று சொல்லக்கூடாதா (மாது)

தருணி திரௌபதிய சீரே செளெயுதீரே ஹரி நீனே கதிஎனலு
பரம புருஷ பவ பஞ்சன கேஷவ
துருளரமர்திசி தருணிகே வரவித்த
ஹரி நாமப் ப்ரியவல்லவே, ஹே ஜிஹ்வே மாதவ எனபாரதே (மாது)

திரௌபதியின் சேலையை (ஒருவன்) இழுக்கும்போது, அவள் நீயே கதி, ஹரி, என்று சொன்னாள்
உத்தமமானவனும், பிரச்னைகளில் சிக்கியவர்களுக்கு உதவுபவனுமான கேசவன் ஆனவன்

கெட்டவர்களை வீழ்த்தி திரௌபதிக்கு வரம் அளித்தான்
(அப்படிப்பட்ட) ஹரியின் பெயரானது (சொல்வதற்கு) மிகவும் பிரியமானதல்லவா, ஹே நாக்கே, கேசவா என்று சொல்லக் கூடாதா (மாது)

ஹேம கஷ்யப சம்பவ ஈ ஜகக்கெல்ல நாமவே கதி எனலு
ப்ரேமதிந்தலி பந்து காமிதார்த்தகளித்த
ஸ்வாமி ஹயவதனன நாமாவ நெனெயுத்தா
யாம யாமக்கே பிடதே ஹே ஜிஹ்வே மாதவ எனபாரதே (மாது)

ஹிரண்யகசிபு கதை (மூலம்) - நாராயணனின் பெயரே நமக்கு கதி (என்று தெரியவந்தது)
(கூப்பிட்டவுடன்) அன்புடன் வந்து, கேட்டதைக் கொடுப்பவன்,
(அந்த) ஹயவதனனின் பெயரை, ஒவ்வொரு வேளையும்,
விடாமல் சொல்லலாமே, ஹே நாக்கே, மாதவா என்று சொல்லக் கூடாதா (மாது)

**புத்திமதி சொன்னால் கேட்டுக் கொள்ளம்மா...**

பக்தி, வைராக்கியம், வேத சாரங்கள், இறைவனின் பெருமைகள் இப்படி பலவற்றைப் பற்றி பாடியுள்ள புரந்தரதாசர், மனிதர்களுக்கு சில அறிவுரைப் பாடல்களையும் பாடியுள்ளார். அப்படிப்பட்ட ஒரு பாடல்தான் இது.

நீங்களும் இந்தப் பாடலைப் பார்த்து, கேட்டு மகிழவும். இந்த புத்திமதிகள் 500 ஆண்டுகளுக்கு முன் சொல்லப்பட்டவை. இந்த நூற்றாண்டுக்கும் இவை பொருந்துமா இல்லையா என்பதை உங்கள் முடிவுக்கே விட்டுவிடுகிறேன்.

***

புத்தி மாது ஹேளிதரெ கேளபேகம்மா
மனதி சுத்தளாகி கெண்டனுடனே பாளபேகம்மா (புத்தி)

புத்திமதி சொன்னால் கேட்க வேண்டுமம்மா
தூய்மையான மனதுடன் கணவனுடன் வாழ வேண்டுமம்மா (புத்தி)

அத்தே மாவகஞ்சி கொண்டு நடெயபேகம்மா
சித்ததொல்லபன அக்கரெயன்னு படெயபேகம்மா
ஹொத்து ஹொத்திகே மனெய கெலச மாடபேகம்மா
ஹத்து மந்தி ஒப்புவ ஹாகே நடெயபேகம்மா, மகளே (புத்தி)

மாமியார் & மாமனாருக்கு மரியாதை கொடுத்து நடக்க வேண்டுமம்மா
இறைவனின் கருணைக்குப் பாத்திரம் ஆகும்படி நடக்க வேண்டுமம்மா
வேளா வேளைக்கு வீட்டு வேலை செய்ய வேண்டுமம்மா
பத்து பேர் பாராட்டும்படி நடக்க வேண்டுமம்மா (புத்தி)

கொட்டு கொம்புவ நெண்டரொடனே த்வேஷ பேடம்மா
அட்டு உம்புவ காலதல்லி ஆட பேடம்மா
ஹட்டி பாகலல்லி பந்து நில்லபேடம்மா
கட்டி ஆளுவ கண்டனொடனே சிட்டு பேடம்மா, மகளே (புத்தி)

உறவினர்களிடம் சண்டை சச்சரவு வேண்டாம்மா
சாப்பிட்டு/வேலை செய்யும் நேரத்தில் (பகல் வேளைகளில்) வெளியில் விளையாட வேண்டாம்மா
வீட்டு வாசலில் வந்து நின்று பொழுதைப் போக்க வேண்டாம்மா
கணவனுடன் எப்போதும் கோபம் வேண்டாம்மா (புத்தி)

நெரெஹொரெதவரிகே நியாயவன்னு ஹேளபேடம்மா
கருவ கோப மத்சரவன்னு மாட பேடம்மா
பரர நிந்திப ஹெண்களொடனே சேர பேடம்மா
குரு புரந்தரவிட்டலன்ன மரெய பேடம்மா, மகளே (புத்தி)

அக்கம்பக்கத்து வீட்டார் சண்டையில் தலையிட வேண்டாம்மா
கர்வம், கோவம் ஆகியவற்றை விட்டு விடம்மா
மற்றவரை தூற்றும் பெண்களுடன் சேர வேண்டாம்மா
நம் குருவான புரந்தர விட்டலனை மறக்க வேண்டாம்மா (புத்தி)

**காலம் நழுவிக் கொண்டே இருக்கிறதே..**

* இன்றைய பாடலை எழுதியவர் கோபால தாசர். இந்த தளத்தில் இது இவரது முதல் பாடலாகும்.
* இவர் வாழ்ந்த காலம் 1722 - 1762.
* இவர் மறைந்த தினம் சென்ற 13ம் தேதி (13/01/2015) அனுசரிக்கப்பட்டது.
* இவரைப் பற்றி மேலதிகத் தகவல்கள் இங்கே மற்றும் இங்கே.
* மிகக் குறைந்த காலமே வாழ்ந்த கோபால தாசர், அதற்குள் இயற்றிய நூல்கள் மற்றும் கீர்த்தனைகள் எண்ணற்றவை.

* தாசர்களில் மிக முக்கியமானவர்கள் எனக் கருதப்படுபவர்கள் 4பேர். அவர்களில் ஒருவரான ஜகன்னாத தாசர், இவரது சீடராவார். தன் சீடன் மிகக் கொடுமையான நோயால் துயரப்படுவதைக் கண்ட கோபால தாசர், தன் வாழ்நாளில் 40 ஆண்டுகளை தானம் கொடுத்தவர் என்று சொல்லப்படுகிறது.

இன்றைய பாடலைப் பற்றி:

ஏதோ ஒரு பிறப்பில் செய்த நல்ல செயலால் இப்போது மனிதனாக பிறந்துள்ளேன். ஆனால், உயிரோடிருக்கும் சிறிது காலத்தையும், வெட்டிப் பேச்சு, கெட்ட சகவாசம், அழியும் இந்த உடலை பேணிப் பாதுகாத்தல் - இதையே செய்து கழித்து விட்டேன். ஒரு நாளும் கோயிலுக்குப் போனதில்லை, சான்றோர் கூறும் நல்லுரைகளைக் கேட்டதில்லை, பூஜை புனஸ்காரங்களை செய்வதில்லை. இப்படி எதுவுமே செய்யாமல், கடைசி காலத்தில் எம தூதர்கள் வந்து, நீ என்ன நல்ல காரியங்கள் செய்தாய் என்று கேட்டால், சொல்வதற்கு எதுவுமே இல்லையே, கோபால விட்டலா - என்று முடிக்கிறார்.

Self-help புத்தகங்களில் நம்மிடம் உள்ள தவறுகள் என்னென்ன, எதைச் செய்தால் முன்னேற்றம் ஏற்படும் என்றெல்லாம் விதவிதமாக பட்டியல் போட்டிருப்பாங்க. மொத்த புத்தகத்தையும் படித்து முடித்தபிறகு, அட, இதெல்லாம் நமக்கு ஏற்கனவே தெரியுமே என்போம். அதைப் போலவே, தாசரின் இந்த பட்டியலும். மொத்தம் 5 பத்திகளில், நாம் செய்யாததையும், இனிமேல் செய்ய வேண்டியவற்றையும், அழகாக எடுத்துரைத்து, இடித்துரைக்கிறார்.

அதைக் கேட்டு, அதன்படி நடந்து கொள்ளவேண்டியது நம் பொறுப்பு.

***

ஹ்யாங்கே மாடலய்யா கிருஷ்ணா ஹோகுதித்தே ஆயுஷ்யா
மங்களாங்க பவபங்க பிடிசி நின்ன டிங்கரிகன மாடோ
அனங்கஜனகா (ஹ்யாங்கே)

எப்படி(என்ன) செய்வேன் கிருஷ்ணா, இந்தப் பிறவியின் நாட்கள் வேகமாக கழிகின்றனவே?
என்னை இந்த துயரக் கடலிலிருந்து விடுவித்து, உன் அடியனாக ஆக்குவாயாக (ஹ்யாங்கே)

யேசு ஜனுமத சுக்ருதத பலவோ தானு ஜனிசலாகி
பூசுர தேஹத ஜனுமவு எனகே சம்பவிசிதேயாகி
மோததீர்த்தமத சின்ஹிதனாகதே தோஷக்கே ஒளகாகி
லேஷ சாதனவா காணதே துஸ்ஸஹவாசதிந்தலே தினதின களெதே (ஹ்யாங்கே)

முந்தைய எந்தப் பிறவியில் செய்த நற்செயலோ, இந்தப் பிறவி கிடைத்தது;
பூலோகத்தில் இந்த உடல் / பிறவி எனக்கு கிடைத்துள்ளது

ஆனந்த தீர்த்தரின் மதத்தைப் பின்பற்றாமல், தோஷம் அடைந்து
எதையும் படிக்காமல், கூடா நட்பினைக் கொண்டு தினம்தினம் கழித்தேன் (ஹ்யாங்கே)

சசிமுக கனகத ஆஷேகே பெரெது வசுபதி நின்னடியா
ஹஸனாகி நின்ன நெனெயதே க்ருபெயா களிசதே கெட்டேனய்யா
நிஷிஹகலு ஸ்திரவெந்து தனுவனு போஷிசலாஷிசி ஜீயா
உசுரித நிலவோ சர்வகால நின்னொடெதன எம்புவோ பகேயனு அரியதே (ஹ்யாங்கே)

நிலவைப் போன்ற முகத்தையுடைய, தங்க மேனியுடைய லட்சுமியின் கணவனே, உன் திருவடியை
எப்போதும் உன்னை நினையாமல், உன் பெருமையைப் பேசாமல், கெட்டுப் போனேன்
இரவும் பகலும் எப்போதும் நிரந்தரம் என்றெண்ணி, இந்த உடலை பேணிப் பாதுகாப்பதில் நேரத்தை செலவிட்டேன்
(ஆனால்) இதெல்லாம் எப்போதும் உன்னுடையதே என்னும் உண்மையை அறியாமல் (ஹ்யாங்கே)

நெரே நம்பித பாவடிகளு எல்ல சரிது ஹோதவல்லா
மரளி ஈ பரி ஜெனுமவு பருவ பரவசே எந்து இல்லா
பரிபரி விஷயத ஆஷெயு எனகே பிரிது ஆயிதல்லா
ஹரியே ஜகதி நீனு ஒப்பனில்லதே பொரெவரின்ன ஆருரில்லா பல்லா (ஹ்யாங்கே)

எதையெல்லாம் இன்பம் கொடுக்கும் என்று எண்ணினேனோ (வீடு, செல்வம் etc), அவையெல்லாம் நிரந்தர இன்பத்தைக் கொடுக்காது என்று இப்போது புரிகிறது;
இந்தப் பிறவியின் இறுதியில் இவை எனக்கு உதவும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை
(இப்படி) பலப்பல விஷயங்களில் ஆசைப்பட்டதால், நான் ஒரு நிலையில் இல்லை;
ஹரியே, நீ ஒருவன்தான் இந்த உலகில் எனக்கு உதவி செய்யமுடியும், உன்னைப் போல் வேறு எவருமில்லை, உனக்கு ஒப்புமில்லை (ஹ்யாங்கே)

அவனியொளகே புண்ய க்ஷேத்ர சரிசுவ ஹவணிகே எனகில்லா
பவனாத்மக குரு மத்வ சாஸ்த்ரத ப்ரவசன கேளலில்லா
தவகதிந்த குரு ஹிரியர சேவிசி அவர ஒலிசலில்லா
ரவி நந்தன கேளிதர உத்தர கொடே விவர சரகு ஒந்தாதரில்லா (ஹ்யாங்கே)

உலகில் புனித யாத்திரை போவதற்கு எனக்கு எப்போதும் விருப்பம் இருந்ததில்லை
அனுமனின் அவதாரமாகிய மத்வரின் சாஸ்திர உபன்யாசங்களை கேட்டதேயில்லை
எந்த குரு/ஆசிரியருக்கும் சேவை செய்து, அவர் ஆசிர்வாதங்களை பெற்றதில்லை
(இந்தப் பிறவியில் நீ என்ன செய்தாய் என்று சூரிய புத்திரன்) எமன் கேட்டால், சொல்வதற்கு என்னிடம் நல்ல விஷயங்களே இல்லை (ஹ்யாங்கே)

பாகவதரொடகூடி உபவாச ஜாகர ஒந்தின மாடலில்லா
ராகதி சுகமுனி பேள்த ஹரிகத சம்யோக வெம்போதில்லா
நீகுவந்த பவ பயவ பகுதி வைராக்ய வெம்போதில்லா
யோகிவந்த்ய கோபால விட்டலா தலேபாகி நின்னனெ பேடிகொம்பே (ஹ்யாங்கே)

சான்றோர்களுடன் உபவாசம், ஜாகர்ண** ஒரு நாளும் செய்ததில்லை
சுக முனிவர் (பரிக்ஷித்) ராஜனிடம் கூறிய பாகவதத்தின் சாரத்தை கேட்டதில்லை
சம்சார சாகரத்திலிருந்து என்னை விடுவிக்க உதவும் பக்தி & வைராக்கியம் எனக்கு இல்லை

கோபால விட்டலனே, உன்னை தலைவணங்கிக் வேண்டிக் கொள்கிறேன் (ஹ்யாங்கே)

**ஜாகர்ண = இரவு முழுவதும் விழித்திருந்து, இறைவனை வழிபடுதல்

**<u>நல்லதுக்கு காலமே இல்லை!</u>**

ஸ்ரீ புரந்தரதாசரின் காலம் - கிபி 1484 - 1564. இன்று அவரது 451வது புண்ணிய தினம் ஆகும். தனது குருவான ஸ்ரீ வியாசராயரினால் ‘தாசரென்றாலே அது புரந்தர தாசர்தான்’ என்று பாடப்பட்டவர். தாசரின் வாழ்க்கை வரலாறு ஏற்கனவே இங்கே பார்த்திருக்கிறோம்.

விஜய நகர சாம்ராஜ்யத்தில் புகழ்பெற்ற வணிகராக இருந்த ஸ்ரீனிவாச நாயக் ஆன நம் நாயகன், அந்த குறிப்பிட்ட சம்பவத்திற்குப் பிறகு ஆன்மிகத்தில் ஈடுபட வேண்டி ஒரு குருவைத் தேடும்போது, அவரது மனைவியானவர், ஸ்ரீ வியாசராயரின் பெயரைச் சொல்ல, அவரைப் போய் பார்த்திருக்கிறார்.

போனதுமே வியாசராயர் இவரைப் பார்த்து, "இங்கே வருவதற்கு இவ்வளவு காலமா? நான் ரொம்ப நாட்களாக உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேனே" என்றாராம். மேலும், நீ செய்ய வேண்டிய செயல்கள் ஏராளமாக உள்ளன. இனியும் தாமதிக்காமல் ஹரிதாசனாகி இறைவனின் புகழைப் பாடு, மக்களிடம் அவனின் பெருமைகளைப் போய் சொல் என்று உபதேசம் செய்ய, பின்னர் நடந்ததெல்லாம் வரலாறு.

இன்றைய பாடலைப் பற்றி:

மிகவும் புகழ்பெற்ற, பல கச்சேரிகளில் பாடப்பெறும் இந்தப் பாடலைப் பார்த்தால், அந்தக் காலத்திலேயே இப்படி இருந்திருக்கிறார்களா என்றும், 450+ ஆண்டுகள் கழித்தும் இப்போதைய நிலைக்கும் பொருந்தி வருகிறதே என்றும் வியப்படைய வைக்கிறது.

***

சத்யவந்தரிகிது காலவல்லா
துஷ்டஜனரிகிது சுபீட்ச கால (சத்ய)

உண்மையே பேசுபவர்களுக்கு இது காலமல்ல
கெட்டவர்களுக்கு இது நல்ல காலம் (சத்ய)

ஹரிஸ்மரணே மாடுவகே க்ஷயவாகுவ கால
பரம பாபிகளிகே சுபீட்ச கால
ஸ்திரவாத பதிவ்ரதெய பரரு நிந்திப கால
தரெகெசாரியள கொண்டாடுவ கால (சத்ய)

எப்போதும் ஹரியை நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு, நஷ்டமாகும் காலம் இது;
பாவங்களைச் செய்பவர்களுக்கு நல்ல காலம்
பதிவிரதைகளாக இருப்பவர்களை மற்றவர்கள் திட்டும் காலம்
அப்படி இல்லாதோரை அனைவரும் கொண்டாடும் காலம் (சத்ய)

உபகார மாடிதரே அபகரிசுவ கால
சகலஷூதிளிதவகே துர்பீட்ச கால
பதிசுதரு எம்புவன நம்பலரியத கால
சடேயல்லவிதே விபரீத கால (சத்ய)

ஒருவருக்கு உதவி செய்தால், இருப்பதையும் எடுத்துக் கொள்ளும் காலம்

அனைத்தும் தெரிந்தவர்களுக்கு கெட்ட காலம்
மனைவி, மக்கள் இவர்களையே நம்ப முடியாத காலம்
(நான் சொல்வது) பொய்யல்ல; இது விபரீதமான காலம் (சத்ய)

தர்ம மாடுவகே நிர்மூலவாகுவ கால
கர்ம பாதகரிகே பஹு சௌக்ய கால
நிர்மலாத்மக ஶ்ரீ புரந்தர விட்டலனா
மர்மதொளு பஜிஸலரியத காலவய்யா (சத்ய)

தர்ம காரியங்கள் செய்பவர்களுக்கு கஷ்டம் வரும் காலம்
கடமைகளை செய்ய மறந்தவர்களுக்கு நல்ல சௌக்யமான காலம்
நிர்மலமான ஶ்ரீ புரந்தர விட்டலனை
புகழ்ந்து பாடி நினைக்கத் தெரியாதவர்கள் இருக்கும் காலம் இது (சத்ய)

**வந்தாள் மகாலட்சுமியே!**

தாசரின் புகழ்பெற்ற பாடல்களில் ஒன்றான 'பாக்யதா லக்ஷ்மி பாரம்மா' கேட்டிருப்பீர்கள். இங்கே ஏற்கனவே பார்த்திருக்கிறோம். வரலட்சுமி பூஜையின்போதும், வெள்ளிக்கிழமை பூஜைகளின் போதும் இந்தப் பாடலைப் பாடுவார்கள். மகாலட்சுமியை வீட்டுக்குள் வா என்று கூப்பிட்டு, ஆரத்தி எடுத்து, பூஜை செய்வார்கள். வீட்டுக்குள் வந்த மகாலட்சுமியைப் புகழ்ந்து பாடுவதைப் போல அமைந்த பாடல் இது.

அந்தப் பாடலில் உள்ள அதே போன்ற சொற்கள், சின்னச்சின்ன எளிமையான வரிகள் என்று பூஜைகளில் பாடுவதற்கு மிகவும் ஏற்ற பாடல்

பந்தாளு நம்ம மனெகே
ஸ்ரீ மகாலட்சுமி சந்தேவில்லதந்தே (பந்தாளு)

வந்தாள் மகாலட்சுமியே நம் வீட்டிற்கு
ஒரு தயக்கமும் இல்லாமல் (பந்தாளு)

பந்தாளு நம்ம மனெகே
நிந்தாளு க்ருஹதல்லி
நந்த கந்தன ராணி
இந்திரெ நம்ம மனெகே (பந்தாளு)

வந்தாள் மகாலட்சுமியே
நின்றாளே நம் வீட்டில்
கோபாலகிருஷ்ணனின் மனைவி
வந்தாளே இந்திரா, நம் வீட்டிற்கு (பந்தாளு)

ஹெஜ்ஜெ மேலே ஹெஜ்ஜெய நிக்குதா
கெஜ்ஜெய கால கலுகலுகலு என்னுதா
மூர்ஜகவ மோஹிசுத்த முகுந்தன ராணியு
சம்பத்து கொடலிக்கே வேங்கடேசன சஹித (பந்தாளு)

அடி மேல் அடி எடுத்து வைத்து
கொலுசு மாட்டிய காலினால் சத்தத்தை ஏற்படுத்தியவாறு
மூவுலகும் பூஜிக்கும் முகுந்தனின் மனைவியனவள்
செல்வத்தைக் கொடுப்பதற்காக வேங்கடவன் உடன் (வந்தாள்)

மாச ஸ்ராவண சுக்லவு சுக்ரவார
பௌர்ணமி தினதந்து
பூசுரரெல்ல கூடி சாசிர நாமவ பாடி
வாசவாகிரலிக்கெ வாசுதேவன ராணி (பந்தாளு)

ஆவணி மாத வெள்ளிக்கிழமை
பௌர்ணமி தினத்தில்
(அவளின்) 1000 நாமங்களைப் பாடி, போற்றி பூஜை செய்யும் மக்களின் வீட்டில்
வசிப்பதற்கு, வாசுதேவனின் மனைவி (வந்தாள்)

கனகவாயிது மந்திர ஜனனி பரலு
ஜய ஜய ஜய என்னிரே
சனகாதி முனிகள சேவெயனு ஸ்வீகரிசி
கனகவல்லியு தன்ன காந்தன கரெதுகொண்டு (பந்தாளு)

அவள் வந்ததும் இல்லமே தூய்மை/பிரகாசமானது
வாழ்க வாழ்க வாழ்க என்று சொல்லுங்கள்
சனகாதி முனிவர்கள் அனைவரின் பூஜையையும் ஏற்றுக்கொண்டு
கனகவல்லி ஆனவள் தன் கணவனையும் அழைத்துக் கொண்டு (வந்தாள்)

உட்ட பீதாம்பர ஹொளெயுதா
கரதல்லி கட்டி கங்கண ஹிடியுதா
ஸ்ருஷ்டிகொடெய நம்ம புரந்தரவிட்டலன
பட்டதரசி நமகே இஷ்டார்த்த கொடலிக்கே (பந்தாளு)

பளிச்சென்று இருக்கும் ஆடையுடன்
கையில் கங்கணத்துடன்
இவ்வுலகைப் படைத்துக் காக்கும் நம் புரந்தரவிட்டலனின்
இல்லத்தரசி, நமக்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பதற்கு (வந்தாள்)

**<u>தற்காலிகமான இந்த வாழ்க்கையில்..</u>**

பக்தி மார்க்கத்தை தங்களின் இனிய பாடல்களால் பரப்புவதை முக்கிய வேலையாகக் கொண்டிருந்த ஹரிதாசர்கள், மக்களை நல்வழிப்படுத்த நல்ல அறிவுரைப் பாடல்களையும் பாடியுள்ளனர்.

மனிதராகப் பிறந்த இப்பிறவியானது நிரந்தரமானதல்ல. ஒரு நாள் இறக்கத்தான் போகிறோம். இந்த இடைப்பட்ட சிறு வேளையில், நாம் செய்ய வேண்டிய நல்ல செயல்கள் நிறைய இருக்கின்றன. வறியவர்களுக்கு உதவுங்கள், திருட்டுத்தனம் செய்யாதீர்கள். ஆணவத்தில் ஆடாதீர்கள். அந்த 'காகிநெலெ' ஆதிகேசவனை வழிபட்டு, நற்கதி அடையுங்கள் என்று பாடியுள்ளார் கனகதாசர். அந்தப் பாடலைத்தான் இன்று பார்க்கப் போகிறோம்.

***

ஏனு இல்லத இரெடு தினத சம்சார
ஞானதல்லி தான தர்மவ மாடிரய்யா (ஏனு)

ஒன்றுமேயில்லாத இரண்டு நாட்களைக் கொண்ட இந்த வாழ்க்கையில்
தான தர்மங்களைச் செய்யுங்கள் (ஏனு)

ஹசிது பந்தவரிகே அஷனவீயலு பேகு
சிசுவிகே பால் பெண்ணே உணிசபேகு
ஹசனாத பூமியனு தாரெயெரெயலி பேகு
ஹுசி மாடதலே பாஷே நடேசலே பேகு (ஏனு)

பசியுடன் வருபவர்களுக்கு உணவு அளிக்க வேண்டும்
குழந்தைகள் உண்பதற்கு பால் & வெண்ணெய் கொடுக்க வேண்டும்
இந்த வளமான பூமியை தானமாக கொடுக்க வேண்டும்
கொடுத்த வார்த்தை தவறாத வாழ்க்கை வாழ வேண்டும் (ஏனு)

கள்ளதனகள மாடி ஒடல ஹொரெயலு பேடா
குள்ளிர்த சபெயொளகே குடில நடெசலு பேடா
ஹொள்ளேயவ நானெந்து பஹு ஹெம்மெ லிரபேடா
பாள்வே ஸ்திரவெந்து நீ நம்பி கெட பேடா (ஏனு)

(பிறர் பொருட்களைத்) திருடி உடலை வளர்க்காதே
சபைதனில் (சிறப்பான ஏதாவது அமைப்பில்) மோசடிகளைச் செய்ய வேண்டாம்
நான்தான் மிகவும் நல்லவன் என்று கர்வப்பட வேண்டாம்
(நாம்) வாழும் இந்த வாழ்க்கை நிரந்தரமானது என்று நம்பி கெட்டுப் போக வேண்டாம் (ஏனு)

தொரெதனவு பந்தாக கெட்ட நுடியலு பேடா
சிரி பந்த காலக்கே மெரெய பேடா
சிரிவந்தனாதரே நெலெ ஆதிகேசவன
சரண கமலவ சேரி சுகியாகு மனுஜா (ஏனு)

பெரிய பதவிகளில் இருக்கும்போது கொடும் சொற்களைப் பேச வேண்டாம்
செல்வம் வந்து சேரும்போது, பகட்டு வேண்டாம்
அப்படி செல்வந்தன் ஆகும்போது, ஏ மனிதனே,
காகிநெலெ ஆதிகேசவனின் சரணங்களை வந்து அடைந்து ஆனந்தப்படு. (ஏனு)

**ஸ்ரீ குரு ராகவேந்திரரை வணங்குவோம்**

இறைவனைப் பற்றி தாசர்கள் பாடிய பாடல்களை பார்த்தோம். பின்னர் வந்த தாசர்கள், குருபக்தியை வெளிப்படுத்தும் விதமாக, தங்கள் குருவைக் குறித்தும் பல பாடல்களைப் பாடியுள்ளனர்.

அவற்றுள் ஒருவரான கமலேஷ விட்டல தாசர் என்பவரின் பாடலை இன்று பார்ப்போம். இவர், மந்திராலய மகான், ஸ்ரீ குரு ராகவேந்திரரின் வழி வந்தவர் ஆவார். ஆகவே குருவைக் குறித்து பல அருமையான பாடல்களைப் பாடியுள்ளார்.

இவரது 'கரெதரே பரபாரதே' பாடலை ஏற்கனவே இங்கே பார்த்துள்ளோம்.

***

துங்கா தீர விராஜம் பஜமன
ராகவேந்திர குரு ராஜம் பஜமன (துங்கா)

துங்கபத்ரா நதி தீரத்தில் வீற்றிருப்பவரை வணங்குவோம்
ராகவேந்திரரை, குருராஜரை வணங்குவோம் (துங்கா)

மங்கள கர மந்திராலய வாசம்
ஸ்ரிங்காரானன ராஜித ஹாசம்
ராகவேந்திர குரு ராஜம் பஜமன (துங்கா)

மங்களங்களைத் தரக்கூடிய மந்திராலயத்தில் வசிக்கும்
அழகான திருமுகத்தில், வசீகரிக்கும்படியான புன்னகையை உடைய
ராகவேந்திரரை, குருராஜரை வணங்குவோம் (துங்கா)

கரத்ருத தண்ட கமண்டல மாலம்
சுருசிர சேலம் த்ரித மணி மாலம்
ராகவேந்திர குரு ராஜம் பஜமன (துங்கா)

கைகளில் தண்டம், கமண்டலங்களை கொண்டவரான
அழகான, காவி உடை அணிந்தும், கழுத்தில் (துளசி) மணிமாலை அணிந்தவருமாகிய
ராகவேந்திரரை, குருராஜரை வணங்குவோம் (துங்கா)

நிருபம சுந்தர காய சுஷீலம்
வர கமலேஷார்பித நிஜ சகலம்
ராகவேந்திர குரு ராஜம் பஜமன (துங்கா)

ஒப்பில்லாதவரும், தூய்மையான மேனியைக் கொண்டவரான
(அனைத்தையும்) கிருஷ்ணார்ப்பணம் என்று சமர்ப்பிப்பவருமான
ராகவேந்திர குரு ராஜம் பஜமன (துங்கா)

**கோவிந்தன், கிருஷ்ணன் வந்தான்...**

இன்னொரு எளிமையான புரந்தர தாசர் பாடல்.

திருவீதி வலம் வந்து, மக்களுக்கு தரிசனம் கொடுக்கும் உற்சவரைப் பார்த்து பாடும்படியாக அமைந்த இந்த புகழ்பெற்ற பாடலை இன்று பார்ப்போம்.

பந்த நோடி கோவிந்தா கிருஷ்ணா
பந்த பந்த ஆனந்த தீர்த்த முனீந்த்ர வந்த்ய
ஹரி நந்த முகுந்தனு (பந்த)

கோவிந்தன், கிருஷ்ணன் வந்தான் பாருங்கள்
ஆனந்த தீர்த்தர் (மத்வர்) வணங்கிய ஹரி, முகுந்தன் வந்தான் (பந்த)

சரசிஜாக்ஷ தொரெயே சர்வர பொரெவ தயாநிதியே
கரிய வரன சக்ரதி உத்தரிசித
ஹரி நம்ம பாலிப பால்கடலொடெயனு (பந்த)

தாமரைக் கண்ணன், (நம்) தலைவன், அனைவரையும் ஆட்கொள்பவன், கருணைக் கடல்;
கஜேந்திரனை (யானையை) தன் சக்கிரத்தால் காப்பாற்றிய
ஹரி, பாற்கடலில் படுத்திருப்பவன் (பந்த)

இந்திர தேவ வந்த்யா இஷ்டர இந்து காவ்ய நித்யாநந்தா
சந்திர கோடி லாவண்ய முகதலி
சுந்தர அரளெல ஹாரகெ லிந்தலி (பந்த)

இந்திர தேவனால் வணங்கப் பெறுபவன்,
வணங்குபரை உடனே காக்கும் நித்யானந்தன்,
கோடி சந்திரன்(கள்) சேர்ந்தால் கிடைக்கும் ஒளி போன்ற முகத்தை உடையவன்,
அழகான இலைகளால் ஆன மாலைகளை அணிந்தவன் (பந்த)

சரண கமல காந்தே சர்வத மாள்புது தயவந்தே
தர தர ஜனரிகே கரெது வரவனிவ
சரசிஜாக்ஷ நம்ம புரந்தர விட்டலனு (பந்த)

ஒளி மிகுந்த சரணகமலத்தைக் கொண்டவன், அனைவரையும் ஆட்கொள்ளும் கருணையைக் கொண்டவன்
அனைத்து மக்களையும் அழைத்து வரங்களை அளிப்பவன்
தாமரைக் கண்ணன், அவனே நம் புரந்தர விட்டலன் (பந்த)

**ரங்கனாதனின் சின்ன பாதங்கள்..**

நம் வீட்டுப் பக்கத்தில் இருக்கும் வேங்கடேஸ்வர கோயிலில் ரங்கனாதரும் ஒரு சன்னிதியில் எழுந்தருளியிருக்கிறார். கோயிலின் இணையதளம் இங்கே. ரங்கனாதர் உயரம் 13.5அடி. பிரம்மாண்டமான அழகான உருவம். அவரைப் பார்க்கப் போகும்முன்னர், பிரகாரத்திலேயே, அவர் பாதங்களைப் பார்க்கும் விதமாக சுவற்றில் ஒரு ஜன்னலைப் போன்று ஏற்படுத்தியிருக்கின்றனர். இதன் வழியாக அவர் பாதங்களைப் பார்த்தபிறகு, சன்னிதியில் போய், கால்கள் இருக்கும் திசையிலிருந்து, தலை இருக்கும் திசை நோக்கி நகர்ந்து, அவர் அழகைப் பருகியவாறே, வெளியே வர மனமின்றி வருவோம்.

அந்த ரங்கனாதனின் பாதங்களில் (தங்கக் கவசத்தில்) பல்வேறு சின்னங்கள் இருக்கும். அவை என்னென்ன? உற்றுப் பார்த்தாலும் சரிவர புரியவில்லை.

ஆனால், ஸ்ரீபாதராயரின் இந்தப் பாடலைப் பார்த்ததும் அனைத்து சந்தேகங்களும் தீர்ந்தன. அந்தப் பாதங்களில் என்னென்ன இருக்கும்? அவரே சொல்கிறார் பாருங்கள். இவ்வளவு சிறப்பு மிக்க பாதங்களைக் கண்ட ஆனந்தத்தில் உருவாகியது இந்த புகழ்பெற்ற அவரது பாடல்.

இக்கோ நோடே ரங்கனாதன சிக்க பாதவ
சிக்கிதே ஸ்ரீ லக்ஷ்மி பதிய திவ்ய பாதவ (இக்கோ)

இங்கே பாருங்க ரங்கனாதனின் சின்ன பாதங்களை
(காணக்) கிடைத்தன ஸ்ரீ லக்ஷ்மிபதியின் திவ்யமான பாதங்கள் (இக்கோ)

சங்க சக்ர கதா பத்ம அங்கித பாதவ
அங்குச குலிஷ த்வஜா ரேகா அங்கித பாதவ
பங்கஜாசனன ஹ்ருதயதல்லி நலியுவ பாதவ
சங்கட ஹரண வேங்கடேசனன திவ்ய பாதவ (இக்கோ)

சங்க சக்ர கதா பத்ம ஆகியவை இருக்கும் பாதங்கள்
அங்குசம் கோடரி கொடி ரேகைகள் (அல்லது சூரியனின் ரேகைகள்) இருக்கும் பாதங்கள்
தாமரை ஆசனத்தில் வீற்றிருக்கும் லக்ஷ்மியின் இதயத்தில் இருக்கும் பாதங்கள்
கஷ்டங்களைப் போக்கும் வேங்கடேசனின் திவ்ய பாதங்களை (இக்கோ)

லலனே லக்ஷ்மி அங்கதல்லி நலியுவ பாதவ
ஜலஜாசனன அபீஷ்டவெல்ல சலிசுவ பாதவ
மல்லர கெலிது கம்சாசுரன கொந்த பாதவ
பலிய மெட்டி பாகிரதிய படெத பாதவ (இக்கோ)

(அவன்) மனைவியான லக்ஷ்மியின் ஒரு பாகமாக விளங்கும் பாதங்கள்
பிரம்மனின் விருப்பங்களை எல்லாம் நிறைவேற்றும் பாதங்கள்
மல்லர்களை வென்று கம்சனைக் கொன்ற பாதங்கள்
பலிச் சக்கரவர்த்தியை மிதித்து பாகிரதியை அடைந்த பாதங்களை (இக்கோ)

பண்டெய பாலெய மாடித உத்தண்ட பாதவ
பண்டியொளித்த சகடாசுரன ஒத்த பாதவ
அந்தஜ ஹனும புஜதொளுப்புவ அந்தத பாதவ
கண்டேவே ஸ்ரீ ரங்க விட்டலன திவ்ய பாதவ (இக்கோ)

பாறையை ஒரு அழகிய பெண்ணாக மாற்றிய அசாதாரணமான கால்கள்
வண்டியைத் தள்ளி சகடாசுரனைக் கொன்ற பாதங்கள்

அனுமனின் தோள்களில் ஏறும் கால்கள்
கண்டேனே ஸ்ரீ ரங்க விட்டலனின் திவ்யமான கால்களை (இக்கோ)

**<u>ஸ்ரீ ராகவேந்திராய நமஹ..</u>**

ஹரிதாசர்களில் முக்கியமானவர்களில் இவரும் ஒருவர். 18ம் நூற்றாண்டில், 80 வருடங்கள் வரை வாழ்ந்தவர். தன் முதல் 40வருடங்களுக்குப் பிறகு, விஜயதாசர் மற்றும் கோபாலதாசர்களில் அருள்+ஆசியால் தாச தீட்சை பெற்று ஜகன்னாத தாசர் ஆனவர். பின்னர் பற்பல பாடல்கள் இயற்றி, தன் 80வது வயதில், ஹரிகதாம்ருத சாரம் என்னும் மிகவும் உன்னதமான நூலைப் படைத்தவர்.

இந்த தளத்தில் இது இவரது முதல் பாடலாகும். மந்திராலய பல்கலைக்கழகத்தில் படித்து, ராகவேந்திரரின் தீவிர பக்தரான இவர், ராகவேந்திரர் மேல் பல பாடல்களைப் பாடியுள்ளார். இதுவும் ஒரு புகழ் பெற்ற பாடலே.

ரோக ஹரனே க்ருபா சாகர ஸ்ரீகுரு
ராகவேந்திரா பரிபாலிஸோ (ரோக)

நோய்களைத் தீர்ப்பவனே, கருணைக் கடலே,
ஸ்ரீ ராகவேந்திரனே, எனக்கு வழிகாட்டு (காப்பாற்று / ஆட்கொள்வாயாக) (ரோக)

சந்தத துர்மத த்வாந்த திவாகர
சந்த வினுத மாத லாலிஸோ (ரோக)

தடையில்லாமலும் எந்த பாரபட்சம் இல்லாமலும் (அனைவருக்கும் கிடைக்கும்) சூரிய ஒளியைப் போன்றவனே
அனைத்து திசைகளிலும் ஆனந்தத்தை பரப்பும் நல்ல சொற்களையே (எங்களைப்) பேசச் செய் (ரோக)

பாவன காத்ர சுதேவ வரனே தவ
சேவக ஜனரொளகாடிஸோ (ரோக)

தூய்மையான உடலைக் கொண்டவனே, கடவுளர்களே வணங்கத் தக்கவனே
உன் சேவகர்களாகிய (தாசர்களாகிய) எங்களை ஆட்கொள்வாயாக (ரோக)

கன்ன மஹிம ஜகன்னாத விட்டல ப்ரிய
நின்ன ஆராதனே மாடிஸோ (ரோக)

(அனைத்திலும்) ஆழ்ந்த அறிவுடைய, மகிமை பொருந்தியவனே, (இந்த) ஜகன்னாத விட்டலனின் தாசனை,
உன்னை எப்போதும் பூஜிக்கச் செய்வாயாக (ரோக)

**<u>சிவாய நம ஓம்!</u>**

வைணவ பக்தியை பரப்பிய தாசர்களின் த்வைத சித்தாந்தத்தில், சிவனுக்கும் ஒரு இடம் இருப்பதால், அவரைப் பற்றியும் பற்பல பாடல்களை பாடியிருக்கின்றனர்.

அப்படிப்பட்ட ஒரு பாடலை ஏற்கனவே இங்கே பார்த்திருக்கிறோம். ஹரிதாசர்கள் இயற்றிய சிவன் பாடல்கள், ஸ்லோகங்கள் அனைத்தும் இங்கே தொகுக்கப்பட்டுள்ளன.

இன்றைய பாடலைப் பாடியவர் புரந்தரதாசர். ஆலகால விஷம், மார்க்கண்டேயன், கும்பகோணத்தில் இருக்கும் கும்பேஸ்வரன் ஆகிய சம்பவங்கள் / இடங்களைப் பற்றிப் பாடும் தாசர், சிவனை, விபூதி அணிந்த, ராமரை வணங்கும் ஒரு வைஷ்ணவர் என்கிறார்.

***

சந்திரசூட சிவ சங்கர பார்வதி ரமணனே நினகே நமோ நமோ
சுந்தர மிருகவர பினாக தனுகர கங்கா ஷிர கஜசர்மா அம்பரதர (சந்திரசூட)

சந்திரனை தரித்தவனே, சிவசங்கரனே, பார்வதியின் கணவனே, உன்னை வணங்குகிறேன்
அழகான மிருகங்களை (மான்) உடையவனே, பினாக (என்னும் வில்) ஏந்தியவனே, தலையில் கங்கையைக்
கொண்டவனே, யானையின் தோலை அணிந்தவனே (சந்திரசூட)

நந்தி வாஹனா ஆனந்ததிந்த மூர்ஜகதி மெரெவ நீனே
அந்து அம்ருத கடதிந்த உடிசித விஷ தந்து புஜிசிதவ நீனே
கந்தர்ப்பன க்ரோததிந்த கண் தெரெது கொந்த உக்ர நீனே
இந்திரேச ஸ்ரீ ராமன பாதவ சந்ததி பொகளுவ நீனே (சந்திரசூட)

நந்தி வாகனத்தில் ஆனந்தத்துடன் மூன்று உலகங்களையும் சுற்று வருபவன் நீயே
அன்று அமிர்தத்தை எடுப்பதற்காக கடைந்தபோது வந்த விஷத்தை குடித்தவன் நீயே
காமதேவனை ஆத்திரத்துடன் (மூன்றாவது) கண் திறந்து கொன்ற கோபக்காரன் நீயே
இந்திரன் வணங்கக்கூடிய ஸ்ரீராமனின் பாதங்களை எப்போதும் தொழுபவன் நீயே (சந்திரசூட)

பாலம்ருகண்டன காலனு எளெவாக பாலிசிதவ நீனே
வாலயதி கபால பிடிது பிக்ஷா பேடோ திகம்பர நீனே
காலகூடவனு பானமாடித நீலகண்டனு நீனே
ஜாலமாடித கோபாலனெம்ப ஹெண்ணிகே மருளாதவ நீனே (சந்திரசூட)

மிருகண்டு முனிவரின் மகனை (மார்க்கண்டேயன்) எமன் பிடிக்கும்போது காப்பாற்றியவன் நீயே
கைகளில் மண்டையோட்டை பிடித்து, பிக்ஷை எடுக்கும் திகம்பரன் (வானத்தை உடையாக உடுத்தியவன்) நீயே
காலகூட விஷத்தை குடித்த நீலகண்டனும் நீயே
அரக்கர்களிடமிருந்து அமிர்தத்தைக் காப்பாற்ற மோகினி வேடமிட்ட விஷ்ணுவின் மேல் மோகம் கொண்டவன் நீயே

(சந்திரசூட)

தரெகே தக்ஷிண காவேரி தீர கும்பபுர வாசனு நீனே
கொரளலு ருத்ராக்ஷ பஸ்மவு தரிசித பரம வைஷ்ணவ நீனே
கரதல்லி வீணெய நுடிசுவ நம்ம உரகபூஷணனு நீனே
கருடகமன ஶ்ரீ புரந்தர விட்டலகே ப்ராண ப்ரியனு நீனே (சந்திரசூட)

தெற்கில், காவேரி நதிக்கரையில், கும்பேஸ்வரனாக வசிப்பவன் நீயே
கழுத்தில் ருத்ராக்ஷம், சாம்பல் அணிந்த பரம வைஷ்ணவன் நீயே
கையில் வீணையை மீட்டுபவன், பாம்பை மாலையாக அணிந்தவன் நீயே
கருட வாகனன் ஶ்ரீ புரந்தர விட்டலனின் உயிருக்கு உயிரான நண்பன் நீயே (சந்திரசூட)

**ராமா, உன் கால்களைக் காட்டு!**

அப்படிப்பட்ட பாதங்களைப் பற்றி, இவ்வுலகில் வேறொன்றினைப் பற்றியும் கவலைப் படாமல், நமக்கு வேண்டிய அனைத்தையும் அந்த ராமனே பார்த்துக் கொள்வான் என்ற பொருளுடன் ஸ்ரீபாதராயர் பாடும் பாடல் இது.

ஸ்ரீராமா நின்ன பாதவ தோரோ
மோஹன்ன குணதாமா நின்ன மோஹத பாதவ (ஸ்ரீராமா)

ஸ்ரீராமா உன் பாதங்களைக் காட்டு
நற்குணங்கள் அனைத்தையும் கொண்டவனே, உன் அழகிய பாதங்களைக் காட்டு (ஸ்ரீராமா)

வரகுணஜால சுரகணலோல
கருணா பால தருணி பரிபால (ஸ்ரீராமா)

உன்னதமான குணங்களைக் கொண்டவனே, கடவுளர்கள் சூழ் வலம் வருபவனே
கருணையுள்ளம் கொண்டவனே, பெண்ணைக் (திரௌபதி, அகலிகை) காப்பாற்றியவனே (ஸ்ரீராமா)

அஜபவ புஜித கஜவர பாவித
சுஜனர சேவித த்ரிஜக வந்தித (ஸ்ரீராமா)

அனைவர்களாலும் பூஜிக்கப்படுபவனே; யானைக்கு வரம் கொடுத்து காத்தவனே
மக்களால் வணங்கப்படுபவனே, மூவுலகிலும் கொண்டாடப்படுபவனே

அங்கஜ ஜனக விஹங்க துரங்க
துங்க விக்ரம ஸ்ரீ ரங்க விட்டலா (ஸ்ரீராமா)

கருணையுள்ளம் கொண்டவனே, தந்தையே, சூரியனே, (சூரியனைப் போல்) வேகமாகப் பயணிப்பவனே,
உயர்ந்தவனே வீரனே ஸ்ரீ ரங்க விட்டலா (ஸ்ரீராமா)

**<u>பாடல்களை எப்படிப் பாட வேண்டும்?</u>**

மலகி பரமாதரதி பாடலு
குளிது கேளுவா குளிது பாடலு நிலுவா
நிந்தரே நலிவா, நலிதரே ஒலிவே நிமகெம்பா
சுலபனோ ஹரி தன்னவரனர
களிகே பிட்டகலனோ ரமாதவன
ஒலிசலரியதே பாமரரு பளலுவரு பவதொளகே..

சரணம், பல்லவி etc கொண்ட பாடல் அல்ல இன்று பார்க்கப்போவது. ஒரு சிறிய ஸ்லோகம் போன்றதொரு வரிகள் மட்டுமே. பாடல்களுக்கு முன் இப்படிப்பட்ட ஸ்லோகங்களைப் பாடுவது வழக்கம்.

மேற்சொன்ன புகழ்பெற்ற வரிகள், ஜகன்னாததாசர் எழுதிய ஹரிகதாம்ருத சாரம் என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது.

இதன் பொருள்?

இறைவனைப் பற்றிப் பாட வேண்டும். எப்படிப் பாடுவது? உட்கார்ந்து? நின்று? நடந்து? எப்படிப் பாடினால், அவனுக்குப் பிடிக்கும்? எப்படிப் பாடினால், எப்படி கேட்பான்? தாசர் சொல்கிறார் - படுத்துக் கொண்டு கூட அவன் புகழ் பாடலாம்.

மலகி பரமாதரதி பாடலு குளிது கேளுவா
படுத்துக் கொண்டு (அவன் புகழ்) பாடினால், உட்கார்ந்து கேட்பான்

குளிது பாடலு நிலுவா
உட்கார்ந்தவாறு பாடினால், நின்றுகொண்டு கேட்பான்

நிந்தரே நலிவா
நின்றுகொண்டு பாடினால், ஆடிக்கொண்டே கேட்பான்

நலிதரே ஒலிவே நிமகெம்பா
நாம் ஆடிக்கொண்டே பாடினால், என்னையே உங்களுக்குக் கொடுப்பேன் என்பான்

சுலபனோ ஹரி தன்னவரனர களிகே பிட்டகலனோ
ஹரியை கண்டுபிடிப்பது மிகவும் சுலபம்; அவன் தன் பக்தர்களை விட்டு ஒரு கணமும் அகலாதவன்

ரமாதவன ஒலிசலரியதே பாமரரு பளலுவரு பவதொளகே
(இந்த உண்மைகளை அறியாமல்) அந்த லட்சுமிபதியை எப்படி திருப்திப்படுத்துவது என்று அறியாமல் மக்கள் சம்சார சாகரத்தில் மூழ்கித் திளைக்கிறார்களே!

***

அது சரி, இதற்கு உதாரணங்கள் உண்டோ? உண்டு.

பீஷ்மர். படுத்துக் கொண்டே சொன்னது விஷ்ணு சஹஸ்ரநாமம். குனிந்து கேட்ட கிருஷ்ணன் சொன்னது - நான் சொன்ன பகவத்கீதையை விட என்னைப் பற்றி சொன்ன விஷ்ணு சஹஸ்ரநாமம் மிகச் சிறந்தது.

புண்டரீகன். தன் தாய் தந்தையருக்கு சேவை செய்தவாறு இறைவன் புகழ் பாடுகையில், அவன் போட்ட செங்கல் மேல் நின்று விட்டலன் அதைக் கேட்டு மகிழ்ந்தான்.

பிரகலாதன். தூண் முன் நின்றவாறு இறைவனைப் பாடிய பிரகலாதன் முன் இறைவன் தோன்றி மகிழ்வித்தான்.

நாரதர். பாடி ஆடியவாறு திரியும் நாரதர் மேல் இறைவனுக்கு அதிக பிரியம் என்பது நாம் படித்து அறிந்ததே.

**<u>நம் வீடு எங்கே இருக்கிறது?</u>**

பூஜை புனஸ்காரங்கள், கடவுள் மேல் நம்பிக்கை இல்லாமல் வணிகத்தில் ஈடுபட்டு கருமியாக வாழ்க்கையைக் கழித்துக் கொண்டிருந்த புரந்தர தாசர், அனைத்து செல்வங்களையும் தானம் செய்துவிட்டு, தினப்படி பிக்ஷை பெற்று வாழலானார் என்பது நமக்குத் தெரியும். அப்படிப்பட்ட வைராக்கியம் கொண்டவர், அதைப் பற்றி பல பாடல்களாகவும் எழுதியுள்ளார்.

முதலில் இந்தப் பாடலைப் பார்த்துவிடுவோம். சிறு விளக்கம் பின்னர்.

அல்லிதே நம்மனே
இல்லி பந்தே சும்மனே (அல்லிதே)

நம்ம வீடு அங்கே இருக்கிறது;
நான் இங்கே வந்தது தற்காலிகமாகத்தான் (அல்லிதே)

கட பாகிலிரிசிதா கள்ள மனே இது
முததிந்த லோலாடோ சுள்ளு மனே
இடிராகி வைகுண்ட வாச மாடுவந்தா
பதுமனாபன திவ்ய பதுகு மனே (அல்லிதே)

வாசல், கதவுகளுடன் கூடிய பொய்யான வீடு இது
மிகவும் பிரியத்துடன் கட்டிக் காக்கப்படும் பொய்யான வீடு இது
வைகுண்டத்தில் வாசம் செய்யும்
பத்பனாபன் வந்து தங்கி இதை தன் வீடாகிக் கொண்டான் (அல்லிதே)

மாளிகேமனேயெந்து நெச்சி கெடலி பேடா
கேளய்யா ஹரிகதே ஸ்ரவணங்களா
நாளே யமதூதரு பந்தெளெதொவ்யாக
மாளிகே மனெயு சங்கத பாரதய்யா (அல்லிதே)

மாட மாளிகை என்று நினைத்து ஏமாற வேண்டாம்
இறைவனின் கதைகளை, சொற்பொழிவுகளைக் கேட்கவும்
நாளையெ எமதர்மனின் தூதர்கள் வந்து உன்னை கூப்பிடும்போது
இந்த மாட மாளிகைகள் உன் கூட வராது (என்று தெரிந்துகொள்) (அல்லிதே)

மடதி மக்களெம்ப ஹம்பல நினகேகோ
கடுகொப்புதனதல்லி மெரெயதிரோ
ஒடெய ஸ்ரீ புரந்தரவிட்டல ராயன
த்ருட பக்தியல்லி நீ பஜிசெலோ மனுஜா (அல்லிதே)

மனைவி மக்கள் என்று (எப்போதும்) அவர்களையே எண்ணி ஏங்கிக் கொண்டிருக்காதே
எப்போதும் ஆணவத்துடன் சுற்றிக் கொண்டிருக்காதே
நம் முதல்வன் ஸ்ரீ புரந்தரவிட்டலன் மேல்
பக்தி கொண்டு, அவரைப் பற்றி எப்போதும் பஜித்துக் கொண்டிருப்பாய் நீ (அல்லிதே)

***

இந்தப் பாடலை இரு விதமாகப் புரிந்து கொள்ளலாம். வீடு என்பதை இந்த உலகம் அல்லது இந்த உடல் என்றும் பொருள் கொள்ளலாம். இந்த உலகத்தில், நாம் வந்தது நிரந்தரமானதல்ல என்று கூறுவது போலவும், ஆத்மா இந்த உடலுக்கு வந்து சேர்ந்தது தற்காலிகமானதுதான் என்றும் பொருள் கொள்ளலாம்.

மாட மாளிகைகள், உறவுகள் எவையும் இறுதியில் எமதூதர்கள் வந்து கூப்பிடும்போது நம்முடன் வராது. அதனால் ஆணவத்துடன் சுற்றித் திரியாமல், அந்த புரந்தர விட்டலனை நினைத்துக் கொண்டிருப்பாயாக என்று கூறுகிறார் தாசர்.

**போகாதே ரங்கா போகாதே!**

கிருஷ்ணா நீ பேகனே பாரோன்னு கிருஷ்ணனைக் கூப்பிட்டு வீட்டில் இருக்கச் சொன்ன தாசர்கள், அந்தக் கிருஷ்ணனை வெளியில் போகவேண்டாமென்றும் பாடியுள்ளனர். வெளியில் போனால் என்னென்ன பிரச்னைகள் வரும், யாரெல்லாம் அவனைக் கூப்பிட்டுக் கொண்டுபோக காத்திருக்கின்றனர் என்றெல்லாம் இந்த அருமையான பாட்டில் பாடியுள்ளார் புரந்தரதாசர்.

போகாதிரேலோ ரங்கா பாகிலிந்தாச்சே
பாகவதரு கண்டு எத்தி கொண்டைவரு (போகாதிரேலோ)

கதவுக்கு அந்தப்பக்கம் (வெளியே) போகாதே, ரங்கா
(எப்போதும் உன்னை நினைத்து, தேடிக் கொண்டிருக்கும்) பாகவதர்கள், உன்னைக் கண்டு தூக்கிப் போய்விடுவார்கள் (போகாதிரேலோ)

சுரமுனிகளு தம்ம ஹ்ருதய கமலதல்லி
பரமாத்மன காணதே அரசுவரு
தொரகத வஸ்துவு தொரகிது தமகெந்து
ஹருஷதிந்தலி நின்ன கரெதெத்தி கொம்புவரு (போகாதிரேலோ)

முனிவர்கள் தங்கள் இதயத்தில்
இறைவனைக் காணாமல் வருந்தும் நேரத்தில்
கிடைக்காத பொக்கிஷம் நமக்குக் கிடைத்தது என்று
ஆனந்தத்துடன் உன்னை கையில் தூக்கிக் கொண்டுவிடுவார்கள் (போகாதிரேலோ)

அகணீத குண நின்ன ஜகத நாரியரெல்ல
ஹகெயாகி நுடிவரோ கோபாலனே
மகுகள மாணிக்யன தகலித்து கரகெந்து
வேகதிந்தலி பந்து பிகிதப்பி கொம்புவரு (போகாதிரேலோ)

எண்ணற்ற நற்குணங்களையுடைய உன்னை, ஊரிலுள்ள பெண்கள் அனைவரும்
(உன் குறும்புகளை) மறந்து, உன்னைக் கூப்பிடுவார்கள், கோபாலனே
குழந்தைகளில் முதல்வனே, உன்னுடன் இருக்க வேண்டுமென்று
வேகமாக வந்து, வாரி அணைத்துக் கொள்வார்கள் (போகாதிரேலோ)

திட்ட நாரியரெல்ல இஷ்டவ சலிசெந்து
அட்டட்டி பென்னட்டி திருகுவரோ
ஸ்ருஷ்டீச புரந்தர விட்டல ராயனே
இஷ்டிஷ்டு பெண்ணெய கொட்டேனோ ரங்கய்யா (போகாதிரேலோ)

விரதங்களை செய்யும் பெண்மணிகள், தங்கள் விரும்பியதை அடைய
(உன்னை) பின்தொடர்ந்து எப்போதும் சுற்றிக் கொண்டிருப்பர்
உலகத்தைப் படைத்த புரந்தர விட்டலனே
உனக்கு கொஞ்சமே கொஞ்சம் வெண்ணையைக் கொடுக்கிறேன் ரங்கய்யா (போகாதிரேலோ)

**பிள்ளையாரப்பா**!

மிகவும் பிரபலமான இந்தப் பாடலை இயற்றியவர் கனகதாசர். இன்றைய நாயகனான விநாயகரைக் குறித்து பாடியதாகும். அவரின் தாயான பார்வதியிடம், விநாயகரின் பெருமைகளைக் கூறி, இப்படிப்பட்டவர் யார் - அது நம் கணபதிதானே என்று பதில் கூறுவதைப் போல் அமைந்துள்ளது இப்பாடல்.

நம்மம்ம சாரதே உமா மகேஸ்வரி
நிம்மொளகிவன் யாரம்மா (நம்மம்ம)

எங்கள் தாயே சாரதே, உமா மகேஸ்வரி,
உன் உள் உறைபவன் யாரம்மா (நம்மம்ம)

கொம்மகொளன வைரி சுதனாத சொண்டில
ஹெம்மெய கணநாதனே கணம்மா (நம்மம்ம)

பூக்களால் ஆன வில் ஏந்திய மன்மதனின் எதிரியான சிவனின் மகன்,
நம் பெருமைமிகு கணபதிதான் அவன் (நம்மம்ம)

மோரெ கப்பின பாவ மொரத கலத கிவி
கோரெ தாடெயன் யாரம்மா
மூரு கண்ணன சுத முரிதிட்ட சந்திரன
தீரத கணநாதனே அம்மய்யா ( நம்மம்ம)

கருப்பு நிற (யானை போன்ற) முகம், முறத்தைப் போன்ற காதுகள்,
தந்தங்களை உடையவன் யாரம்மா?
மூன்று கண்களை உடையவனின் மகன், சந்திரனை முறித்தவன்,
வீரமான கணபதியே, நம் கணபதியே ( நம்மம்மா)

உட்டதட்டியு பிகிதுட்ட சல்லனதா திட்டதான் இவன் யாரம்மா
பட்டதா ராணி பார்வதியா குமாரனு
ஹொட்டேயா கண நாதனே கணம்மா (நம்மம்மா)

இடுப்பில் வேட்டியை இறுக்கி கட்டியவன், (அவனை வணங்குபவர்களின்)
எதிர்மறை எண்ணங்கள் அனைத்தையும் அகற்றுபவன்,
சிவனின் ராணி பார்வதியின் குமாரன் தொந்தியை உடைய கணபதியே, நம் கணபதியே ( நம்மம்மா)

ராசி வித்யேய பல்ல ரமணி கொம்பலனொல்ல பாஷிக இவன்யாரம்மா
லேசாகி ஜனர சலகுவ காகி நெலெயாதி கேசவ தாச காணே (நம்மம்மா)

அளவில்லா ஞானத்தை உடையவன்
பெண்களின் மேல் மோகம் கொள்ளாதவன்
மக்களின் துன்பங்களைப் போக்கும் காகிநெலெ
ஆதிகேசவனின் தாசன், இந்த கணபதி.. (நம்மம்மா)

**அனும, பீம, மத்வர்.**

த்வைத சித்தாந்தத்தை நிறுவிய ஸ்ரீமத்வர், முந்தைய பிறப்புகளில் அனும மற்றும் பீமன் அவதாரங்களைக் கொண்டிருந்தார் என்று சொல்லப்படுகிறது. புரந்தரதாசர் தன் பல பாடல்களில் இந்த மூன்று அவதாரங்களைப் பற்றியும் (ஒரே பாடலில் வருமாறு) பாடியுள்ளார். அதில் ஒன்றுதான் இந்தப் பாடல். அனுமன், பீமன் மற்றும் மத்வருக்கு ஒவ்வொரு பத்தி, அவர்களில் சிறப்புகளைப் பற்றி சொல்லி, புரந்தரவிட்டலனின் பெயரோடு பாடலை முடிக்கிறார்.

வீர ஹனும பஹு பராக்ரமா
சுஞானவித்து பாலிசென்ன ஜீவரோத்தமா (வீர)

வீரனான ஹனுமனே, வீரனே
நல்ல ஞானத்தைக் கொடுத்து என்னைக் காப்பாற்று ஜீவர்களில் உத்தமனே (வீர)

ராம தூத நெனெசி கொண்ட நீ
ராக்ஷசர வனவரெல்ல கித்து பந்தே நீ
ஜானகிகே முத்ரே இத்து ஜகத்திகெல்ல ஹருஷவித்து
சூடாமணிய ராமகித்து, லோகக்கே முட்டெனிசி மரெவ (வீர)

ராமனின் தூதனாக அறியப் படுபவன் நீ
அரக்கர்களின் வனங்களைக் கொன்றுவிட்டு வந்தவன்
(ராமனிடமிருந்து கொண்டு வந்த) மோதிரத்தை சீதையிடம் கொடுத்து, முழு உலகத்திற்கும் ஆனந்தமளித்தவன்
(பின்னர் சீதையிடமிருந்து) சூடாமணியை ராமனிடம் கொடுத்து, உலக மக்களின் பிரியத்திற்கு பாத்திரமானவன் (வீர)

கோபி சுதன பாத பூஜிஸி
கதெய தரிசி பகாசுரன சம்ஹரிசிதே
த்ரௌபதிய மொரெய கேளி மத்தே கீசகன கொந்து
பீம நெம்ப நாம தரிசி சங்க்ராம தீரனாகி ஜகதி (வீர)

கோபிகையின் மகனான கிருஷ்ணனின் பாதங்களை பூஜித்தவன்
கதையைக் கொண்டு பகாசுரனைக் கொன்றவன்
திரௌபதியின் கோரிக்கையை ஏற்று, கீசகனைக் கொன்று
பீமன் என்ற பெயரைக் கொண்டு, போர்களை வென்றவன் (வீர)

மத்ய கேஹனல்லி ஜனிஸி நீ
பால்யதல்லி மஸ்கரீய ரூப கொண்டே
சத்யவதிய சுதன பஜிஸி சன்முகதி பாஷ்ய மாடி
சஜ்ஜனர பொரெவ முத்து புரந்தர விட்டலன தாச (வீர)

மத்யகேஹ பட்டர் என்பவர் வீட்டில் பிறந்தவன்
சிறிய வயதில் துறவி ஆனவன்
சத்யவதியின் மகனான வியாஸரை வணங்கி, பல பாஷ்யங்களை (நூல்களுக்கான விளக்கங்களை) எழுதியவன்
நல்லவர்களைக் காக்கும் ஸ்ரீ புரந்தர விட்டலனின் தாசன் (வீர)

**ரங்கன் எங்கு இருக்கிறான்?**

இறைவன் எங்கே இருக்கிறான்? நாம் கூப்பிட்ட நேரத்தில், சற்றும் தாமதிக்காமல், எப்படி நம்மை வந்தடைந்து, நம்மை துன்பத்திலிருந்து காப்பாற்றுவான் என்கிற கேள்விகளுக்கு பல்வேறு உதாரணங்களுடன் விளக்குகிறார் தாசர்.

பிரகலாதன் கூப்பிட்டவுடன் ஸ்ரீஹரி வந்தானே?
அஜாமிளன் தன் இறுதிகாலத்தில் நாராயணா என்றவுடன் ஓடோடி வந்தானே?
கஜேந்திரன் என்கிற யானையை எப்படி விரைந்து வந்து காப்பாற்றினான்?
திரௌபதிக்கு உதவியனும் அவன்தானே?

இப்படியெல்லாம் சொல்லிவிட்டு, முத்தாய்ப்பாக, இறைவன் எங்கும் இருப்பவன், அவனை எப்பொழுதும் நினைத்து, பாடி, தொழுது வருபவர்கள் மனதிலேயே இருந்து காப்பவன் என்று அருமையாக முடிக்கிறார்.

எல்லிருவனோ ரங்க எம்ப சம்சய பேடா
எல்லி பக்தரு கரெதரல்லே ஒதகுவன்னு (எல்லி)

எங்கே இருப்பானோ ரங்கன், என்கிற சந்தேகமே வேண்டாம்
எங்கே பக்தர் கூப்பிடுகிறாரோ, அங்கே உடனடியாக வந்து சேருவான் (எல்லி)

தரள பிரஹ்லாத ஸ்ரீ ஹரி விஸ்வமயனெந்து
பரெதோதலெ அவன பிதா கோபதிந்தா
ஸ்திரவாதடீ கம்பதொளு தோர எனலு
பரதிபரலு அதக்கே வைகுண்ட நெரமனயே (எல்லி)

சிறுவன் பிரகலாதன், ஸ்ரீ ஹரி உலகத்தில் எல்லா இடத்திலும் இருக்கிறான் என்று சொல்ல,
அவன் தந்தை கோபத்துடன்,
இந்த கம்பத்தில் ஹரி இருக்கிறாரா, காட்டு என்று சொல்ல
உடனடியாக அங்கே தோன்றினார் ஹரி. வைகுண்டம் என்பது அருகிலேயேவா இருந்தது? (எல்லி)

பாபகர்மவ மாடித அஜாமிளன எமபடரு
கோபதிந்த எளயுதிரே பீதியிந்த
காபுத்ரனனு கரெயே கேளி ரக்ஷிஸே
ஸ்வேத த்வீபவீதரகே அதி சமீப தல்லிஹுதே (எல்லி)

வாழ்க்கை முழுவதும் பாவங்களைச் செய்த அஜாமிளனைக் கூப்பிட்டுச் செல்ல வந்த எமதூதர்கள்
கோவத்துடன் அவனை இழுத்தனர்; அப்போது பயத்துடன்
நாராயணனை (அஜாமிளன்) கூப்பிட்டதும், வந்தானே,
ஸ்வேதத்வீபம் என்னும் இடம் நமக்கு மிக அருகிலேயே இருக்கிறதா என்ன? (எல்லி)

கரிராஜனனு நெகளு நுங்குதிரே பயதிந்தா
மொரெயிடலு கேளி அதி த்வரதிதிந்தா
கருணதலி பந்தனவ பிடிசலா கஜராஜ
இருவ சரசிகே அனந்தசானவு மும்மனெயே (எல்லி)

கஜேந்திரன் என்னும் யானை (தன் காலை முதலை பிடித்ததும்) பயத்துடன்
இறைவனிடம் முறையிட்டதும், அதிவேகமாக
கருணையுடன் சென்று முதலையிடமிருந்து அந்த யானையை மீட்டினான்; அந்த யானை

இருந்த குளம், அனந்தனின் வீட்டின் ஒரு பகுதியா என்ன? (எல்லி)

குருபதியு த்ரௌபதிய சீரெயனு செளெயதிரே
தருணி ஹா கிருஷ்ணா எந்தொதரே கேளி
பரதிந்தா அக்ஷயாம் பரவித்தா
ஹஸ்தினாபுரிகு த்வாராவதிகு கூகளதெய (எல்லி)

குரு வம்சத்தின் அரசன், திரௌபதியின் சேலையை இழுக்கும்போது
அந்தப் பெண், கிருஷ்ணா என்று கூப்பிட்டத்தைக் கேட்டு
வந்து முடிவில்லாத ஆடையை அளித்த (அந்த கிருஷ்ணனின் இடமான)
துவாரகை, ஹஸ்தினாபுரத்திற்கு கூப்பிடு தூரத்திலா இருந்தது? (எல்லி)

ஹணுமஹத்துகளல்லி பரிபூர்ண நெந்தெனசி
கணனெயில்லதா மஹா மஹிம நெனிபா
கனக்ருபா நிதி நம்ம புரந்தரவிட்டலன
நெனெதவர மனதல்லி இஹனெம்ப பிருதிரலு (எல்லி)

எங்கும் வியாபித்திருக்கும், சர்வ வல்லமை படைத்த, பரிபூர்ணனான
எண்ணில் அடங்காத மகிமைகளைக் கொண்ட,
கருணைக்கடலான நம் புரந்தரவிட்டலனானவன்,
(அவனை) நினைத்தவரின் மனதில் கண்டிப்பாக இருப்பான் (இது நிரூபிக்கப்பட்ட உண்மை) (எல்லி)

**ஆரத்தி'யின் விளக்கொளியில் இறைவனைப் பாருங்கள்.**

இறைவனின் பூஜையில் செய்யப்படும் உபசாரங்கள் மொத்தம் 16 என்பர். (அதற்கு மேலும் சிலவற்றை சேர்ப்போரும் உண்டு). இறைவனை வரவேற்று, உட்கார ஆசனம் கொடுத்து, என்றவாறு போகும் அந்த 16 உபசாரங்கள் இங்கே விரிவாக உள்ளது. http://www.salagram.net/upacharas.html

இதில் தூபாரத்தி என்று ஒரு உபசாரம் சொல்லப்பட்டுள்ளது. தூபாரத்தி = நெய்யில் முக்கி எடுக்கப்பட்ட திரியில் விளக்கேற்றி இறைவனுக்கு காட்டப்படும் ஆரத்தி. அப்படிப்பட்ட ஆரத்தி பற்றி மட்டுமே ஒரு முழுமையான பாடலை இயற்றியுள்ளார் புரந்தரதாசர்.

ஆரத்தி காட்டும்போது மணி அடிப்பது வழக்கம். வீட்டில் மணியுடன், ஜாங்கடே என்றழைக்கப்படும் கருவியையும் சிலர் அடிப்பர். கோயில்களில் கூடுதலாக மத்தளம், முரசு ஆகிய வாத்தியங்களும் வாசிப்பதுண்டு. தற்போது இவை அனைத்தும் தானியங்கிகள் ஆகிவிட்டன.

இத்தகைய கருவிகளின் இனிமையான சத்தத்தின் நடுவே, சாம்பிராணி மற்றும் இன்னபிற நறுமண பொருட்களின் வாசத்துடன் நடந்து கொண்டிருக்கும் இறைவனின் பூஜையில், தற்போது காட்டப்படும் ஆரத்தியை பார்க்க வாருங்கள் என்று அழைக்கிறார் தாசர்.

வாருங்கள், நாமும் அவருடன் சேர்ந்து பூஜையை கவனிப்போம்.

***

தூபாரத்தியா நோடுவ பன்னி - நம்ம
கோபாலகிருஷ்ண தேவர பூஜைய (தூபாரத்தியா)

தூபாரத்தியை பார்க்கலாம் வாங்க - நம்
கோபாலகிருஷ்ணனின் பூஜையில்.. (தூபாரத்தியா)

மத்தளே ஜாகடே தாள தண்டிகே பேரி
தத்திமி திமிகெந்து ரவசகளு
அத்புத சங்க நாதகளிந்ததி நம்ம
பத்பனாப தேவர திவ்ய பூஜைய.. (தூபாரத்தியா)

மத்தளம், ஜாங்கடே, தாளத்துடன் கூடிய முரசு
தத்திமி திமி என்ற லயத்துடன்
அற்புதமான சங்க நாதத்துடன், நம்
பத்பனாபனின் பூஜையில்.. (தூபாரத்தியா)

அகரு சந்தன தூப குக்குள சாம்ப்ராணி
மகமதிசுவ தாரதியு
விவிதாத ஏகாரதி பத்தி நம்ம
ஜகன்னாத விட்டல தேவர பூஜைய (தூபாரத்தியா)

அகர், சந்தனம், தூபம், குங்கிலியம், சாம்பிராணி
ஆகியவற்றின் நறுமணத்தினால் ஆன ஆரத்தி;
விதவிதமான ஏகாரத்தி (ஒற்றைத்திரி) ஏற்றி நம்
ஜகன்னாத விட்டலனின் பூஜையில்.. (தூபாரத்தியா)

ஹரி சர்வோத்தமன பக்தராதனா

பரம மங்கள மூர்த்தி பாவனனா
பர தெய்வவாதந்த ஶ்ரீ ரங்க நாதன
புரந்தர விட்டலன தேவர பூஜைய (தூபாரத்தியா)

அனைவரிலும் உத்தமனான, பக்தர்களின் பாதுகாவலனான
அழகிய வடிவம் கொண்டவனான
ஶ்ரீ ரங்கனாதனின், புரந்தர விட்டலனின் பூஜையில்.. (தூபாரத்தியா)

**வாராய் நீ வாராய், கிருஷ்ணா!**

இன்றைய பாடலை இயற்றியது ஸ்ரீவாதிராஜர். மிகவும் எளிமையான பாடல். அஷ்டோத்திரத்தை அப்படியே பக்கத்து பக்கத்தில் போட்டு பாட்டு வரிகளில் எழுதியதைப் போல் உள்ளது. ஆகவே ஒவ்வொரு சொல்லுக்கும் பொருளைக் கொடுத்து விட்டால், பாட்டு எளிதாகப் புரிந்துவிடுகிறது.

ராமனை, கிருஷ்ணனை வரவேற்கும் இந்தப் பாடல் இதோ.

பாரோ பேக பாரோ நீல மேக வர்ணா
பாரோ பேக பாரோ பேலபுரத சென்னா (பாரோ)

வாராய் வேகமாய் வாராய், கருமை நிறத்தவனே
வாராய் வேகமாய் வாராய், பேலூரின் சென்ன கேசவனே (பாரோ)

இந்திரெ ரமண கோவிந்தா பேக பாரோ
நந்தன கந்த முகுந்தா பேக பாரோ (பாரோ)

இலக்குமியின் கணவனே கோவிந்தனே வேகமாய் வாராய்
நந்தகோபனின் மகனே முகுந்தனே வேகமாய் வாராய் (பாரோ)

தீர உதார கம்பீர பேக பாரோ
ஹார அலங்கார ரகுவீர பேக பாரோ
ருத்தா அனிருத்தா நிரவத்யா பேக பாரோ
ஹத்தா நேரித்தா சுப்ரசித்தா பேக பாரோ (பாரோ)

வீரனே தயாளனே கம்பீரமான தோற்றம் உடையவனே
மாலை அலங்காரத்துடன் காணப்படும் ராமனே
எங்கும் வியாபித்திருப்பவனே, அனிருந்த்தனே, எவ்வித களங்கமும் இல்லாதவனே
யானையின் மேலேறி வரும், மிகவும் பிரபலமானவனே (பாரோ)

ரங்கா உத்துங்கா நரசிங்கா பேக பாரோ
மங்கள மஹிம சுபாங்கா பேக பாரோ
ஐயா விஜய சஹாயா பேக பாரோ
அஹ்யத்ரி வாசா ஹயவதனா பேக பாரோ (பாரோ)

ரங்கனே அழகிய சிங்கனே
மங்களகரமான மகிமை பொருந்தியவனே, அழகிய அங்கங்களைக் கொண்டவனே
தலைவனே, (பக்தர்களைக்) காத்திட வேகமாய் வருபவனே
பாம்பின் மேல் படுத்திருப்பவனே, ஹயவதனனே, வேகமாய் வாராய் (பாரோ)

பாரதி தேவி.

ஸ்ரீமத்வர் நிறுவிய த்வைத சித்தாந்தத்தில் முக்கியமான கோட்பாடு - Hierarchy. கடவுளர்களிலிருந்து இந்த hierarchy, set செய்து வைத்துள்ளனர். அந்தப் பட்டியல் இங்கு உள்ளது.

https://dvaitavedanta.wordpress.com/2009/03/15/taratamya-of-sri-madhvacharya/

இந்த hierarchyல் மேலே, முதல் இடத்தில் ஸ்ரீமன் நாராயணன். அவனே சர்வோத்தமன். அனைத்திலும் / அனைவரிலும் உயர்ந்தவன். பிறகு வருபவர் ஸ்ரீலக்ஷ்மி. மூன்றாவது இடத்தில் வருபவர் பிரம்மா & வாயு பகவான்.
நான்காவது இடத்தில் இவர்களது மனைவிகள் - சரஸ்வதி & பாரதி தேவி.

இந்த பாரதி தேவியைப் பற்றிய பாடலே இன்று பார்க்கப் போவது. புரந்தரதாசர் பாடிய இது மிகவும் புகழ் பெற்ற பாடலாகும்.

இந்தப் பதிவுக்காக இவரின் படத்தைத் தேடலாம்னா, அஃபீஷியலான படமே எங்கும் கிடைக்கவில்லை என்பது ஆச்சரியமான விஷயம். பல இணைய குழுமங்களில் கேட்டும் பார்த்துட்டேன். ம்ஹூம். கிடைத்தால் மறுபடி பதிவிடுகிறேன். அதுவரை பாடலைப் பார்த்துவிடுவோம்.

***

பாரதி தேவிய நெனெ நெனெ
நிருத பகுதிகிது மனெ மனெ (பாரதி)

பாரதி தேவியை நினை மனமே
நிலையான பக்திக்கு இதுவே வழி வழி (பாரதி)

மாருதனர்தனாகி சுசரித கோமலாங்கி
சாரசாக்ஷி க்ருபாங்கி ஆபாங்கி (பாரதி)

மாருதனின் மனைவி நற்பண்புகளை உடைய இனிமையானவள்
தாமரை போன்ற கண்களை உடையவள், கருணையே உருவானவள் (பாரதி)

கிங்கிணி கிணிபாத பங்கஜ நூபுர
கன்கண குண்டித ஆங்க்ருத தேஹ (பாரதி)

கிங்கிணி என ஒலிக்கும் புனிதமான கொலுசு அணிந்தவள்
பளபளக்கும் ஆபரணங்களை உடலெங்கும் அணிந்தவள் (பாரதி)

சங்கர சுரவர வந்தித சரணே
கிங்கரி புரந்தரவிட்டலன கருணே (பாரதி)

சிவன் மற்றும் மற்ற கடவுளர்கள் இவளை வழிபடுவர்
இவள் புரந்தரவிட்டலனின் கருணையைப் பெற்றவள் (பாரதி)

## **இறைவன் எழுதிய கடிதம்**

இறைவன் நம் எல்லார்க்கும் ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதில் என்னெல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது? நாம் எதையெல்லாம் செய்ய வேண்டும்? எதையெல்லாம் செய்யக்கூடாது என்று எழுதியிருக்கிறது? இறைவனே, தன் கைப்பட எழுதி

யிருப்பதால், தயவு செய்து அதை பின்பற்றுமாறு புரந்தரதாசர் இந்தப் பாடலில் எழுதியிருக்கிறார்.

கடிதம் = உடம்பு / வாழ்க்கை.

இறைவனால் கொடுக்கப்பட்ட இந்த உடம்பை, இந்த வாழ்க்கையை வீணாக்காமல் எப்படியெல்லாம் நல்வழியில் செலவழிக்கலாம் என்று இந்தப் பாடலில் பார்க்கலாம். மிகவும் எளிமையான பாடல். மக்களுக்கு அறிவுரை கூறுமாறு அமைந்த இன்னொரு தாசர் பாடல்.

***

காகத பந்திதே நம்ம கமலநாபனது
ஈ காகதவன்னு ஓதிகொண்டு கால களயிரோ (காகத)

நம் பத்பனாபனின் கடிதம் வந்துள்ளது
இந்தக் கடிதத்தை படித்துக் கொண்டு காலத்தைக் கழியுங்கள் (காகத)

காம க்ரோதவ பிடிரெம்போ காகத பந்திதே
நேமெ நிஷ்டெயொள் இரிரெம்போ காகத பந்திதே
தாமஸ ஜனர கூடதிரெம்போ காகத பந்திதே
நம்ம காமனய்யனு தானே பரெத (காகத)

காமம் விரோதம் ஆகியவற்றை விட்டுவிடுங்கள்...
பூஜை, புனஸ்காரங்கள் (ஆகிய தினசரி கடமைகளில்) ஈடுபடுங்கள்..
தாமஸ (கீழ்த்தரமான நோக்கங்களை உடைய) மக்களிடமிருந்து விலகி இருங்கள்...
நம் மன்மதன் தந்தை தானே எழுதிய (காகித)

ஹெண்ணின் ஆசே பிடிரெம்போ காகத பந்திதே
ஹொன்னின் ஆசே பிடிரெம்போ காகத பந்திதே
மண்ணின் ஆசே பிடிரெம்போ காகத பந்திதே
நம்ம கமலனாபனு தானே பரெத (காகத)

பெண்ணாசையை விட்டுவிடுங்கள்..
பொன்னின் ஆசையை விட்டுவிடுங்கள்..
மண்ணின் ஆசையை விட்டுவிடுங்கள்..
நம் பத்பனாபன் அவனே எழுதிய.. (காகித)

கெஜ்ஜெயெ காலிகெ கட்டிரெம்போ காகத பந்திதே
ஹெஜ்ஜெ ஹெஜ்ஜேகெ ஹரியெனிரெம்போ காகத பந்திதே
லஜ்ஜெயெ பிட்டு குணியிரெம்போ காகத பந்திதே
நம்ம புரந்தர விட்டல தானே பரெத (காகத)

கால்களில் கொலுசு அணியுங்கள்...
ஹரி என்றபடியே நடனமாடத் துவங்குங்கள்...
வெட்கத்தை விட்டு ஆடுங்கள்..
நம் புரந்தரவிட்டலன் தானே எழுதிய.. (காகித)

**பெற்றெடுத்த குழந்தை, தாய்க்கு பாரமா?**

ஹனும பீம மத்வ என்னும் மூன்று அவதாரங்களைப் பற்றிப் பேசும் இன்னொரு பாடல். தாசர்களில் மிகவும் முக்கியமானவர்களாகக் கருதப்படும் - நால்வரில் (ஸ்ரீபாதராயர், வியாசராயர், புரந்தரதாசர் & விஜயதாசர்) - விஜயதாசர் எழுதிய பாடல் இது.

ஹனும பீம மத்வர் ஆகியோர்களின் பெருமைகளைச் சொல்லி, இவ்வளவு பெருமைகளை உடையவனே, நான் என்ன குற்றம் செய்தேன்? ஏன் என்னை காப்பாற்ற மறுக்கின்றாய் என்று மன்றாடும் விஜயதாசரின் அருமையான பாடல் இது.

***

பாரவே பாரதி ரமணா, நினகே நான் (பாரவே)

பாரதிதேவியின் ரமணனே, உனக்கு நான் மிகவும் பாரமாக தெரிகிறேனா? (பாரவே)
(ஏன் என்னை காப்பாற்ற மறுக்கின்றாய்?)

லங்கா நாதன பிங்கவ முரிது
அகளங்க சரிதன கிங்கர நெனெசிதி
பங்கஜாக்ஷிகே அங்கிததுங்குர வித்தே
ஷங்கே இல்லதே நீ லங்கேயா தஹிசிதே (பாரவே)

லங்கா அரசனின் கர்வத்தைப் போக்கி
அவன் மகன் & முழு சேனையையும் அழித்தாய்
சீதைக்கு அடையாள முத்திரை கொடுத்தாய்
பயமில்லாமல், நீ இலங்கையை எரித்தாய் (பாரவே)

சோம குலதி நிஸ்ஸீம மஹிம நெனெசி
தாமஸ பகன நிர்தூமவ மாடிதே
காமினி மோஹிசே ப்ரேமதி சலஹிதே
தாமர சாக்ஷன ப்ரேமவ படெதே (பாரவே)

சோம குலத்தில் உதித்து
பகாசுரனை கொன்றாய்
ஹிடிம்பி என்னும் அரக்கி உன் மேல் ஆசைப்பட்டபோது, (வேதவியாசரின் ஆணைக்கேற்ப) அவளைத் திருமணம் செய்துகொண்டாய்
தாமரை மணாளன் (கண்ணனின்) பாசத்தைப் பெற்றாய் (பாரவே)

வேதவ்யாசர சேவெய மாடி
மோததிந்த பஹூ வாதகளாடி
அதம சாஸ்திரகள ஹோமவ மாடி
விஜய விட்டலன சேவக நெனெசிதி (பாரவே)

வேதவியாசருக்கு பூஜைகளை செய்து
பற்பல விவாதங்களை மேற்கொண்டு
மற்ற சாஸ்திரங்களுக்கு எதிராக வாதிட்டு, அவற்றை வென்று
விஜய விட்டலனின் சேவகன் என்று எப்போதும் எண்ணிக் கொண்பவனே, உனக்கு (பாரவே)

ஹனும பீம மத்வ...

இன்றைய பாடலை எழுதியவர் ஸ்ரீ வியாசராயர். புரந்தரதாசரின் குருவான இவரது இன்னொரு புகழ் பெற்ற பாடல் - கிருஷ்ணா நீ பேகனே பாரோ - அனைவரும் அறிந்ததே.

இன்றைய பாடலில், ஹனும பீம மத்வ அவதாரங்களைப் பற்றி பாடுகிறார்.

ஜய வாயு ஹனுமந்தா ஜய பீம பலவந்தா
ஜய பூர்ண மதிவந்தா சலஹோ சந்தா (ஜய)

ஜய வாயு ஹனுமந்தா, ஜய பீம பலவந்தனே
ஜய மத்வ மதிவந்தா, என்னைக் காப்பாற்றுவாய் நன்றாக (ஜய)

அஞ்ஜனெயலி ஹுட்டி அந்து ராமர சேவே
நந்ததிந்தலி மாடி கபி பலவ கூடி
சிந்து லங்கிசி களன வன பங்கிசி சீதே
டுங்குரவ கொட்டே லங்காபுரவ சுட்டே (ஜய)

அஞ்சனாதேவியிடம் பிறந்து, அன்று ராமனின் சேவை
சந்தோஷத்துடன் செய்து, சக-குரங்குகளின் உதவியுடன்
கடல் கடந்து அங்கே வனத்தை அழித்து சீதைக்கு
அடையாள முத்திரை கொட்டாய், இலங்கையை அழித்தாய் (ஜய)

ஹரிகே சூடாமணியனித்து கரிகள கூடி
ஷரடியனு கட்டி அரிபலவ ஹுடிகுட்டி
உரக பந்தனதிந்த கபிவரரு மைமரெயே
வர சஞ்ஜீவனவ தந்து பதுகிசிதே (ஜய)

ஸ்ரீராமனிடம் சூடாமணி கொடுத்து நண்பர்களுடன் சேர்ந்து
(கடல் மேல்) பாலத்தைக் கட்டி, யுத்தத்தின் போது
நாகாயுதத்தால் ராமர் படையினர் மயக்கமடைந்துவிட
சஞ்சீவி மலையை கொண்டு வந்து அனைவரையும் காப்பாற்றினாய் (ஜய)

த்வாபரதலி பாண்டு பூபநாத்மஜனாதே
ஸ்ரீபார்த்தசாரதி ஹரி பஜக நீனாதே
பாபி மாகத பக கீசக ஹிடிம்பகர
கோபதிந்தலி தரிதே மூர்ஜகதி மெரெதே (ஜய)

த்வாபர யுகத்தில் பாண்டுவின் புத்திரனாக அவதரித்தாய்
ஸ்ரீ பார்த்தசாரதி என்கிற ஹரியின் பக்தனாக ஆனாய்
கெட்டவர்களான பகாசுரன், கீசகன், ஹிடிம்பன் ஆகியோரை
கோபத்துடன் கொன்றாய், மூவுலகத்தையும் காத்தாய் (ஜய)

துரதல்லி துர்யோதனன பலவனு தரிதே
அரிது துஷ்ஷாசனன ஒடலன்னு பகெதே
உரவ தப்பிசி கௌரவன்ன தொடெகள முரிதே
ஹரிய கிங்கர துராந்தரகாரு சரியே (ஜய)

யுத்தத்தில் துரியோதனின் பலத்தைக் குறைத்தாய்
துச்சாதனனின் உடலைக் கிழித்தாய்
கௌரவர்களின் தொடைகளைக் கிழித்து அவர்களைக் கொன்றாய்
ஹரியின் எதிரிகளை பந்தாடினாய், அது சரியே (ஜய)

கலியுகதலி கள்ளருடிசி துர்மதகளனு பலிசி
ஶ்ரீஹரிய குணகளனு தூஷிசி
கலியனனு சரிசே குருவாகி அவதரிசி
களர துர்மத முரிதே ஶ்ரீக்ருஷ்ண பரனெந்தே (ஜய)

கலியுகத்தில் பலர் அவரவர் மதங்களைப் பரப்ப வந்தபோது
ஶ்ரீஹரியின் குணங்களைத் திட்டியபோது,
இவைகளை சரிசெய்ய, குருவாக் அவதரித்தாய்
அந்த மதங்களை வீழ்த்தினாய், ஶ்ரீகிருஷ்ணனே தெய்வம் என்றாய் (ஜய)

**<u>பக்தி vs முக்தி</u>**

இறைவனின் வேண்டும்போது எதைக் கேட்பது? பக்தியா அல்லது முக்தியா? இவ்விரண்டையும் கேட்டவர்களுக்கு கடைசியில் என்ன கிடைத்தது? அவர்கள் என்ன ஆனார்கள்? விஜயதாசரின் இந்தப் பாடலைப் பார்ப்போம்.

***

பக்தி சுகவோ ரங்கா முக்தி சுகவோ
பக்தி சுகவோ முக்தி சுகவோ
யுக்திவந்தரெல்லா ஹேளி (பக்தி)

பக்தி நல்லதா ரங்கா முக்தி நல்லதா
பக்தி நல்லதா முக்தி நல்லதா
புத்திமான்களே கொஞ்சம் சொல்லுங்கள் (பக்தி)

பக்தி மாடித ப்ரஹ்லாத முக்தியனு படெது கொண்டா
முக்தி பேடித துருவராய முக்தியிந்த ஹரியா கண்டா (பக்தி)

பக்தி செய்த பிரகலாதனுக்கு இறுதியில் முக்தி கிடைத்தது
முக்தி கேட்ட துருவனுக்கு, இறுதியில் முக்தி கிடைத்து, ஹரியின் தரிசனமும் கிடைத்தது (பக்தி)

பக்தி மாடித அஜாமிளனு அந்த்யதல்லி ஹரியா கண்டா
முக்தி பேடித கரிராஜ துரிதகளனு களெது கொண்டா (பக்தி)

பக்தி செய்த அஜாமிளன் இறுதியில் ஹரியைக் கண்டான்
முக்தி கேட்ட கஜேந்திரன் (என்னும் யானை), தன் கஷ்டங்களைப் போக்கிக் கொண்டான் (பக்தி)

பக்தி முக்திதாத நம்ம லக்குமி அரச விஜய விட்டல
ஷக்த தான் எனுத பஜனே மாடிரோ (பக்தி)

பக்தி, முக்தி இவ்விரண்டையும் கொடுக்கக்கூடிய நம் விஜய விட்டலனே
சக்தி வாய்ந்தவன் என்று பஜனை செய்யுங்கள் மக்களே (பக்தி)

**உகாபோகங்கள்**.

இவை சாதாரண பாடல்களைப் போல் - சரணம், பல்லவி, அனுபல்லவி - என்ற விதிகளைக் கொண்டிருக்காது. ஒரு பத்தி - குறைந்த பட்சம் நான்கு வரிகளைக் கொண்ட பாடல். மற்ற பாடல்களைப் பாடும் முன்னர் இந்த உகாபோகங்களைப் பாடுவது பாடகர்களின் வழக்கம். ராக ஆலாபனைகள் செய்வதற்கு மிகவும் வசதியானவை இந்த உகாபோகங்கள். அனைத்து தாசர்களும் இவ்வகைப் பாடல்களை இயற்றியுள்ளனர். இன்றைய பாடலை இயற்றியவர் புரந்தரதாசர்.

த்வைத சித்தாந்தத்தில், பல்வேறு கடவுளர்கள் இருக்கின்றனர். அவர்களுக்கு தனித்தனி பொறுப்புகள் உள்ளன. அவர்களை வழிபட்டால் அந்தந்த பலன்கள் கிடைக்கும். ஆனால், இவர்கள் அனைவர்க்கும் தலைமை ஸ்ரீமன் நாராயணன் ஆவார். அவரே சர்வோத்தமன். அனைத்து கடவுளர்களும், தங்கள் பொறுப்பைச் செய்வதற்கு ஹரியே காரணம். அவரே அவர்களை வழிநடத்துகிறார்.

இந்த கருத்தை வெளிப்படுத்துவதே இன்றைய பாடல்.

***

சதத கணநாத சித்திய நீவ கார்யதலி
மதி ப்ரேரிசுவளு பார்வதி தேவியு

நிரந்தரமானவன், கணங்களின் தலைவன் (கணபதி) நாம் செய்யும் அனைத்து செயல்களிலும் கூட இருந்து அருள் புரிவான்
நல்ல புத்தியைக் கொடுப்பாள் பார்வதி தேவி

முகுதி பதக்கே மனவீவ மஹா ருத்ர தேவரு
ஹரி பகுதி தாயகளு பாரதி தேவி

முக்தி பெறுவதற்கான வழியைக் காட்டுவார் சிவபெருமான்
ஹரி பக்தி செய்வதற்கான வழியைக் காட்டுவாள் பாரதி தேவி

யுக்தி சாஸ்திரகளல்லி வனஜா சம்ப்ஹவனரசி
சத்கர்மகள நடெசி சுஞான மதி இத்து

புத்திகூர்மை, எதையும் அடைவதற்கான செயல்திறனை கொடுப்பாள் தாமரையில் அமர்ந்திருப்பவள் (சரஸ்வதி)
நற்செயல்களை நம்மை செய்ய வைத்து, நல்ல புத்தியைக் கொடுப்பான் (பவமானன்=அனுமான்)

கதி பாலிசுவ நம்ம பவமானனு
சித்ததல்லி ஆனந்த சுகவ நீவளு ரமா

உதவி புரிவான் நம்ம பவமானன் (அனுமான்)
எப்பொழுதும் அமைதியாக இருக்க ஆனந்தத்தைத் தருவான் இலக்குமி தேவி

பகுத ஜனரொடெய நம்ம புரந்தர விட்டலனு
சதத இவரளு நிந்து ஈ க்ருதிய நடெசுவனு

பக்தர்களின் பாதுகாவலன் நம் புரந்தர விட்டலன்
எப்பொழுதும் இந்த எல்லாக் கடவுளர்களின் உள்ளேயும் இருந்து, அவரவர்களின் செயல்களை செய்ய உதவி புரிவான்.

**கிருஷ்ணனை கண்டீர்களா?**

சற்றே பெரிய பாட்டு. கிருஷ்ணனின் லீலைகள், அந்தக் குழந்தையின் சேட்டைகள் அனைத்தையும் சொல்லணும்னா, எவ்வளவு பத்திகள் பாடினாலும் போதாதே?

குட்டி கிருஷ்ணன் உங்க வீட்டுக்கு வந்தானா என்று கேட்டவாறு அவன் அருமை பெருமைகளைப் பற்றி புரந்தரதாசர் பாடும் பாடல். மிகவும் எளிமையான, மிகச் சுலபமாக புரியும் பாடல்.

இத்துடன் மூன்று ஒளித்துண்டுகள் இணைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடகரும் சிற்சில பத்திகளை மட்டுமே பாடியுள்ளனர்.

அம்மா நிம்ம மனெகளல்லி
நம்ம ரங்கன காணீரே (அம்மா)

அம்மா உங்க வீட்டில்
நம்ம ரங்கன் வந்தானான்னு பார்த்தீர்களா (அம்மா)

ப்ரம்ம மூர்த்தி நம்ம கிருஷ்ணன
நிம்ம கெரெயல்லி காணீரே (அம்மா)

கிருஷ்ணன், பிரம்மனும் அவனே
உங்க தெருக்களில் வந்தானான்னு பார்த்தீர்களா (அம்மா)

காசி பீதாம்பர கையல்லி கொளலு பூசித
ஸ்ரீ கந்த மையொளகம்மா
லேசாகி துளசிய மாலெய தரிசித
வாசுதேவனு பந்தா கண்டீரேனே (அம்மா)

காசிப் பட்டு, கைகளில் குழல்,
உடம்பில் சந்தனம் பூசியவன்
கழுத்தில் துளசி மாலை அணிந்திருப்பான்
அந்த வாசுதேவன் வந்தானான்னு பார்த்தீர்களா (அம்மா)

கரதல்லி கனகன பெரெளல்லி உங்குர
கொரளல்லி ஹாகித ஹுலியுகுரம்மா
அரளெலெ கனக குண்டல காலந்துகே
உரக சயன பந்தா கண்டீரேனே (அம்மா)

கைகளில் வளையல், விரல்களில் மோதிரம்,
கழுத்தில் புலி நகத்தாலான மாலை
தங்கத் தோடுகள், கொலுசுகள் இவற்றையணிந்து
பாம்புப் படுக்கை கொண்டவன், வந்தானான்னு பார்த்தீர்களா (அம்மா)

குங்கும கஸ்தூரி கரி நாம திட்டி
சங்க சக்ரகள தரிசிஹனம்மா
பினகதிந்தலி கொளலூதுத பாடுத
பங்கஜாக்ஷனானு கண்டீரேனே (அம்மா)

குங்குமம், கஸ்தூரி ஆகியவற்றால் நெற்றியில் நாமம் தீட்டி
சங்கு சக்கரங்களுடம் இருப்பானம்மா
தன் குழலை வாசித்தவாறே பாடுவானம்மா
அந்த தாமரைக் கண்ணனை பார்த்தீர்களா (அம்மா)

மாவன மடுஹித ஷகடன கெடஹித
கோவர்தன கிரி எத்திதனம்மா
அவ தாயிகே ஈரேளு ஜக தோரித
காமனய்யா பந்தா கண்டீரேனே (அம்மா)

தன் மாமன் கம்சனைக் கொன்றவன், சகடாசுரனை வென்றவன்
(மக்களைக் காப்பதற்காக) கோவர்த்தன மலையைத் தூக்கியவன்
தன் தாய்க்கு ஈரேழு உலகத்தையும் (தன் வாயில்) காட்டியவன்
மன்மதனின் தந்தை வந்தானா பார்த்தீர்களா (அம்மா)

காலல்லி கிரு கெஜ்ஜெ நீலத பாவுலி
நீலவர்ணனு நாட்யவாடுதல்லி
மெலகி பாயல்லி ஜகவன்னு தோரித
மூருலோகதொடெயன கண்டீரேனே (அம்மா)

கால்களில் சிறு கொலுசு, நீலத்தினாலான காதணிகள்
நடனமாடியவாறு கார்வண்ணன்
தன் வாயில் உலகத்தைக் காட்டியவன்
மூன்று உலகங்களின் தலைவனை பார்த்தீர்களா (அம்மா)

ஹதினாரு சாவிர கோபியர கூடி
சதுராங்க பாகதேயன்ன ஆடுவனம்மா
மதன மோஹன ரூப எடெயல்லி கௌஸ்துப
மதுசூதன பந்தா கண்டீரேனே (அம்மா)

16,000 கோபியர்களுடன் சேர்ந்து
சதுரங்கம் விளையாடுபவன்
அழகான தோற்றம் கொண்டவன், இடையில்
கௌஸ்துபம் (என்கிற நகை) அணிந்தவன்,
மதுசூதனன் வந்தானா பார்த்தீர்களா (அம்மா)

தெட்டெச கோடி தேவருகள ஒடகூடி
ஹத்தவதாரவன்னு ஹெத்திதனம்மா
சத்யபாமப்ரிய ப்ரிய புரந்தரவிட்டலா
நித்யோத்ஸவ பந்தா கண்டீரேனே (அம்மா)

33 கோடி தேவர்கள் கூடியிருப்பார்கள்
இந்த உலகத்தில் 10 அவதாரங்கள் எடுத்தவன்
சத்யபாமையின் ப்ரியமான அந்த புரந்தர விட்டலன்
தினந்தோறும் உத்சவம் செய்து கொள்பவன்
இங்கு வந்தானா பார்த்தீர்களா (அம்மா)

**<u>உன்னைக் கண்டு தன்யனானேனே.. ஸ்ரீனிவாசா..</u>**

ஸ்ரீனிவாசனைக் கண்ட புரந்தரதாசர், அந்த ஆனந்தத்தில் பாடிய பாடல். உன்னைப் பார்த்து மிகவும் தன்யனானேன், தரிசனம் தந்ததற்கு நன்றி என்று கூறி, ஸ்ரீனிவாசனின் கருணையை வேண்டும் இன்னொரு மிகவும் புகழ் பெற்ற பாடல்.

நின்ன நோடி தன்யனாதெனோ ஹே ஸ்ரீனிவாசா (நின்ன)

உன்னைக் கண்டு தன்யனானேன் ஸ்ரீனிவாசா (நின்ன)

பக்ஷிவாஹன லக்ஷ்மி ரமணா லக்ஷ பிட்டு நோடோ
பாண்டவ பக்ஷ செல்வ தைத்ய சிக்ஷ ரக்ஷிசென்ன கமலாக்ஷ (நின்ன)

கருடனை வாகனமாகக் கொண்டவனே இலக்குமியின் கணவனே
(என்னை) அலட்சியம் செய்யாமல் பாரப்பா
பாண்டவர்களின் பக்கம் நின்றவனே கெட்டவர்களுக்கு பாடம் புகட்டுபவனே
என்னை காப்பாற்று தாமரைக் கண்ணனே (நின்ன)

தேச தேச திருகி நானு ஆச பக்தனாதே ஸ்வாமி
தாசனு நானல்லவே ஜகதீச ஸ்ரீச ஸ்ரீனிவாசா (நின்ன)

ஊர் ஊராக அலைந்து நான் (கண்டதையும் பார்த்து) ஆசைப்பட்டேன் ஸ்வாமி
உன் தாசன் ஆனேனே, ஜகதீசனே, ஸ்ரீனிவாசனே (நின்ன)

கந்து ஜனக கேளோ என்ன அந்தரங்கத ஆசெயன்னு
அந்தரவில்லத பாலிஸு ஸ்ரீகாந்த புரந்தரவிட்டலா (நின்ன)

மன்மதனின் தந்தையே என் ஆசையைக் கேளப்பா
முடிவேயில்லாமல் காப்பாற்று, ஸ்ரீகாந்தனே, புரந்தரவிட்டலனே (நின்ன)

**கலைவாணி நின் கருணை..**

புரந்தரதாசரின் இன்னொரு அழகான பாடல். பிரம்மனின் மனைவியான சரஸ்வதி தேவியை வணங்கி, அவரை நம் நாக்கில் எப்பொழுதும் இருந்து, நல்ல சொற்களை பேசவைக்குமாறு வேண்டும் பாடல்.

பாலிஸம்மா முத்து சாரதே
என்ன நாலிகே மேலே நில்ல பாரதே (பாலிஸெம்ம)

காப்பாற்று அம்மா, என்னை சாரதாதேவி
என் நாக்கின் மேல் எப்பொழுதும் நிற்கக்கூடாதா (பாலிஸெம்ம)

லோல லோசனே தாயி நிருத நம்பிதே நின்ன

கண்களில் எப்பொழுதும் கருணையைக் காட்டுபவளே,
உன்னை எக்கணமும் நம்பினேன் என்னை (பாலிஸெம்ம)

அக்ஷராக்ஷர விவேகவ நின்ன
குக்ஷியொளிரேளு லோகவனு
சாக்ஷாத்ரூபதிந்த ஒலிது ரக்ஷிசு தாயீ
நீலலோசன தாயே நிருத நம்பிதே நின்ன (பாலிஸெம்ம)

நீ சொல்லும் ஒவ்வொரு சொல்லும், ஞானம் நிறைந்தது
ஈரேழு பதினான்கு உலகமும் உன்னை வணங்குகின்றது
உன் அழகிய ரூபத்தால் எம்மை காப்பாற்று தாயே
அழகான கண்களை உடையவளே, உன்னையே நம்பினேன் என்னை (பாலிஸெம்ம)

ஸ்ருங்காரபுர நெலெவாசினி தேவி சங்கீத கான விலாசினி
மங்களகாத்ரளே பளிரே ப்ரம்மன ராணி
நீலலோசன தாயே நிருத நம்பிதே நின்ன (பாலிஸெம்ம)

அழகான ஊரில் வசிப்பவளே
பாடல்களால் வசீகரிப்பவளே
மங்களகரமானவளே, பிரம்மனின் ராணியே
அழகான கண்களை உடையவளே, உன்னையே நம்பினேன் என்னை (பாலிஸெம்ம)

சர்வாலங்கார தயா மூர்த்தி நின்ன
சரணவ ஸ்துதிசுவே கீர்த்தி
குருமூர்த்தி புரந்தரவிட்டலன்ன ஸ்துதிசுவே
நீலலோசன தாயே நிருத நம்பிதே நின்ன (பாலிஸெம்ம)

சர்வ அலங்காரங்களுடன் இருப்பவளே
கருணா மூர்த்தியே நின் சரணங்களை வணங்கிப் பாடுவேன்
நம் குருமூர்த்தியான புரந்தரவிட்டலனை
வணங்கியவுடன்,
அழகான கண்களை உடையவளே, உன்னையே நம்பினேன் என்னை (பாலிஸெம்ம)

**<u>தூக்கி விடு அல்லது மூழ்கடித்து விடு</u>**

சம்சார சாகரத்தில் மூழ்கி, என்னென்ன செய்யக் கூடாதோ அதையெல்லாம் செய்துவிட்டு, இறைவனை எள்ளளவும் நினைக்காமல் நேரத்தைக் கழித்தேனே, ஒன்று என்னை கை கொடுத்து தூக்கி விடு அல்லது ஒரேடியாக மூழ்கடித்து விடு என்று தாசர் இறைஞ்சுகிறார்.

தேளிசோ இல்லா முளுகிசோ
காலிகே பித்தேனோ பரமக்ருபாளோ (தேளிசோ)

(என்னை) தூக்கிவிடு அல்லது மூழ்கடி
(உன்) காலில் விழுந்தேன் கருணை கொண்டவனே (தேளிசோ)

சதிசுத தனதாசே எந்தெம்ப மோஹதி
ஹிததிந்த அதினொந்து பெண்டாதேனோ
கதியகொடுவவர காணே மதிய பாலிசோ லக்ஷ்மி
பதி நின்ன சரணத ஸ்மரணேயிட்டு எனகே (தேளிசோ)

மனைவி, மக்கள், செல்வம் ஆகியவற்றின் மேல் கொண்ட மோகத்தால்
உழைத்து உடல் நொந்து, துவண்டு போனேன்;
என்னைக் காப்பாற்றுபவர் யாருமில்லை; நல்ல புத்தியைக் கொடு
லக்ஷ்மிபதியே, உன் பாதங்களை எப்போதும் நினைக்கும்படி இருக்கச் செய் (தேளிசோ)

ஜரரோக தாரித்ரய கஷ்மலவ எந்தெம்ப
ஷரதியொளகே பித்து முளுகிதேனோ
ஸ்திரவல்ல ஈ தேஹவு நெரெனம்பிதெ நின்ன
கருணா பயவித்து பாலிசோ ஹரியே (தேளிசோ)

ஜுரம், வியாதி, ஏழ்மை, அசுத்தங்கள் நிறைந்த இந்த
(சம்சாரம் என்னும்) கடலில் விழுந்து மூழ்கினேனே
இந்த உடம்பு நிலையானதல்ல; உன்னையே நித்தமும் நம்பினேன்
கருணையும் எனக்கு அபயமளித்து காப்பாற்று ஹரியே (தேளிசோ)

தோஷவுள்ளவ நானு, பாஷெயுள்ளவ நீனு
மோசஹோதேனோ பக்திரசவ பிட்டு
சேஷசயன ஸ்ரீ புரந்தரவிட்டலனே
தாசர சங்கவித்து பாலிசோ ஹரியே (தேளிசோ)

குறைகள் உள்ளவன் நான், வாக்கு தவறாதவன் நீ
பக்தி மார்க்கத்தை விட்டு, மோசம் போனேனே
பாம்புப் படுக்கையைக் கொண்ட புரந்தர விட்டலனே
உன் பக்தர்களின் நட்பைக் கொடுத்து எனக்குக் கருணை காட்டு ஹரியே (தேளிசோ)

**<u>வழியைக் காட்டு கோபாலா!</u>**

ஸ்ரீ வாதிராஜர் எழுதிய பாடல். அவர் எழுதும் பாடல்களில் 'ஸ்ரீ ஹயவதன' என்னும் அவரது முத்திரை காணப்படும். இலக்குமியுடன் கூடிய ஸ்ரீ ஹயவதனன், ஞான பக்தி வைராஞத்தை அளிக்கக்கூடியவனாக இருக்கிறான்.

தாரிய தோரோ கோபாலா
வாரிஜனாபஸ்ரீ வைகுண்ட லோலா (தாரிய)

வழியைக் காட்டு கோபாலா
இலக்குமியின் தலைவனே, வைகுண்ட வாசனே (தாரிய)

சிக்கிதே பவ பாஷ தொளகே நான்
லெக்கவில்லத ஜந்துகளிகே
திக்கொப்பரில்லா எனகே, என்னா
திக்கேடிகள களெது கருணிசு எனகே (தாரிய)

வாழ்க்கை என்னும் காட்டில் மாட்டிக் கொண்டேன்
கணக்கற்ற மிருகங்களினால் (காயப் பட்டேன்)
என்னைக் காப்பாற்றுபவர் யாருமில்லை, எந்தன்
கஷ்டங்களை தீர்த்து, எனக்கு கருணை காட்டு (தாரிய)

கஜரக்ஷகனு நீனெந்து தேவா
அஜருத்ராதிகளெந்து
நிஜவாகி பொகளிதரெந்து
சுஜனர நோடய்யா பேடிதே நானெந்து (தாரிய)

கஜேந்திரனைக் காப்பாற்றியவன் நீ என்று
பிரம்மா, சிவன் முதலானோர்
உண்மையிலேயே சொன்னார்கள் (அப்படிப்பட்ட நீ)
நல்லவர்களை பாருய்யா, உன்னை வேண்டினேன் நான் (தாரிய)

வரத ஸ்ரீ ஹயவதனனே பாரை
கரெதன்ன தாரிய தோரை
பரம பக்தரொளின் யாரை செலுவ
பரபுருஷ நீனல்லதே இன் யாரை (தாரிய)

ஸ்ரீ ஹயவதனனே, இங்கு வாராய்
என்னை அழைத்து, எனக்கு நல்வழி காட்டுவாய்
உந்தன் பக்தனான எனக்கு வேறு யார் உளர்?
சிறந்த தெய்வமான உன்னைத் தவிர இங்கு யாரிடம் போய்க் கேட்பேன்? (தாரிய)

**<u>தர்மத்தின் வாழ்வுதனை..</u>**

தர்மத்தின் வாழ்வுதனை சூது கவ்வும். இறுதியில் தர்மமே வெல்லும். இந்த வாக்கியத்தின் பொருளையே இந்த முழுப்பாடலில் சொல்லியிருக்கிறார் புரந்தரதாசர்.

நமக்கு கெட்டது நினைப்பவர்கள், நம் எதிரிகள், இப்படி அனைவருக்கும் நாம் என்ன செய்ய வேண்டும்? பாடலைக் கேட்டு, விளக்கத்தைப் படித்து தெரிந்து கொள்ளுங்கள். இப்படியெல்லாம் செய்ய முடியுமா? செய்யவும் வேண்டுமா என்ற கேள்விகளுக்கு பதில்? தாசர் சொன்னபிறகு அதற்கு எதிராக ஏதேனும் சொல்ல முடியுமா? அதனால் அவர் சொன்னதேதான் பதில்.

தர்மவே ஜயவெம்ப திவ்ய மந்த்ர
மர்மவனரிது மாடலு பேகு தந்த்ர (தர்மவே)

தர்மம் வெல்லும் - இதுவே உண்மையான மந்திரம் ஆகும்
அது எப்படி என்று தெரிந்து கொள்வது சுலபமல்ல (சில வழிகளைக் கையாள வேண்டும்)

விஷவிக்கிதவகே ஷட்ரசவனுணிசலு பேகு
த்வேஷ மாடிதவன போஷிசலு பேகு
புசியாடி கெடிசுவன ஹாடி ஹரசலு பேகு
மோச மாடுவன ஹெசரு மகனிகிட பேகு (தர்மவே)

விஷம் கொடுத்தவருக்கு அறுசுவை உணவுகளையும் கொடுக்க வேண்டும்
விரோதம் செய்தவனிடம் நட்பு பாராட்ட வேண்டும்
பொய்களைச் சொல்லி (நம்மை) கெடுப்பவனை, பாடிப் புகழ்ந்து பாராட்ட வேண்டும்
மோசம் செய்பவனின் பெயரை நம் வாரிசுக்கு வைக்க வேண்டும் (தர்மவே)

ஹிந்தே நிந்திபரன்னு வந்திசுதலிரபேகு
பந்தனதொளிட்டவர பெரெய பேகு
கொந்த வைரிய மனெகே நடெது ஹோகலு பேகு
குந்தெணிசுவவர கெளெதன மாட பேகு (தர்மவே)

நம் பின் நம்மைப் பற்றி புரளி பேசுபவரை எப்போதும் வணங்கிக் கொண்டிருக்க வேண்டும்
நம்மை கைது செய்ய வைத்தவரை (பிரச்னைகளிலிருந்து) காப்பாற்ற வேண்டும்
எதிரியின் வீட்டுக்கு நடந்து சென்று (அவரிடம்) பேச வேண்டும்
நமக்கு கெட்டது நடக்கவேண்டும் என்று நினைப்பவருக்கு நல்லதே செய்ய வேண்டும் (தர்மவே)

கொண்டைது படியுவர கொண்டாடுதிர பேகு
கண்டு சஹிசதவர கரெய பேகு
புண்டரீகாக்ஷ ஸ்ரீ புரந்தர விட்டலன்ன
கொண்டாடி தான் தன்யனாக பேகு (தர்மவே)

நமக்கு துன்பம் கொடுப்பவரை, புகழ்ந்து கொண்டாட வேண்டும்
நம்மைக் கண்டு பொறாமை கொள்பவரை வீட்டுக்குக் கூப்பிட்டு (உபசரிக்க) வேண்டும்
புண்டரிகாட்சனான ஸ்ரீ புரந்தர விட்டலனை
கொண்டாடி, மகிழ்ச்சி பெற வேண்டும் (தர்மவே)

**நல்லவங்ககூட சண்டை போடலாமா?**

இன்றைய பாடலை எழுதியவர் கனகதாசர். வாழ்க்கையில் பல சமயங்களில், நாம் செய்வது சரியா தவறா என்று தெரியாமலே முழித்திருப்போம். அந்த இடங்களில் என்ன செய்யலாம் என்று தாசர் சொல்கிறார்.

மற்றவர்களைப் புகழ்ந்து பேசி, வெட்டி அரட்டை அடித்து காலத்தைக் கழிப்பதற்கு பதில், ஏதாவது ஒரு காட்டில் போய் தலைமறைவு வாழ்வு வாழலாம் என்கிறார்.

அஞ்ஞானிகளகூட அதிக ஸ்னேஹக்கிந்தா
சுஞ்ஞானிகளகூட ஜகளவே லேசு (அஞ்ஞானி)

முட்டாள்களுடன் நட்பு கொண்டாடுவதை விட
ஞானிகளுடன் கருத்து வேறுபாடு கொண்டிருப்பதே மேல் (அஞ்ஞானி)

உம்புடுவதக்கில்லத அரசனோலகக்கிந்தா
தும்பிதூரொளகே திரிதும்புவுதே லேசு
ஹம்பலிஸி ஹாள் ஹரட்டே ஒடயுவுதக்கிந்தா
ஹரி எம்ப தாசர கூட சம்பாஷணெயே லேசு (அஞ்ஞானி)

உடுக்க, உண்ண (இந்த) தேவைகளுக்காக அரசனை (புகழ்ந்து பாடி) அவனுடன் இருப்பதற்கு
மக்கள் நிறைந்த ஊரில் பிச்சை எடுத்துப் பிழைக்கலாம்
வேலையில்லாமல் அரட்டை அடித்துக் கொண்டிருப்பதைவிட
ஹரியின் தாசர்களுடன் பேசிக் கொண்டிருக்கலாம் (அஞ்ஞானி)

ஒடனே ஹங்கிசுவனு கரவ நுங்குதகிந்தா
குடிநீரு குடிதுகொண்டு இருவுதே லேசு
பிடதே பாந்தவரொடனே கடிதாடுவுதக்கிந்தா
அடவியொள் அஞ்ஞாதவாசவே லேசு (அஞ்ஞானி)

செய்யும் உதவிக்கு பிரதிபலன் எதிர்பார்ப்பவரின் கைகளில் சாப்பிடுவதற்கு பதிலாக
குடிநீர் குடித்துக்கொண்டு இருப்பதே மேல்
உறவினர்களுடன் (அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்களுடன்) சண்டை சச்சரவுடன் இருப்பதற்கு
காட்டில் அஞ்ஞாதவாசம் (யாருக்கும் தெரியாமல் ஒளிந்து) வாழ்வதே மேல் (அஞ்ஞானி)

மசெயுதிஹ மத்சரத நெரெயொளகே இருவகிந்தா
ஹசனில்லத ஹாளு குடியே லேசு
பிசஜாக்ஷ காகிநெலெ ஆதி கேசவ ராயா
வசுமதியொளு நின்ன தாசத்வவே லேசு (அஞ்ஞானி)

பொறாமையுடன் வாழ்பவர் நடுவில் இருப்பதற்கு பதிலாக
(ஆளில்லாத) பாழடைந்த கோயிலில் வசிப்பதே மேல்
தாமரைக் கண்ணனாக காகிநெலெ ஆதிகேசவனே,
நல்ல புத்தியுடன் உன் தாசனாக இருப்பதே மேல் (அஞ்ஞானி)

**பஜிஸி பதுகெலோ மானவா**

கனகதாசர். புரந்தரதாசரின் சமகாலத்தவர். பிராமண குலத்தில் பிறக்காத காரணத்தினால், உடுப்பி கிருஷ்ணன் கோயிலுக்குள் வர அனுமதி மறுக்கப்பட்டவர். ஆனால், கண்ணன் மேல் இருந்த இடையறா பக்தியினால், 'ஆதிகேசவன்' என்னும் தன் அங்கிதம் (signature) கொண்டு எண்ணற்ற பாடல்களைப் பாடியவர்.

இவரது பக்தியைக் கண்டு, ஸ்ரீவியாசராயர் இவருக்கு ஆசி புரிந்தார். தன் சீடனாகவும் ஏற்றுக் கொண்டார். கனகதாசரின் ஒரு பாடலை இன்று பார்ப்போம்.

இறைவனின் பாதத்தைப் பற்றிக் கொண்டு, அவன் புகழைப் பாடி வந்தால், மறுபிறவி இல்லாமல் முக்தி அடையலாம் என்ற கருத்தைக் கொண்ட பாடல்.

***

பஜிஸி பதுகெலோ மானவா
அஜபவேந்திராதிகள வந்திசுவ பாதவனு (பஜிஸி)

புகழ்த்து பாடி பிழைத்துக் கொள் மனிதனே
பிரம்மன் & இந்திரன் முதலான தேவர்கள் வணங்கும் பாதத்தை (பஜிஸி)

பாகசாசன கொலிது பலிய மெட்டித பாத
காகு ஷகடன துளிது கொந்த பாத
லோகேஷனிகே ஒலிது பூஜெகொம்புவ பாத
லோக பாவன கங்கே ஜனிசித பாத (பஜிஸி)

இந்திரனுக்கு அருள் புரியும்; பலியை மிதித்த பாதம்
ஷகடாசுரனை மிதித்துக் கொன்ற பாதம்
சிவனுக்கு அருள் புரிந்து, அவரால் பூஜை செய்துக் கொள்ளப்படும் பாதம்
உலகத்தைக் காக்கும் கங்கையை உயிர்ப்பித்த பாதம் (பஜிஸி)

கல்லாத அஹல்யேய சுத்த மாடித பாத
ஒலிது பார்த்தன ரதவ தூளித பாத
கலி துரியோதனன கௌகே அடகிசித பாத
பலத காளிங்கன ஹெடெய துளித பாத (பஜிஸி)

கல்லாகி இருந்த அகல்யையை உயிர்ப்பித்த பாதம்
அர்ச்சுனனின் ரதத்தை (மிதித்து) அலங்கரித்த பாதம்
கலி ஆவேசமான துரியோதனனை கீழே தள்ளி அடக்கிய பாதம்
காளிங்கனின் தலை மேல் நடனமாடிய பாதம் (பஜிஸி)

கருட சேஷாதிகளு ஹொத்து திருகுவ பாத
தரெய ஈரடி மாடி அளெத பாத
சிரி தன்ன தொடெய மேலே இத்து ஒட்டுவ பாத
சிரிகாகினெலெ ஆதிகேசவன பாதவ (பஜிஸி)

கருடன் சேஷன் ஆகியவர்கள் தூக்கிக் கொண்டு திரியும் பாதம்
தன் இரண்டு அடிகளால் உலகை அளந்த பாதம்
இலக்குமி தன் தொடை மேல் வைத்து பூஜை செய்யும் பாதம்
காகினெலெ ஆதிகேசவனின் பாதத்தை (பஜிஸி)

**தாசரின் வீட்டைக் காப்பேன்**

கனகதாசரின் இன்னொரு அற்புதமான பாடல். ஸ்ரீகிருஷ்ணனைப் போற்றி, பாடி அவன் கோயிலில் வேலை செய்து கொண்டிருப்பது மட்டுமல்லாமல், அவனைப் புகழ்ந்து பூசிக்கும் பக்தர்களின் வீட்டிலும் பல வேலைகளைச் செய்வேன். காசே இல்லாமல் அவர்களுக்கு பல வகைகளில் உதவியாக இருப்பேன் என்று பாடுகிறார்.

***

பண்டனாகி பாகிலு காயுவே நா
வைகுண்ட ஸ்ரீ ஹரிய தாசர மனெயா (பண்டனாகி)

ஒரு வேலைக்காரனாய், (வீட்டை) காவல் காப்பேன், நான்
வைகுண்டபதியான ஸ்ரீஹரியின் பக்தர்களின் வீட்டை (பண்டனாகி)

ஹொரெசுத்து பிரகார சுத்தி நா பருவே
பருவ ஹோகுவர விசாரிசித்திருவே
கரெதி கம்பிய பொத்து திருகுத இருவே
ஸ்ரீ ஹரிய சன்முகத ஒலகதல்லிருவே (பண்டனாகி)

வீட்டைச் சுற்றிச்சுற்றி வருவேன்
வீட்டுக்கு வருபவர் போகுபரை விசாரித்தே அனுப்புவேன்
இரும்புக் கம்பியைப் பிடித்தவாறே சுற்றி வருவேன்
ஸ்ரீஹரியின் திருமுகம் எப்போதும் தெரியுமாறு அங்கேயே இருப்பேன் (பண்டனாகி)

வேளே வேளேகே நான் ஊளிகே மாடுவே
ஆள கொண்டிகே சாமராவ பீசுவே
தாள மத்தள பிருங்கி மேளகிந்தள கூடி
ஸ்ரீ லோலன பாத கொண்டாடுத்தலிருவே (பண்டனாகி)

வேளா வேளைக்கு கொடுத்த வேலைகளைச் செய்வேன்
தேவைப்படும்போது சாமரம் வீசுவேன்
மத்தளம், மேளம் ஆகியவை கொண்டு தாளத்துடன்
ஸ்ரீபதியின் பாதங்களைப் பற்றி பாடிக் கொண்டிருப்பேன் (பண்டனாகி)

மீசலு ஊளிகே மாடிகொண்டிருவே
சேஷ பிரசாதவ உண்டு கொண்டிருவே
சேஷகிரி காகிநெலெ ஆதிகேசவன
தாசர தாசர தாசர மனெயா (பண்டனாகி)

சொல்லப்படும் வேலைகளைச் செய்து வருவேன்
மீந்து போகும் பிரசாதங்களை உண்டு வருவேன்
சேஷகிரி காகிநெலெ ஆதிகேசவனின்
பக்தரின் பக்தரின் பக்தரின் வீட்டை (பண்டனாகி)

**அந்த நிலவு வேண்டும்**

ஸ்ரீராமன் குழந்தையாக இருந்தபோது ஒரு நிகழ்ச்சி. தான் விளையாட அந்த நிலவு வேண்டுமென்று குழந்தை அழுததாகவும், அப்போது தசரதன், கௌசல்யா மற்றும் மந்திரிகள் எப்படி ஆறுதல் கூறினார்கள் என்று விவரிக்கும் நிகழ்ச்சியை அப்படியே ஒரு அழகான பாடலில் பாடியிருக்கிறார் கனகதாசர்.

***

அங்கனதொளு ராமனாடித சந்திர பேகெந்து தான் ஹடமாடிதா

தன் வீட்டு முற்றத்தில் ராமன் ஆடினான்
அந்த நிலவு வேண்டும் என்று அடம் பிடித்தான் (அங்கனதொளு)

தாயிய கரெது கை மாடி தோரிதா முகில கடெகொம்மெ திட்டிசி நோடிதா
சின்னி கோலு சண்டு புகுரி எல்லவ பேடா பேடா எந்து தான் பிசாடிதா (அங்கனதொளு)

தன் தாயைக் கூப்பிட்டு (நிலவைக்) காட்டினான்
மேகங்களின் நடுவில் இருக்கும் நிலவைப் பார்த்தான்
தன் விளையாட்டுப் பொருட்கள் எதையும் வேண்டாம் என்றான்
அவற்றைத் தூக்கிப் போட்டான் (அங்கனதொளு)

கந்தா பா எந்து தாயி கரெதளு மம்மு உண்ணு எந்து பன்னிசுத்தித்தளு
தாயி கௌசல்யா களவள கொண்டளு கந்தா அஞ்சிதனு என்னுத்தித்தளு (அங்கனதொளு)

மகனே, வருவாய் என்று தாய் கூப்பிட்டாள்
சாப்பாடு சாப்பிடு என்று வேண்டிக் கொண்டாள்
தாய் கௌசல்யா கவலைப் பட்டாள்
குழந்தை (எதையோ பார்த்து) பயந்திருக்கிறது என்று கூறினாள் (அங்கனதொளு)

அளுவ த்வனி கேளி ராஜனு மந்திரி சஹிதாகி தாவிசி பந்தனு
நிலுவ கண்ணாடி தந்திசித ஸ்ரீ ராமன எத்தி முத்தாடித (அங்கனதொளு)

குழந்தை அழும் சத்தம் கேட்டு தசரதன்
தன் மந்திரி சகிதமாக ஓடி வந்தான்
ஒரு நிலைக் கண்ணாடி கொண்டு வந்து காட்டினான்
ஸ்ரீ ராமனை தூக்கிக் கொஞ்சினான் (அங்கனதொளு)

கண்ணாடியொளு பிம்ப நோடித சந்திர சிக்கிதானெந்து குணிதாடிதா
சம்ப்ரம நோடி ஆதி கேசவ ரகு வம்சவன்னே கொண்டாடிதா (அங்கனதொளு)

அந்த கண்ணாடியில் நிலவைப் பார்த்து
நிலவே பக்கத்தில் வந்ததென்று ஆனந்தப்பட்டான் இராமன்
இந்த நிகழ்ச்சியைப் பார்த்த காகிநெலெ ஆதிகேசவன்
ரகு வம்சம் மொத்தத்தையுமே ஆசிர்வதித்தான் (அங்கனதொளு)

**என்ன சொல்லிப் பாடுவேன்?**

கனகதாசருக்கு இன்னொரு சிறப்புப் பெயர் ‘முண்டிக தாசரு (Mundige)'. இவரது பாடல்களை சாதாரணமாகப் படித்தால் ஒரு பொருளும், சொற்களில் இருக்கும் குறியீடுகளைப் பிரித்துப் படித்தால் பல்வேறு அர்த்தங்களும் தெரியும். அதற்கே இவருக்கு அப்படி பெயர்.

இன்றைய பாடல் அப்படியில்லாமல், நேரடியாக, எளிமையாக பொருள் கொள்ளக்கூடிய பாடல். தன்னை தாழ்த்திக் கொண்டு, இறைவனின் பல்வேறு குணங்களை பாடும் பாடல்.

***

ஏனெந்து கொண்டாடி ஸ்துதிசலோ தேவா
நானேனு பல்லே நிம்ம மகிமே மாதவா (ஏனெந்து)

என்னவென்று சொல்லி உன்னைப் பாடுவேன் தேவா
எனக்கென்ன தெரியும் உன் மகிமையைப் பற்றி மாதவா (ஏனெந்து)

ஹரி முகுந்தனு நீனு நரஜன்ம ஹுளு நானு
பரமாத்மா நீனு பாமரனு நானு
கருடகமனனு நீனு மருளு பாபியு நானு
பரஞ்சோதி நீனு திருகனு நானு (ஏனெந்து)

ஹரி & முகுந்தன் நீ; மனித ஜென்மம் எடுத்து (சம்சாரத்தில் மூழ்கி) புழுவாய் இருப்பவன் நான்
அனைவருக்கும் கடவுள் நீ; எதுவுமே தெரியாதவன் நான்
கருட வாகனத்தில் பறப்பவன் நீ; பாவம் மட்டுமே செய்பவன் நான்
ஒளி ரூபமாய் இருப்பவன் நீ; சும்மா சுற்றித் திரிபவன் நான் (ஏனெந்து)

வாரிதிசயனனாத காருண்யபதி நீனு
கோரதிந்திஹ காமி க்ரோதி நானு
ஈரேளு புவனதொளு இருவ மூர்த்தி நீனு
தூரி நின்னனு பய்யுவ துஷ்ட நானு (ஏனெந்து)

பாற்கடலில் படுத்திருக்கும், மிக்க கருணை மிக்கவன் நீ
காமம் குரோதம் இவற்றில் மூழ்கியிருப்பவன் நான்
ஈரேழு உலகத்திலும் இருப்பவன் நீ
எப்பொழுதும் உன்னைத் திட்டிக் கொண்டே இருப்பவன் நான் (ஏனெந்து)

அணுரேணு த்ருணகளல்லி பரிபூர்ண நீனு
க்ஷண க்ஷணக்கே அணுகுணத கர்மி நீனு
வாணியரசன பெத்த வைகுண்டபதி நீனு
தனு நித்யவல்லத கொம்பே நானு (ஏனெந்து)

ஒவ்வொரு அணு, துகள்களிலும் பரிபூர்ணனாக இருப்பவன் நீ
ஒவ்வொரு நொடியிலும் குணங்களை மாற்றுபவன் நான்
சரஸ்வதியின் கணவரான பிரம்மனின் தந்தை, வைகுண்டத்தில் வசிப்பவன் நீ
நிலையில்லாத இந்த சரீரத்தைக் கொண்டவன் நான் (ஏனெந்து)

கம்பதலி பந்த ஆனந்தமூர்த்தி நீனு
நம்பிகேயில்லத ப்ரபஞ்சகனு நானு
அம்பரீசனிகே ஒலித அக்ரூரசக நீனு

டம்பகர்மியு நானு நிர்ஜிதனு நீனு (ஏனெந்து)

தூணிலிருந்து வந்த ஆனந்தமே உருவானவன் நீ
எதன்/யார் மீதும் நம்பிக்கையில்லாமல் இருக்கும் மனிதன் நான்
அம்பரீசனை காப்பாற்றிய - அக்ரூரரின் நண்பன் நீ
தற்பெருமை கொண்டவன் நான் - உலகத்தை வென்றவன் நீ (ஏனெந்து)

திருப்பதிய வாசா வெங்கடேச நீனு
ஸ்மரிசி நின்னய நாம பதுகுவவ நானு
பிரிதுள்ளவ நீனு மொரெஹொக்கவ நானு
ஸ்ரீகாகிநெலெ ஆதிகேசவனு நீனு (ஏனெந்து)

திருப்பதியில் இருக்கும் வெங்கடேன் நீ
உன்னையே எப்போதும் நினைத்து வணங்குபவன் நான்
பல பெருமைகளைக் கொண்டவன் நீ; உன் கருணையை வேண்டுபவன் நான்
ஸ்ரீ காகிநெலெ ஆதிகேசவன் நீ (ஏனெந்து)

இந்த தற்காலிகமான வாழ்க்கையில்...

இந்த வாழ்க்கை தற்காலிகமானது. இதில் கிடைக்கும் சுகங்கள் தற்காலிகமானவை. எப்போது யாருக்கு மரணம் வரும் என்பது யாரும் அறியாதது. அப்படி நிலையில்லாத வாழ்க்கையில் என்ன செய்ய வேண்டும் - என்ன செய்யக்கூடாது என்று புரந்தரதாசர் விளக்குகிறார்.

அந்தகன தூதரிகே கிஞ்சித்து தயவில்லா
சிந்தெயனு பிட்டு ஸ்ரீஹரிய நெனெயோ (அந்தகன)

யம தூதர்களுக்கும் கொஞ்சம்கூட ஈவு இரக்கம் கிடையாது
ஆகவே (அவர்களைப் பற்றிய) கவலையைவிட்டு நீ ஸ்ரீஹரியை நினை (அந்தகன)

தினராத்ரி என்னதலெ விஷயலம்படனாகி
சவியூடகள உண்டு ப்ரமிசபேடா
அவன கொந்திவன கொந்தர்த்தவனு களிசுவரெ
யமன தூதரு பருவ ஹொத்த நீனரியே (அந்தகன)

நாள்தோறும் இந்த உலக விஷயங்களில் (சபலப்பட்டு) ஏமாறாமல்
சுவையான உணவினை உண்டு (அனுபவித்து), அதில் மூழ்காதே
அவை (சபலங்கள்) அனைவரையும் கொன்று, அப்படிக் கொல்வதில் ஆனந்தப்படும்
யமதூதர்கள் வரும் வேளை நீ அறியமாட்டாய் (அந்தகன)

ஹொஸ மனெய கட்டிதேனு
க்ருஹ ஷாந்தி மனெயொளகெ
பசிரி ஹெண்டத்தி மகன மதுவே நாளே
ஹசனாகிதே பதுகு சாயலாரெனு எனலு
குசுரிதரியதே பிடரு யமனபடரு (அந்தகன)

புதிய வீடு கட்டியிருக்கிறேன்
அதற்கான கிருகப்பிரவேசம் நாளை
மனைவி கர்ப்பிணி; மகனுக்கு நாளை திருமணம்
இப்போ என் வாழ்க்கை மிகவும் இனிமையாக உள்ளது - நான் சாகவே மாட்டேன்
எதுவும் அறியாத மனிதர் இப்படி சொல்லலாம் - ஆனால் யமதூதர்கள் விடமாட்டார்கள் (அந்தகன)

புத்ர ஹுட்டித திவச ஹாலு ஊடத ஹப்ப
மத்தொப்ப மகன உபநயன நாளே
அர்த்தியாகிதே பதுகு சாயலாரெனு எனலு
ம்ருத்யு ஹெடதலெயெல்லி நகுதிர்பளு (அந்தகன)

இன்று என் மகனின் பிறந்த நாள்; பாயசம் சாப்பிடும் நாள் (பண்டிகை)
இன்னொரு மகனின் உபநயனம் நாளை
வாழ்க்கையில் இன்னும் (அனுபவிக்க வேண்டியது நிறைய) இருக்கிறது - அது வரை நான் சாகமாட்டேன்
சாவின் நிழலில் இப்படி சொல்வதைக் கேட்டு, அவன் (இறைவன் / எமன்) சிரிக்கிறான் (அந்தகன)

அட்டடிகே உணலில்லா இஷ்ட தருஷனவில்லா
கொட்ட சாலவ கேள்வ ஹொத்தனரியே
கத்ளே தும்பித மேலே க்ஷணமாத்ர இரலில்லா
அஷ்டரொளு புரந்தரவிட்டல நெனெ மனவே (அந்தகன)

இன்னும் பிடித்த உணவை உண்ணவில்லை; போக நினைத்த ஊருக்குப் போகவில்லை
கொடுத்த கடனை (இந்தப் பிறப்பை) திருப்பிக் கேட்கும் நேரம் எப்போதென்று தெரியாது
(மரணம் என்னும்) இருள் சூழும் நேரத்தில் எதற்கும் நேரம் இருக்காது
அத்தகைய நேரம் வருவதற்குள் புரந்தரவிட்டலனை நினைத்துவிடு மனமே (அந்தகன)

**எதைக் கண்டு மயங்கினாய்?**

நிந்தா ஸ்துதி: இறைவனின் சிறப்புகளை நேரடியாகப் பாடுவது போல்; அவனை திட்டுவது போல் திட்டி, அவனின் சிறப்புகளைப் பாடுவது - நிந்தா ஸ்துதி எனப்படும். பல தாசர்கள் இந்த மாதிரி பல பாடல்களைப் பாடியுள்ளனர். இன்றைய பாடலும் - புரந்தரதாசர் பாடிய, நிந்தா ஸ்துதியே ஆகும்.

இந்தப் பாடல், இறைவனின் மனைவி இலக்குமி தேவியைப் பார்த்து - நீ ஏன் இந்த இறைவனை - ஸ்ரீமன் நாராயணனை - திருமணம் செய்து கொண்டாய்? அவனிடம் அப்படி என்ன சிறப்பு இருக்கிறது? எனக் கேட்டு - நாராயணனின் பத்து (முக்கிய) அவதாரங்களைப் பற்றியும் பாடுகிறார். அப்படிப் பாடும்போது, அந்த அவதாரங்களைப் பற்றி திட்டுவதைப் போல் சொற்களைப் பயன்படுத்திப் பாடுகிறார்.

அந்தந்த அவதாரங்களின் பெயர்களும் கீழே பொருளை விளக்கும் வரிகளில் கொடுக்கப்பட்டுள்ளன.

ஏனு மெச்சிதே ஹெண்ணெ ஏனு மருளாதே

(ஸ்ரீமன் நாராயணனிடத்தில்) எதைக் கண்டு நீ புகழ்ந்தாய் பெண்ணே,
எதனால் மயங்கினாய் (ஏனு)

நோடதி செலுவனிவ னெம்பனே சஞ்சல
மாடதி செலுவ நெம்பனெ பென்னு முகுடு
கூடதந்த ஹல்லு மொளதுத்தத மோரே
பூடகதனதி பாயி தெரெது அஞ்சிபகே (ஏனு)

மத்ஸ்யம் -> பார்ப்பதற்கு அழகாய் இருக்கிறானோ? ஓரிடத்தில் நிற்காமல் ஓடிக்கொண்டிருப்பவன்
கூர்மம் -> பேசும் பேச்சு அழகாய் இருக்கிறதோ? முதுகில் இவ்வளவு பெரிய மேடு இருப்பவன்
வராகம் -> பெரிய பல்லுடன்; முழ நீளத்தில் முகம் கொண்டவன்
நரசிம்மம் -> பயங்கரமான முகத்தைக் காட்டி பயமுறுத்துபவன் (ஏனு)

அணுரூபதவனிவ நிலுவுள்ள நரனல்லா
பனவதரிவவனந்தே கையல்லி கொடலி
மனுஜரனு தாபிட்டு கபிகளனு கூடுவ
மனெமனெயனு பொக்கு கத்து திம்புவகே (ஏனு)

வாமனன் -> ஒரு சமயத்தில் சிறுவன்; ஒரு சமயத்தில் மிகப் பெரியவன்; ஒரு நிலையில் நிற்கும் மானிடன் அல்லவே?
பார்கவ -> வனத்தை வெட்டி அழிக்கப்போவதுபோல் கைகளில் கோடரியுடன் சுற்றுபவன்
ராமன் -> (தன் உதவிக்கு) மனிதர்களை விட்டுவிட்டு, குரங்குகளைக் கூப்பிட்டவன்
கிருஷ்ணன் -> வீடுவீடாகப் போய் திருடித் தின்பவன் (ஏனு)

கம்பீர புருஷனிவ எம்பனே திகம்பர
அம்பரதொளகெ குதுரெயனு குணிஸுவ
அம்புஜாக்ஷ ஸ்ரீ புரந்தர விட்டலன
சம்ப்ரமதி நீ மெச்சி மதுவெயாத்யல்லே (ஏனு)

பௌத்த -> கம்பீரமாக இருக்கிறான் என்று சொல்லாமோ? திகம்பரமாக (அம்மணமாக) இருப்பவன்

கல்கி -> வானத்தில் குதிரையுடன் ஏறுபவன்
தாமரைக் கண்ணனான ஶ்ரீ புரந்தரவிட்டலனை
மிகவும் மகிழ்ந்து, காதலித்து நீ திருமணம் செய்துகொண்டாயே (ஏனு)

**<u>மடி மடி மடி என்றால் என்ன?</u>**

மடி (ஆசாரம்) அப்படியென்றால் என்ன? வெறும்னே ஈரத்துணியை அணிந்துகொள்வதா? செய்ய வேண்டிய கடமைகளை செய்யாமல், மடி மடி என்று சொல்லிக் கொண்டிருந்தால் அது சரியா?

எதையும் தொடாமல் பூஜை செய்யவேண்டும் என்று துவங்கி, எதையாவது தொட்டு விடுவோமோ - எதாவது நம் மீது பட்டுவிடுமோ என்பதிலேயே கவனம் செலுத்தி, பூஜை செய்வதையே மறந்து - இப்படிதான் பலரும் (ஆசாரம் செய்பவர்கள்) இன்று.

இது பற்றி இன்றைக்கு நாம் எதிர்கொள்ளும் கேள்விகளுக்கு அன்றே புரந்தரதாசர் விடை அளித்துவிட்டார். இன்றைய பாடலில் பார்ப்போம். நிஜமான மடி என்றால் என்ன என்று தெரிந்து, அதன்படி நடப்போம்.

***

மடிமடிமடி எந்து அடிகடிஹாருவே
மடி மாடுவே பகே பேருண்டு
பொடவி பாலகன பாத த்யானவனு
பிடதே பாடுவுது அது மடியு (மடி)

மடிமடிமடி என்று அடிக்கடி சொல்வார்கள்
மடி செய்வதற்கு வேறு வழி உண்டு
ஓடி விளையாடும் சிறுவனின் (ஸ்ரீகிருஷ்ணனின்) திருவடிகளை
விடாமல் நினைத்து, அதைப்பற்றி பாடுவதே நிஜமான மடியாகும் (மடி)

பட்டெய நீருளகத்தி ஒணகிஸி
உட்டுகொண்டரே அது மடியல்லா
ஒட்டெயொளகின காம க்ரோத
மத மத்ஸர பிட்டு நடெதரே அது மடியு (மடி)

(கட்டிக்கொள்ளும்) ஆடையை நீரில் நனைத்து, காய வைத்து
அணிந்து கொண்டால், அது மடியல்ல
நம் உடம்பில் இருக்கும் காமம், குரோதம் (கோபம்)
மதம் (கர்வம்), மத்ஸரம் (பொறாமை) ஆகியவற்றை விட்டுவிட்டாலே அது மடிதான் (மடி)

தசமி த்வாதசி புண்ய தினதலி
வசுதேவ சுதனனு பூஜிசதே
தோஷகே அஞ்சதே பரரனு புஞ்சிசதே
யம பாஷக்கே சிலுகுவுது அது மடியே (மடி)

தசமி, த்வாதசி மற்றும் இதர புண்ய தினங்களில்
ஸ்ரீகிருஷ்ணனை பூஜிக்காமல்
எந்தவித பாவங்களும் அஞ்சாமல், அன்னதானம் செய்யாமல்
(இறுதியில்) யமதூதர்களிடம் சிக்குவது - இது மடியா? இல்லை (மடி)

ஹிரியர குருகள ஹரிதாசருகள
சரணகெரகி பலு ஹரிபக்தியலி
பாலிசு எந்து புரந்தரவிட்டலன
இருளு ஹகலு ஸ்மரிசுவுது அது மடியு (மடி)

சான்றோர்களின் குருவின் ஹரிதாசர்களின்

பாதங்களை வணங்கி - எனக்கு ஹரிபக்தி வருவதற்கு
உதவி செய்யுங்கள் என்று - புரந்தரவிட்டலனை
எந்நேரமும் நினைத்துக் கொள்வது - இதுதான் மடியாகும் (மடி)

**<u>உலகத்தில் யார் சிறந்தவர்?</u>**

கர்னாடக ஹரிதாசர்கள் - ஸ்ரீமத்வாச்சாரியர் தோற்றுவித்த த்வைத சித்தாந்தத்தைச் சேர்ந்தவர்கள். அந்த சித்தாந்தத்தின் சிறப்புகளை - சமஸ்கிருதத்தில் இருந்த தத்துவங்களை - எளிய கன்னடத்தில் மொழிபெயர்த்து அனைவருக்கும் புரியுமாறு பாடியவர்கள்.

த்வைத சித்தாந்தத்தின் முதல் தத்துவம் - ஹரி சர்வோத்தமன். ஸ்ரீஹரியே அனைவரைவிட உயர்ந்தவன். இந்த தத்துவத்தை வைத்தே பற்பல பாடல்களை தாசர்கள் பாடியுள்ளனர். அந்த ஸ்ரீஹரியின் சிறப்புகளை புரந்தரதாசர் விளக்குவது போல் பாடி, தத்துவத்தை நமக்குப் புரிய வைப்பதே இன்றைய பாடல்.

***

ஈ பரிய சொபகாவ தேவரலி நா காணே
கோபி ஜனப்ரிய கோபாலகல்லதே (ஈ பரிய)

இந்த (கீழ்க்கண்ட) சிறப்புகளை வேறு எந்த தேவரிடத்திலும் நான் கண்டதில்லை;
கோபியர்களின் மனங்களைக் கவர்ந்த கோபாலனைத் தவிர (ஈ பரிய)

தொரெயதனதலி நோடே தரணிதேவிகே ரமணா
சிரியதனதலி நோடே ஸ்ரீகாந்தனு
ஹிரியதனதலி நோடே சரசிஜோத்பவனய்யா
குருவுதனதலி நோடே ஜகதாதி குருவு (ஈ பரிய)

முதலாளிகளில் யார் பெரிய முதலாளி என்று பார்த்தால் இவர் உலகத்திற்கே முதலாளி
செல்வந்தர்களில் யார் பெரிய செல்வந்தர் என்று பார்த்தால் இவர் இலக்குமிக்கே கணவன்
மூத்தவர்களில் யார் மூத்தவர் என்று பார்த்தால் இவர் பிரம்மாவிற்கே தந்தை
ஆசான்களில் யார் பெரிய ஆசான் என்று பார்த்தால் இவர் உலகத்திற்கே ஆசான் (ஈ பரிய)

பாவனத்வதி நோடே அமர கங்கா ஜனக
தேவத்வததி நோடே திவிஜரொடெயா
லாவண்யதலி நோடே லோகமோஹகனய்யா
ஆவ தைர்யதி நோடே அசுராந்தகா (ஈ பரிய)

புனிதர்களில் யார் மிகப் புனிதர் என்று பார்த்தால் இவர் புனிதமான கங்கையின் தந்தை
தேவர்களில் யார் பெரியவர் என்று பார்த்தால் இவர் தேவாதி தேவர்
அழகானவர்களில் யார் சிறந்தவர் என்று பார்த்தால், இவர் உலகத்தையே மயக்குபவர்
தைரியமானவர்களில் யார் மேலானவர் என்று பார்த்தால், இவர் பல அசுரர்களையே வென்றவர்

ககனதலி சஞ்சரிப கருட தேவனே துரக
ஜகதீதரசேஷ பரியங்க சயன
நிகம கோசர புரந்தர விட்டலகல்லதே
மிகிலாத தைவகளிகே ஈ பாக்யவுண்டே (ஈ பரிய)

வானத்திலேயே பறக்கும் கருட தேவனே இவனது வாகனம்
சேஷமே இவனது வாகனம்

வேதங்களில் பாடப்பட்டிருக்கும் இந்த புரந்தரவிட்டலனைத் தவிர
(மேலே சொன்ன) இந்த தகுதிகள் வேறு யாருக்கு உண்டு? யாருக்கும் இல்லை (ஈ பரிய)

***

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

***